# கல்வெட்டியல்



ஆசிரியர்கள்

முனைவர் இரா. நாகசாமி
நடன. காசிநாதன்
கு. தாமோதரன்
ச. ஹரிஹரன்

# கல்வெட்டியல்

(தொல்லெழுத்தியலும், கல்வெட்டியலும்)

ஆசிரியர்கள்

**முனைவர் இரா. நாகசாமி**

**நடன. காசிநாதன்**

**கு. தாமோதரன்**

**ச. ஹரிஹரன்**

பொதுப்பதிப்பாசிரியர்

**முனைவர் தி. ஸ்ரீ. ஸ்ரீதர், இ.ஆ.ப.,**

முதன்மைச் செயலாளர் (ம) ஆணையர்

வெளியீடு

**தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை**

**2010 - திருவள்ளுவர் ஆண்டு 2041**

முதற் பதிப்பு. 1972
மறுபதிப்பு. 2010 - திருவள்ளுவர் ஆண்டு 2041
தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை
வெளியீடு எண். 20
பிரதிகள் : 1000



ஆசிரியர்கள்
முனைவர் இரா. நாகசாமி
நடன. காசிநாதன்
கு. தாமோதரன்
ச. ஹரிஹரன்

பொதுப்பதிப்பாசிரியர்
முனைவர் தி. ஸ்ரீ. ஸ்ரீதர், இஆப,

விலை ரூ. 40.00

அச்சிட்டோர்
சென்னை அச்சக தொழிற் கூட்டுறவு சங்கம், லிமிடெட்.,
6, பைகிராப்ட்ஸ் சாலை, திருவல்லிக்கேணி,
சென்னை-600 005

<u>அட்டைப்படம்</u>

முதலாம் இராசராசனின் ஆனைமலைச் செப்பேடு, லெய்டன் அருங்காட்சியகத்தில் உள்ளது.

# முன்னுரை

இந்நூல் தொல்லெழுத்தியல் என்றும், கல்வெட்டியல் என்றும் இரண்டு பகுதிகளாகப் பிரிக்கப்படுகிறது. முதல் பகுதியில் தொன்றுதொட்டு தமிழகத்தில் எழுத்துகள் வளர்ந்த விதத்தையும், அடைந்த மாற்றங்களையும் சுருக்கமாக எடுத்துரைப்பதுடன் எழுத்துகளின் வளர்ச்சி பற்றி தொல்லெழுத்து வல்லுநர்களின் கருத்துக்களும் குறிக்கப்பட்டுள்ளன. தமிழி எழுத்து, தமிழ் எழுத்து, வட்டெழுத்து, நாகரி, கிரந்த எழுத்துகள் அடைந்த வளர்ச்சிகள் இதில் சுருக்கமாகக் கொடுக்கப்பட்டுள்ளன. கல்வெட்டியல் என்ற இரண்டாம் பகுதியில் தமிழ் நாட்டுக் கல்வெட்டுகளிலுள்ள செய்திகள் சுருக்கமாக எழுதப்பட்டுள்ளன. குன்றுகளில் உள்ள குகைகளில் காணப்படும் பண்டைத் தமிழ்க் கல்வெட்டுகள் இதுகாறும் ஆங்கிலத்திலேயே வெளியிடப்பட்டுள்ளன. அதனால் இப்பொழுது அவை முழுமையாக இங்கே தமிழில் கொடுக்கப்பட்டுள்ளன.

இங்கு தமிழி என்று குறிக்கப்படுவதிலுள்ள 'ழ' கரம் 'ழ'வுக்கும் 'ள'வுக்கும் இடைப்பட்ட ஒரு ஒலியாகும். தமிழ் 'ழ' கரத்தைப் பிராகிருத மொழி பேசியவர்கள் அவ்வாறு ஒலித்ததால் இப்பெயர் பெற்றது. இக்கல்வெட்டுகளை முன்னர் பலர் படித்துள்ளனர். இவை அனைத்திலும் அண்மையில் திரு. ஐ. மாகதேவன் அவர்கள் வாசித்தளித்ததே சிறந்த முயற்சியாகும். ஆதலின் அவர்கள் கருத்தை ஒட்டியே இங்கு இக்கல்வெட்டுகள் படிக்கப்பட்டுள்ளன. ஒரு சில இடங்களில் அவர் வாசித்தளித்ததிலிருந்து சிறிது வேறுபட்ட கருத்தும் குறிக்கப்பட்டுள்ளது. இவை தவிர கொற்கை, உறையூர், காஞ்சி, அரிக்கமேடு முதலிய இடங்களில் நடந்த அகழ்வாய்விலும் இவ்வெழுத்துகள் உள்ள பானை ஓடுகள் கிடைத்துள்ளன. மேலும் அரிட்டாபட்டியில் புதியதாக ஒரு குகைத்தளக் கல்வெட்டு கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. இவை விரிவாக எழுதப்பட்டும் நூலில் இணைத்துக் கொள்ளப்படும்.

தமிழ்க் கல்வெட்டுகள் பல்லவர் காலத்தும், பாண்டியர் காலத்தும், சோழப் பேரரசர் காலத்தும், விஜயநகர காலத்தும், எவ்வாறு விளங்கின என்பது கொடுக்கப்பட்டுள்ளது. நூலின் இறுதியில் நடுகற்களைப் பற்றிய இலக்கணம், இலக்கியம், கிடைத்துள்ள கற்கள் ஆகியவை கொடுக்கப்பட்டுள்ளது.

இவற்றை இத்துறையின் கல்வெட்டாய்வாளர்கள் திரு. நடன. காசிநாதன், திரு. கு. தாமோதரன், திரு. ச. ஹரிஹரன் ஆகியோரும் யானும் எழுதியுள்ளோம். இது தமிழகக் கல்வெட்டுகளைப் பற்றி அறிய விரும்புவோர்களுக்கு உதவியாய் இருக்கும் என நம்புகிறேன். இந்நூலைத் தமிழகம் ஏற்று மேலும் இப்பணியில் ஊக்குவிக்கும் என எண்ணுகிறேன்.

**இரா. நாகசாமி**

இயக்குநர் (பணி நிறைவு)

# பதிப்புரை

கல்வெட்டு, காலத்தின் கண்ணாடி போன்றது. கல்வெட்டுகள் ஒவ்வொரு காலத்திலும் நடந்த சமூக மாற்றங்கள், சமய வாழ்க்கை, அரசியல் எழுச்சி, நீதி பரிபாலனம், பொருளாதாரம், எலவை, உகவை, (துயரும், மகிழ்ச்சியும்) சமூக ஒப்பந்தங்கள், வரிவிதிப்பு எனப் பல்வேறு துறைகளைப் பற்றிய செய்திகளைத் தாங்கி நிற்பவை. சில கல்வெட்டுகள் செய்யுள் வடிவிலும் அமைந்துள்ளன. வட்டார வழக்குகளைத் தாங்கி நிற்கின்றன. தமிழ், சமஸ்கிருதம், தெலுங்கு, கன்னடம், ஆங்கிலம், சீனம் ஆகிய மொழிகளில் அமைந்துள்ளன. கல்வெட்டுகள் மொழியியல் ஆய்வுக்குப் பல வகையிலும் பயன்படுவன.

அந்தக் கல்வெட்டுகளைப் பற்றி அறிந்த கொள்ள இது ஓர் அறிமுக நூல். இந்நூலில் தொல்லெழுத்து தோற்றம் பற்றி கூறப்பெறுகின்றது. தமிழ்ப்பிராமி(பண்டைத் தமிழ் எழுத்துகள்), வட்டெழுத்து, தமிழ் எழுத்து ஆகிய எழுத்துகளில் அமைந்த கல்வெட்டுகள் பற்றி அறிமுகம் தரப் பெற்றுள்ளது. தென்னகத்தில் வடமொழியை எழுதப் பயன்படுத்த பெற்ற கிரந்த எழுத்து பற்றிய அறிமுகம் உள்ளது. வரலாற்றைச் செப்பும் செப்பேடுகள் பற்றியும் எழுதப் பெற்றுள்ளது. நடுகல் பற்றிய சிறந்த அறிமுகக் கட்டுரை மாணவர்களுக்குப் பலவகையிலும் பயனுடையது.

இந்நூல் மாணவர்கள் கல்வெட்டுகளைப் பற்றி அறிந்து பயனடையும் வகையில் தயாரிக்கப் பெற்றுள்ளது. எளியமுறையில் எழுதப் பெற்ற இந்நூலை மாணவர்கள் படித்து பயன்பெற வேண்டும்.

இந்நூலின் மறுப்பதிப்புப் பணியில் ஈடுபட்ட கல்வெட்டாய்வாளர் திரு. கி. சு. சம்பத், மற்றும் திரு. இரா. சிவானந்தம் அவர்களுக்கும் இந்நூலினை நல்ல முறையில் டிடிபி செய்து அட்டைப் படம் வடிவமைத்த அச்சுக்கோர்ப்பாளர் திருமதி தே. சத்தியவதி, அச்சுப்பிழைத்திருத்திய கோ. செம்மலர் ஆகியோருக்கும் எனது பாராட்டுகள். மற்றும் இந்நூலை வெளியிட உரிய நிதியினை அளித்திட்ட தமிழ்நாடு அரசிற்கு எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**தி. ஸ்ரீ. ஸ்ரீதர்**

2-9-2010<br>
**சென்னை-8**

முதன்மைச் செயலாளர் (ம) ஆணையர்

# பொருளடக்கம்

# தொல்லெழுத்தியல்

**இரா. நாகசாமி**

தொன்மையான எழுத்துகளின் வளர்ச்சியை ஆராய்வது தொல்லெழுத்தியல். தொல்லெழுத்து எனின், இன்று வழங்கி வரும் எழுத்துகளின் முந்தைய வடிவங்களும், வழக்கொழிந்த எழுத்துகளின் வடிவங்களும் எனலாம். தொல்லெழுத்துகளை ஆராய்வது தமிழகத்திற்குப் புதியது எனக் கருத வேண்டாம். "தொல்லை வடிவின எல்லா எழுத்தும்" என்னும் நன்னூல் சூத்திரம், தொன்மை வடிவை ஆராய்ந்தனர் என்பதற்கு எடுத்துக்காட்டு. "முன்னோர் புள்ளியாக எழுதியதை இக்காலத்தார் காலாக எழுதினர்" என்ற நச்சினார்க்கினியர் உரையும் தொன்மை வடிவை ஆராய்ந்தனர் என்பதைக் குறிக்கிறது.

இருப்பினும் தொல்லெழுத்துகளும் அவற்றின் வளர்ச்சியும் இன்றைய அறிவிற்கு ஏற்ப ஆராயப்பட்டது சென்ற நூற்றாண்டில்தான். உலகின் பலநாட்டு அறிஞர்கள் இவ்வாராய்ச்சியில் ஈடுபட்டு, வியத்தகும் நுண்ணுணர்வுடனும் விடா முயற்சியுடனும் உழைத்து இதை அனைத்துலக செயலாகச் செய்துள்ளனர். அவர்களின் பணியால் மறைந்துபோன பல சமுதாயங்களை நாம் அறிய முடிகிறது.

மனிதனின் அறிவை நிலையாக்கியது எழுத்து. மனித அறிவில் தோன்றிய வளர்ச்சியை எடுத்துரைப்பது எழுத்து. காலத்தையும் தேசத்தையும் கடந்து நிற்பது எழுத்து என்று தொல்லெழுத்து வல்லுநர் கூறுவர். "எண் என்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும் கண் என்ப வாழும் உயிர்க்கு" என்பது தமிழ்மறை. இதையே எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும் என்றனர் பின்னோர். எழுத்தை எவ்வளவு சிறப்பாகத் தமிழ் மக்கள் போற்றினர் என்பதை ஏலாதியில் வரும் ஒரு செய்யுளும் குறிக்கும்.

இடைவனப்பும் தோள்வனப்பும் ஈடின் வனப்பும்
நடைவனப்பும் நாணின்வனப்பும் புடைசால்
கழுத்தின் வனப்பும் வனப்பு வனப்பு அல்ல, எண்ணோடு
எழுத்தின் வனப்பே வனப்பு.

எழுத்து எனப்படுவது யாது? தமிழைப் பொறுத்தவரை மிகவும் எளிமையான, சிறப்பான கருத்து தொல்காப்பியத்திலுள்ளது. அகரம் முதல் னகரம் வரை உள்ள முப்பதும் எழுத்து என்று தொல்காப்பியம் குறிக்கிறது. பின்னோர் இதற்கு விளக்கம் அளித்து உள்ளனர். "எழுதப்படுதலின் எழுத்து என்பது சாதாரண குறி. எழுதப்படுவதாலும் எழுப்பப்படுவதாலும் எழுத்து" என்பர். எழுப்பப்படுவது ஒலி எழுத்தையும், எழுதப்படுவது உருவ எழுத்தையும் குறிக்கும். "மனத்தால் உணரும் நுண்ணுணர்வு இல்லாதோர் உணர்வதற்கு எழுத்துகட்கு வேறு வேறு உருவம் காட்டி எழுதப்பட்டு நடத்தலால் கட்புலனாகிய வரிவடிவம் ஆயிற்று" என்றும் கூறுவர்.

**கடவுளின் தோற்றம்**

எழுத்து கடவுளின் ஒரு தோற்றம் என்றும், கடவுளே அதைத் தோற்றுவித்தார் என்றும் உலகின் பல பகுதிகளில் வாழ்ந்த பண்டைய மக்கள் கருதினர். எகிப்தியர் 'தோத்' என்ற கடவுளால் எழுத்து தோற்றுவிக்கப்பட்டது எனக் கருதினர். பாபிலோனியர் 'நேபோ' என்னும் தெய்வத்தாலும் யூதர்கள் 'மோசஸ்' என்பவராலும் கிரேக்கர்கள் 'ஹெர்மஸ்' என்னும் தெய்வத்தாலும் தோற்றுவிக்கப்பட்டது என்று கருதினர். "எண்ணாகி எண்ணுக்கோரெழுத்துமாகி" என்று தேவாரத் திருப்பதிகங்கள் பாடுவதும் இதையே. 'சுவரஸ்சமே, சுலோகம்சமே' என்று வேதங்கள் கூறுவதும் இக்கருத்துத்தான் என்பதில் ஐயமில்லை.

எழுத்துகள் எவ்வாறு தோன்றின என்று தொல்லெழுத்து வல்லுநர் கூறும் கருத்துகள் பின்வருமாறு:-

**ஓவியங்கள்**

சித்திரம் வரைதலே எழுத்துகளின் தோற்றத்திற்கு அடிப்படையான காரணம். குழந்தைகள் தாங்கள கண்ணுறும் விலங்குகளையும், பறவைகளையும் படமாக வரைகின்றன. அவற்றிற்கு உயிர் இருப்பதாகவே அவர்கள் கருதுவர். பண்டைய மனிதன் காடுகளிலும் மலைகளிலும் வேட்டையாடி திரிந்த காலத்தில் இவ்வாறுதான் ஓவியங்களை வரைந்துள்ளான். விலங்குகளின் உருவை வரைந்து அவற்றினை ஈட்டியால் குத்துவதுபோல் வரைந்தால் அது அவனுக்கு மாந்திரீக சக்தியைக் கொடுக்கும் என்றும் , அதனால் ஏராளமான விலங்குகளை வேட்டையாட முடியும் என்றும் கருதி இருக்க வேண்டும். பிரஞ்சு நாட்டிலும், ஸ்பெயின் நாட்டிலும் உள்ள குகைகளில் பண்டைய மனிதன் வரைந்த ஓவியங்கள் இருக்கின்றன. இவை எழுத்துகளின் அடிப்படைத் தோற்றத்தைக் குறிக்கின்றன.

### சித்திர எழுத்துகள்

ஆனால் ஓவியங்களையே எழுத்தாகக் கொள்ள முடியாது. வரைந்த உருவை மட்டும் ஓவியம் குறிக்குமே ஒழிய வேறு எக்கருத்தையும் குறிக்காது.

பலகுடி மக்கள் சேர்ந்து ஓர் ஊரிலோ, நகரிலோ வாழத் தலைப்பட்டபோது, அவ்வக் குடிகளுடைய பொருள்களைக் குறிக்க குறியீடுகள் இட்டுத் தெரிந்துகொண்டனர். ஊர்த் தெய்வத்துக்கு, மக்கள் பல பொருள்களை வழிபாடாகக் கொடுப்பது, வழக்கம். ஆதலின் ஊர்க்கோயில்களிலும், நகரக் கோயில்களிலும் ஏராளமாகப் பொருள்கள் சேர்ந்தன. இவற்றைக் கணக்கு வைத்துக் கொள்ள பல குறியீடுகள் தேவைப்பட்டன. உதாரணமாக இவ்வளவு மாடுகள் எனக் குறிக்க மாட்டின் தலை போட்டு அருகில் வேண்டிய புள்ளிகள் இட்டுவைத்தால் அது அவ்வளவு மாடுகள் எனக் குறிக்கும். கலன்களையும், தானியங்களையும் போட்டு அருகில் இட்ட புள்ளி இவ்வளவு கலன் அல்லது தானியம் எனக் குறிக்கும் இவ்வாறு தனிப்பட்ட மனிதர்களிடத்தைக் காட்டிலும் கோயில்களில் கவனத்துடன் கணக்கு வைத்துக் கொள்ளும் தேவை இருந்தது. அதற்குக் குறியீடுகள் தோன்றின இவற்றைச் சித்திர எழுத்துகள் எனலாம். இவை வரையப்பட்ட பொருள்களையே குறிக்கும். மெசபடோமியாவில் கிடைத்த மிகத் தொன்மையான மண் ஓடுகளில் இதுபோன்ற குறிகள் தான் உள்ளன. இதேபோல் 'மினோஆன் கிரீடே' என்னும் பண்டைய பகுதியிலும் காணப்படுகிறது. இவற்றைச் சித்திர எழுத்துகள் என்பர்.

### கருத்தெழுத்துகள்

சித்திர எழுத்துகளையும் உண்மையான எழுத்துகள் என்று கூற முடியாது. அவை வளர்ச்சி பெற்று கருத்தெழுத்துகளாக பரிணமித்தன. உதாரணமாக சூரியனின் உருவரைகிறோம். இது சூரியனை மட்டும் குறிப்பது சித்திர எழுத்து நிலை, இதற்கு அடுத்த நிலை சூரியனுடன் தொடர்பு கொண்ட 'பகல்', 'வெப்பம்' என்ற பொருள்களையும் குறிப்பதாம். இப்போது உருவை மட்டுமின்றி ஒரு கருத்தையும் குறிப்பதால் இதைக் கருத்தெழுத்து என்பர். இது மட்டுமின்றி முழு உருவும் போடாமல் இரு கொம்புகளும் தலை மட்டும் வரைந்தால் மாடு என்று அறியலாம். அல்லவா! இதுவும் ஒரு கருத்தைத் தெரிவிக்கிறது. இக்கருத்து எழுத்துகளை ideogram என்பர். சித்திர எழுத்திலும், கருத்தெழுத்திலும், இடப்பட்ட குறிக்கும். ஒலிக்கப்படும் அதன் பெயருக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை.

## ஒலி எழுத்துகள்

இந்நிலையிலிருந்து தோன்றிய புரட்சிகரமான மாற்றமே ஒலி எழுத்தாகப் பரிணமித்தது. கருத்தெழுத்துகள் பலகாலம் வழக்கிலிருந்ததால் வரைந்துள்ள பொருளைக் குறிக்காமல் சில இடங்களில் கருத்தை மட்டும் குறிக்கவும் உபயோகிக்கப் பட்டன. மேலும் சூரியனைக் குறிக்க அதன் உருவம் வரைகிறோம் அதை "சூரியன்" என்ற பெயரால் அழைக்கிறோம். பலநாள் வழக்கிலிருந்ததால் அவ்வுருவம் வரைந்தபோது சூரியனைக் குறிப்பதோடல்லாமல் 'சூ' என்று குறுகிய ஒலியையும் குறித்தது. இதேபோன்று முன்னர் பல பொருள்களைக் குறிக்க அவற்றின் உருவங்களை வரைந்தனர் அவை நாளடைவில் அச்சொற்களின் முதல் ஒலியை மட்டும் குறிக்கவும் தலைப்பட்டன. இம்முறைக்கு acrophony என்று பெயர்.

இதுபோன்ற வளர்ச்சிகளால் ஒலி எழுத்துகள் தோன்றின. சித்திர எழுத்துகளிலும் கருத்து எழுத்துகளிலும் இட்டுள்ளதை குறிக்கும், அது குறிக்கும் பெயருக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை என்றோம். ஆனால் ஒலி எழுத்துகள் பொருளையோ, கருத்தையோ குறிக்காமல் குறிப்பிட்ட ஒலியையே குறித்தன. இந்நிலையில்தான் குறிக்கும் ஒலிக்கும் நேர்முகத் தொடர்பு ஏற்படுகிறது இப்பொழுதுதான் மொழிவதைக் குறிக்க எழுத்து ஏற்பட்டது என்று கூறமுடியும். ஒலி எழுத்தை எந்த மொழியில் எழுதப்பட்டுள்ளதோ அம்மொழியால்தான் அறியலாம். இம்முறையில் உருவத்துக்கும் ஒலிக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லாவிட்டாலும் அவ்வுரு அவ்வொலியை மட்டும் குறிக்க நிலைத்துவிட்டது. ஒலியெழுத்துகளை phonetic writing என்பர்.

ஒலி எழுத்தை அகரவகை எழுத்துகள் என்றும் உயிர் மெய்வகை எழுத்துகள் என்றும் இருவகையாகப் பிரிப்பர். உயிரெழுத்துகள் தனியாகவும் மெய்யெழுத்துகள் தனியாகவும் ஆங்கிலத்தில் எழுதப்படுகின்றன. உதாரணமாக A என்பது உயிர். K என்பது மெய் க என்னும் உயிர்மெய் எழுத வேண்டுமானால் K முதலில் எழுதி அருகில் A எழுதினால் தான் Ka ஆகும். ஆங்கிலத்தில் ஓர் உருவம் ஓர் ஒலியைத்தான் குறிக்கிறது. தமிழை எடுத்துக் கொள்வோம். 'அ' என்பது உயிர், 'க்' என்பது மெய் ஆனால் உயிர்மெய்யைக் குறிக்க "க" என்னும் ஒரே உருவையே எழுதுகிறோம். அதேபோல் பிற உயிர் மெய்களையும் கி, கு, ஆகியவற்றையும் ஒரேஎழுத்துகளால் எழுது

கிறோம். மெய் தனியாகவும் உயிர் தனியாகவும் இல்லாமல் இரண்டும் ஒரே உருவாய் இவை உள்ளன. இதையே உயிர்மெய் வகை என்பர். ஆங்கில முறையை அகர வகை என்று குறிப்பர்.

உயிர்மெய் எழுத்துகளை syllabary என்றும் அகர எழுத்துகளை alphabetic என்றும் கூறுவர். இவற்றில் உயிர்மெய் வகை எழுத்துகளே முதலில் தோன்றியவை. அஸ்ஸீரியா, சீனம், ஜப்பான் ஆகிய நாட்டுத் தொல்லெழுத்துகள் இவ்வகையைச் சார்ந்தவையே. இதன் பின்னர்தான் அகர வகை எழுத்துகள் தோன்றின. உயிர்மெய் வகை எழுத்துகள் வழக்கிலிருந்தால் ஏராளமான எழுத்து உருவங்களை நினைவில் கொள்ள வேண்டும். ஆனால் அகர வகை எழுத்துகளை வழங்க மிகவும் குறைந்த உருவங்களை மனதில் இருத்திக் கொண்டால் போதும். அகரவகை எழுத்துகளில் ஓர் உரு, ஓர் ஒலியையே குறிக்கும். ஹீப்ரு, கிரேக்கம், ரோமானிய, அராபிய எழுத்துகள் அகர வகை எழுத்துகளாகும். அதே எழுத்துகளைத்தான் ஆங்கிலம், பிரெஞ்சு, இத்தாலிய, ஜெர்மானிய, டச்சு, செக்கோஸ்லோவேகிய, பின்னிஷ், ஹங்கேரிய மொழிகள் இன்று உபயோகிக்கின்றன. அகர வகையில் உள்ள எளிமையான எழுத்துகளையே எந்த மொழிகளுக்கும் சுலபமாக உபயோகிக்கலாம். எழுத்துகளின் வளர்ச்சியில் முழுமையை, உன்னத நிலையை அடைந்தவை அகர எழுத்துகளே. அகர எழுத்துகளைத் தோற்றுவித்தவர் யார்? இது பற்றிப் பல கருத்துக்கள் உள்ளன. சிரியாவிலும், பாலஸ்தீனத்திலும் வாழ்ந்த வடசெமிடிக் மக்களே இவ்வெழுத்துகளை தோற்றுவித்தவர் என்பது ஆராய்ச்சியாளரில் பெரும்பாலோர் ஏற்ற முடிவாகும். பண்டைய எகிப்தியர், மெசபடோமியர், கிரேக்கர்கள், சிந்துவெளியினர், சீனர் ஆகிய பல மக்களின் எழுத்துகள் வளர்ச்சியைப் பெற்றிருந்தபோதும், ஒரு நிலைக்கு மேல் வளர்ச்சி இன்றி நின்றுவிட்டன. அவர்கள் உபயோகித்த எழுத்துகளில் ஏராளமான வடிவங்கள் உள்ளன.

சிரியா, பாலஸ்தீனத்தில் வாழ்ந்தவர்களே இப்புரட்சிகரமான அகர (alphabetic) எழுத்தைத் தோற்றுவித்தனர். இந்த எழுத்துப் புரட்சித் தோன்றியவுடன், பிறநாடுகள் அனைத்தும் இவ்வெழுத்துகளையே பின்பற்றின என்று சொல்வதற்கில்லை. ஆயினும் இக்கருத்தைப் பின்பற்றினர் என்பதில் ஐயமில்லை. இக்கருத்தின் அடிப்படையில், தங்கள்

மொழிக்கும் சூழ்நிலைக்கும் ஏற்ப எழுத்துகளைப் படைத்தனர். இந்திய, கொரிய, மங்கோலிய, லத்தீன், ஹீப்ரு, அரேபிய, கிரேக்க, ரஷிய, எழுத்துகளுக்குள் உள்ள தொடர்பை அனைவராலும் அறியமுடியாவிடினும், தொல்லெழுத்து வல்லுநர்களால் தெளிவாக காணமுடிகிறது என்பது ஆராய்ச்சியாளர் கருத்து.

வடசெமிடிக் மொழி பேசியவர் இவ்வெழுத்து தோற்றுவிக்க காரணம் உண்டு. அவர்கள் உயிர் எழுத்துகளையே எழுதவில்லை. 22 குறியீடுகளே அவர்களது எழுத்துகளாக விளங்கின. கிரேக்கர்களதும் இவ்வாறே. இந்த 22 எழுத்துகளே மெய்களாக எழுதப்பட்டன. சில நேரங்களில் சில மெய்களே உயிராகவும் எழுதப்பட்டன. அவர்கள் ஏன் உயிரையே வழங்கவில்லை என்பது இன்னும் சரியாக விளங்கவில்லை.

வடசெமிடிக் மொழியினர் மெய்யெழுத்துகளை தோற்றுவித்தது சுமார் கி.மு. 1500 எனலாம். இவற்றிலிருந்துதான் பிறமொழியினர் தங்கள் அகர எழுத்தைத் தோற்றுவித்தனர் என்று வல்லுநர் கூறுவர்.

தமிழ் மொழியைப் பொறுத்தவரையிலும் அது முழு உயிர்மெய் என்றோ முழு அகரவகை என்றோ சொல்ல முடியாது. உதாரணமாக உயிர் ஒலிகளைத் தனித்தனி எழுத்துகளால் எழுதுகிறோம். ஆயினும் உயிர்மெய் எழுதும்போது ஒரே எழுத்தால் எழுதிவிடுகிறோம். உயிர் தனியாகவும் மெய் தனியாகவும் எழுதுவதில்லை. ஆதலின் 210க்கு மேல் தமிழ் எழுத்துகள் உள்ளன. வடமொழி இதைக் காட்டிலும் மிக அதிக உருவங்களைக் கொண்டு உள்ளது.

இந்திய நாட்டில் கிடைத்துள்ள மிகத்தொன்மையான எழுத்துகள், மொஹஞ்சதாரோ, ஹரப்பா பகுதிகளில் கிடைத்தவையாகும். இவை கி.மு. 3000 ஐச் சார்ந்தவை. அதாவது வடசெமிடிக் மக்கள் தோற்றுவித்த ஒலி எழுத்துப் புரட்சிக்கு காலத்தால் முற்பட்டவை. ஹரப்பா எழுத்துகள் பலவகைச் சித்திரங்களாகக் காணப்படுவதால் அவற்றைச் சித்திர எழுத்துகள் என அழைப்பர். ஆயினும் இவை முழுதும் சித்திர எழுத்துகள் அல்ல. சில ஒலி எழுத்துகளும் உள்ளன. ஆதலின் இவற்றை ஒருவகைப்பட்ட சித்திர-ஒலி எழுத்துகள் எனக் கூறலாம். இவற்றைப் பற்றிய ஆராய்ச்சி உலக அறிஞர்களின் கவனத்தைச் சிறப்பாகக் கவர்ந்துள்ளது. முடிவு தெரிந்த பின் தெளிவு ஏற்படும்.

ஹரப்பா எழுத்துகளுக்கு பின்னர் அதாவது கி.மு. 1500 லிருந்து கி.மு. 3-ம் நூற்றாண்டு வரை எவ்வகை எழுத்துகள் நிலவின என்பதற்கு எவ்வித ஆதாரமும் இதுவரை கிடைக்கவில்லை. மௌரியப் பேரரசன் அசோகன் காலத்திலிருந்து இந்தியாவின் வடபால் இருவகை எழுத்துகள் வழக்கிலிருந்தன. ஒன்று பிராம்மி என்பது. மற்றது கரோஷ்டி என்பது இரண்டும் வடசெமிடிக் பகுதியினர் தோற்றுவித்த கருத்து அடிப்படையில் தோன்றியவை என்று வல்லுநர் பலர் கருதுகின்றனர்.



# தமிழி எழுத்துகள்

இரா. நாகசாமி

## தமிழி

தமிழகத்தில் கிடைத்துள்ள மிகவும் தொன்மையான எழுத்துகளே தமிழி எனப்படுகிறது. இந்தியாவின் வடபகுதியில் மௌரியப் பேரரசன் அசோகனின் காலத்தில் தொடங்கி சில காலம் வழக்கிலிருந்து பிற இந்திய எழுத்துகளாகப் பரிணமித்த எழுத்துகளை பிராம்மி (பம்மி) என்பர் தமிழகத்தின் வடபகுதியிலிருந்து தென்பகுதி வரை பல இடங்களில் தமிழி எழுத்துகள் கிடைத்துள்ளன. கல்லிலும், பானை ஓடுகளிலும், காசுகளிலும் கிடைத்துள்ளபடியால், ஒரு குறிப்பிட்ட சமயத்தாரால் மட்டும் வழங்கப்பட்டது என்று இல்லாமல் எல்லாப் பிரிவினராலும் வழங்கப்பட்டது என்று கொள்ளல் தகும். தமிழ்நாட்டில் வழங்கிய எழுத்து ஆதலின், வடமொழியில் இதை தமிழி என்று குறித்தனர்.

## பெயர்

இவ்வெழுத்துகளை பண்டைய தமிழ் என்றே கூறல் தகும். ஆயினும் தமிழ் எனில் இன்றைய தமிழே நம் கண் முன் தோன்றும். தமிழகத்தில் விளங்கிய பண்டைத் தமிழ் எழுத்துகளை பிராகிருத மொழியினர் தமிழி, திராவிடி என்று அழைத்தனர். சிலர் இவை குகைகளில் மட்டும் காணப்பட்டதால் 'லேனா எழுத்துகள்' என்றும் கூறினர். 'லேனா' எனின் குகையைக் குறிக்கும். அண்மையில் திரு ஐ. மகாதேவன் அவர்கள் இதற்கு தமிழ்-பிராம்மி என்று பெயர் கொடுத்திருக்கிறார். பிராம்மி எழுத்திலிருந்துதான் இவை தோன்றின. ஆதலின் இதைத் தமிழ்-பிராம்மி எனக் குறிப்பதே பொருந்துமென்பது அவர் கருத்து. இதை தமிழி என்ற பெயரால் வழங்குதல் சிறப்பாகும். முன்னர் கூறியபடி இவை தமிழ் எழுத்துகள்தான். ஆயினும் இன்றுள்ள தமிழிற்கு முன்னோடியாகத் திகழ்ந்தன என்பதைக் குறிக்க ஒரு பெயர் தேவை. அக்காலத்தில் வழங்கிய மற்ற இந்திய எழுத்துகளுக்கும் இவற்றுக்கும் பெரும்பான்மை ஒற்றுமை உண்டு. ஆயினும் சில வேறுபாடுகளால் இவற்றிற்குத் தனித்தன்மையும் உண்டு. ஆதலின் இதன் பெயர் இக்கருத்துகள்

அனைத்தையும் நமக்கு உணர்த்துவதாய் இருத்தல் நலம். இதற்கு புதுப்பெயர் கொடுப்பதைக் காட்டிலும் இவ்வெழுத்துகள் வழங்கிய காலத்தில் நிலவிய ஒரு பெயராயிருந்தால் அதையே வரலாற்று அறிஞர்கள் ஏற்பர்.

'சமவயங்க சுத்த' என்னும் சமண நூல் கி.மு. முதல் நூற்றாண்டைச் சார்ந்தது என்பர். இந்நூல் 18 விதமான எழுத்துகளின் பெயர்களைக் குறிக்கிறது. இதுவே எழுத்துகளின் பெயர்களைக் குறிக்கும் மிகவும் தொன்மையான நூல். இப்பட்டியலில்தான் பிராம்மி (பம்மி) என்ற பெயரும், கரோஷ்டி என்ற பெயரும் முதலில் குறிக்கப்படுகின்றன. இதே பட்டியலில் தமிழி என்னும் ஒரு பெயரும் குறிக்கப்பட்டுள்ளது. இது தமிழகத்தில் வழங்கிய எழுத்தைக் குறிக்கிறது என்பது தெளிவு. பிராம்மி என்ற பெயர் எப்பொழுது வழங்கப்பட்டதோ, அப்பொழுதே தமிழி என்னும் பெயரும் வழக்கில் இருந்தது.

### திராவிடி

சுமார் கி.பி. 5-6-ஆம் நூற்றாண்டினதாகக் கருதப்படும் லலிதவிஸ்தரம் என்னும் பௌத்த நூலில் 64 வகை எழுத்துகள் குறிக்கப்பட்டுள்ளன. இதில்தான் திராவிடி என்னும் பெயரைக் காண்கிறோம். திராவிடி என்னும் பிற்காலப்பெயர் பண்டைய தமிழ் எழுத்துகளுக்குப் பொருந்தாது. கி.பி. 5-6 ஆம் நூற்றாண்டுகளில் தெலுங்கு, கன்னடம், கிரந்தம் ஆகிய எழுத்துகள் ஒன்று போலவே இருந்தன. இவ்வெழுத்துகளுக்கு திராவிடி என்னும் பெயர் பொருந்தும் என்பது இக்கட்டுரை ஆசிரியரின் கருத்து அக்காலத்தே பண்டைய தமிழ் எழுத்துகளின் வடிவங்கள் மாறிவிட்டன. ஆதலில் தொன்மையான எழுத்துகள் வழங்கிய காலத்தில் இருந்த பெயரே பொருத்தமானது.

### கண்டுபிடிப்பு

1903-ல் வெங்கோபராவ் என்பவர் முதன் முதலில் தமிழகத்தில் கீழவளவு என்னும் இடத்தில் இவ்வெழுத்துகளைக் கண்டுபிடித்தார். மூன்று ஆண்டுகளுக்குப் பின்னர், திருநெல்வேலி மாவட்ட கலெக்டர் கெமைடு என்பார் மறுகால்தலை என்னுமிடத்தில் கண்டுபிடித்தார். இதன் பின்னர் மற்ற இடங்களிலும் இவை கண்டுபிடிக்கப்பட்டன.

அண்மையில் அரச்சலூர் என்னுமிடத்தில் ஈரோடு தமிழாசிரியர் இராசு கண்டுபிடித்தார். திருவாதவூரில் திரு. ஐ. மகாதேவனும். அழகரை, உரையூர், காஞ்சி ஆகிய இடங்களில் சென்னை பல்கலைக் கழகத்தொல்லியல் பிரிவும், கொற்கையில் தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத் துறையினரும் கண்டுபிடித்து உள்ளனர்.

## எழுத்துகளின் தோற்றம்

அண்மையில் நடந்துவரும் ஆராய்ச்சிகளின்படி சிந்து வெளிப் பண்பாடு திராவிடப் பண்பாடு என்று பெரும்பாலான ஆராய்ச்சியாளர் ஏற்றுக்கொண்டுள்ளனர். சிந்துவெளிக் காலத்தில் வழக்கிலிருந்த எழுத்துகள் பகுதி சித்திர எழுத்துகளாகவும் பகுதி ஒலி எழுத்துகளாகவும் இருக்கக் கூடும் என்பது தொல்லெழுத்து வல்லுநர்களின் கருத்து. சிந்துவெளி எழுத்துகளில் இருந்துதான் பிராம்மி எழுத்துகள் தோன்றின என்று சில ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். சிந்துவெளி எழுத்துகளின் தன்மையைக் காணில் அவற்றில் இருந்து உயிர்மெய் வகையைச் சார்ந்த பிராம்மி எழுத்துகள் தோன்றி இருக்க முடியாது என்பது இன்னம் சில ஆராய்ச்சியாளரின் கருத்து. இது எப்படி இருப்பினும் பிராம்மி எழுத்துகள் வட செமிடிக் (அராமிய) எழுத்துகளைப் பின்பற்றி அமைக்கப்பட்டன என்றும், அது சுமார் கி.மு. 700-ல் தோன்றியிருக்கக் கூடும் என்பதும் அவர்கள் கருத்து முதலில் பிராம்மி எழுத்துகளும் வலம் இருந்து இடமாக எழுதப்பட்டன ஏரான் என்ற இடத்தில் கிடைத்த ஒரு காசில் ‘தமபலஸ’ என்று எழுதப்பட்டுள்ளது. இதுவே நமக்கு கிடைத்துள்ள பிராம்மி எழுத்துகளில் மிகவும் தொன்மையானது. இது வலமிருந்து இடமாக எழுதப்பட்டுள்ளது. பின்னர் இவ்வெழுத்து இடமிருந்து வலமாக மாற்றப்பட்டது.

இங்கு ஒன்றை மறுமுறை நினைவுறுத்தல் வேண்டும். அராமிய எழுத்துகளிலிருந்து பிராம்மி தோன்றியது என்றால் அராமிய எழுத்துகளே பிராம்மியாக மாறிவிட்டன என்பது பொருள் அல்ல. சில எழுத்துகளில் ஒற்றுமை இருக்கின்றன. இருப்பினும் சம்ஸ்கிருத மொழிக்கு ஏற்ப அராமியக் கருத்துகளை அறிந்தவர்கள் எழுத்துகளைத் தோற்றுவித்தனர் என்பதே பொருள். பிராம்மி தோன்றிய நாளிலேயே தமிழி எழுத்துகளும் தோன்றியிருத்தல் வேண்டும். இங்கும் எழுத்துகளான கருத்துகளை ஏற்று தமிழ் மொழிக்கு ஏற்ப ழ, ள, ற, ன என்ற சிறப்பு ஒலிகளுடன் தமிழ்மொழி வல்லுநர் தோற்றுவித்தனர் என்று கொள்வது பொருந்தும்.

இருப்பினும் தமிழகத்தில் இதுவரை கிடைத்துள்ள இக்கல் வெட்டுகள் அனைத்தும் இடமிருந்து வலமாகவே எழுதப்பட்டவையாகக் காணப்படுகின்றன. ஆதலின் இதுவரை கண்டு பிடிக்கப்பட்டுள்ளவை இடமிருந்து வலமாக எழுதப்பட்ட காலத்தையே குறிக்கும். ஆதலின் இவை கி.மு. மூன்றாம் நூற்றாண்டைச் சார்ந்தவை என்று கொள்வதால் தவறில்லை.

புள்ளியில்லா, உருவே அகரமோடு கூடிய உருவாகவும் ஏனை உயிரோடு சேரும்போது உருவு திரிந்தும் தமிழ் எழுத்துகள் வழங்குகின்றன என்பது தொல்காப்பியத்திலிருந்து அறியலாம். ஆதலின் இதை உயிர்மெய் வகை என்று அழைத்தல் வேண்டும்.

## எழுத்துகள் உள்ள இடங்கள்

மலைகளில் இயற்கையாக அமைந்த குகைத் தளங்கள் உள்ளன. இவற்றின் அருகில் நல்ல சுனைகள் இருக்கின்றன. ஊர்களில் இருந்து சற்று ஒதுக்குப் புறமான இடங்களில் தான் இவை இருக்கின்றன. பெரும்பாலான குகைத் தளங்களுக்குச் செல்வது கூட கடினம். இருப்பினும் இங்கு சென்றால் இயற்கையின் எழில் மன அமைதியை அளிக்கும் வண்ணம் உள்ளது. இக்குகைகளில் பண்டு துறவியர் வசித்தனர். அவர்கள் பௌத்த சமயத்தையும் சமண சமயத்தையும் சேர்ந்தவர் என்பது சிலர் கருத்து. அவை அனைத்துமே சமணப் பெரியார்கள் வாழ்ந்த இடங்கள் தாம் என்பது என் கருத்து. சமணத்துறவிகளுக்கு அவ்வப்போது பேரரசர்களும், வணிகர்களும் பாழி அமைத்துக் கொடுத்திருக்கின்றனர். அதாவது குகையின் தளத்தை வழவழ என்று செதுக்கி அவர்கள் படுத்துறங்குவதற்கு ஏற்ப செய்தளித்துள்ளனர். இவற்றைக் குறிக்கவே கல்வெட்டுகளைப் பொறித்து வைத்து உள்ளனர். கல்வெட்டுகள் பெரும்பாலும் குகையின் மேல் பாறையின் முகப்பில் வெட்டப்பட்டுள்ளன. சில இடங்களில் வழவழப்பாக செதுக்கப்பட்ட படுக்கைகளின் தலையிலும் செதுக்கப்பட்டு காணப்படுகின்றன. இரண்டு இடங்களிலும் காணப்படுவதும் உண்டு. அறச்சலூர் கல்வெட்டு மட்டும் பாழி அமைத்ததைக் குறிக்காமல் இசை எழுத்துகளைக் குறிக்கிறது.

குகைக் கல்வெட்டுகளைத் தவிர பானை ஓடுகளிலும் இவ்வெழுத்துகள் கிடைத்துள்ளன என்று கண்டோம். அரிக்கமேட்டில் கிடைத்தவை பௌத்த சமயத் தொடர்புடையவையாக உள்ளன. மற்ற இடங்களில் கிடைத்தவை பற்றி இன்னும் ஆராய்ச்சிகள் முடிவு பெறவில்லை.

வடஆற்காடு மாவட்டத்தில் செங்கம் (ஆண்டிப்பட்டி) என்ற பகுதியில் கிடைத்த காசுகளில் இவ்வெழுத்துகளில் "தின்னன் எதிரான் சேந்தன் அ" என்று உள்ளது.

## எழுத்துகளின் காலம்

எழுத்துகளின் உருவ அமைதி கொண்டு இவற்றை மூன்று காலங்களைச் சேர்ந்தவையாக இருக்கலாம் என்று மகாதேவன் கருதுகிறார்.

| | |
|---|---|
| முதல் காலம் | கி.மு. 2, 1 நூற்றாண்டு. |
| இடைக் காலம் | கி.பி. 1, 2-ம் நூற்றாண்டு. |
| கடைக் காலம் | கி.பி. 3, 4-ம் நூற்றாண்டு. |

இவ்வெழுத்து பற்றி திரு. ஐ.மகாதேவன் அவர்களின் அண்மைக் கருத்துகள் கீழ் வருமாறு :

1. தமிழ்மொழிக்கு உள்ள ஒலிகளே குறிக்கப்பட்டு உள்ளன. (ஸ, த, என்ற சில வடமொழி எழுத்துகளும் உள்ளன).
2. ழ, ள, ற, ன என்ற எழுத்துகள் உபயோகிக்கப்பட்டுள்ளன.
3. முதல் காலத்தில் புள்ளியில்லா மெய்வடிவு மெய்யை மட்டும் குறிக்கும். அகரம் ஏறிய மெய்யைக் குறிக்காது.
4. மெய்யில் அகரம் ஏறுவதைக் குறிக்க ஒரு கோடு இடப் பட்டது. இக்கோடே ஆகாரத்தையும் குறிக்க இடப்பட்டது. அகரத்திற்கும் ஆகாரத்திற்கும் உள்ள வேறுபாடு மொழி அறிந்தவரால் சந்தர்ப்பத்திற்கு ஏற்ப பெறப்படும்.
5. இடைக் காலத்திலும் பிற்காலத்திலும் புள்ளியில்லா மெய் யுருவம் அகரம் ஏறிய மெய்யாகவே வழங்கப்பட்டது.
6. மெய்யைக் குறிக்க புள்ளி எங்கும் உபயோகிக்கப்படவில்லை. (புகளூரிலும் அறச்சலூரிலும் புள்ளி இருக்கிறது என்பது என் கருத்து).
7. மெய்யில் எகர, ஒகரக் குறில் ஏறும்போது நெடிலிலிருந்து பிரிக்க எந்த குறியீடும் இடப்படவில்லை. (குறிலைக் குறிக்க உள்ளே புள்ளி இருக்கிறது என்பது என் கருத்து).
8. கூட்டெழுத்துகள் எழுதப்படவில்லை.

திரு. மகாதேவன் அவர்களுடைய கால வரையறுப்பை அப்படியே ஏற்றுக் கொள்ள வேண்டும் என்பதில்லை. ஆயினும் கி.மு. 3-ம் நூற்றாண்டிலிருந்து கி.பி. 2-ம் நூற்றாண்டு வரை இவை வழக்கில் இருந்தன என்பதில் தவறில்லை.

## கல்வெட்டுகளைப் படித்தல்

முதன் முதலில் இக்கல்வெட்டுகளை எச்.கே.கிருஷ்ண சாஸ்திரிதான் படிக்க முயன்றார். அவருடைய முயற்சியால் இக்கல்வெட்டுகளில் சில தமிழ் சொற்கள் உள்ளன என்பது வெளிப்பட்டது. இவ்வெழுத்துகளைப் படிக்க தெளிவாக வழிவகுத்தவர் கே.வி.சுப்ரமண்ய அய்யர் என்ற பெரியார் ஆவர். அவர்தான் பண்டைய ழ, ள, ற, ன என்பவை எவை என்பவற்றைக் கண்டுபிடித்தார். அத்துடன் பெரும்பாலான கல்வெட்டுகள் தமிழில் உள்ளன என்றும் வாசித்தளித்தார். அவரையே தமிழ்க் கல்வெட்டுகளின் தந்தை எனலாம். அதன் பின்னர் இக் கல்வெட்டுகளைப் பற்றி அதிக கவனம் செலுத்தியோர் இல்லை.

அண்மையில் திரு. ஐ. மகாதேவன் இவ்வாராய்ச்சியில் ஈடுபட்டு பல அரிய உண்மைகளை வெளிப்படுத்தினார். அவற்றில் முக்கியமாக குறிப்பிடத்தக்கது புகளூர் கல்வெட்டை படித்தளித்ததாகும்.

## வடிவம்

இவ்வெழுத்துகள் மிகவும் எளிமையான வடிவு உடையவை. அனைவரும் விரைவில் அறிந்து கொள்ளும் வகையில் அமைக்கப்பட்டவை. அ, இ, ஈ, உ, எ, ஒ என உயிர் வடிவு ஆறும், மெய் வடிவு பதினெட்டும் ஆக மொத்தம் 24 வடிவங்களே உள்ளன. பிற வடிவங்களுக்கு மிக எளிமையான குறியீடுகள் இட்டு எழுதப்பட்டன. அகரத்தைத் தவிர மற்ற குறிலைக் குறிக்க ஒரு கோடும், நெடிலைக் குறிக்க இருகோடுகளும் இடப்பட்டன.

> "புள்ளி இல்லா எல்லா மெய்யும் உருவுருவாகி அகரமோடு
> உயிர்த்தலும் ஏனை உயிரோடு உருவு திரிந்து உயிர்த்தலும்
> ஆயீரியல உயிர்த்தலாறே"

என்பது தொல்காப்பிய சூத்திரம். இதற்கிணங்கவே அகரக் குறிலுக்கு எவ்விதக் குறியும் இடாமல் நெடிலுக்கு ஒரு கோடு மட்டும் இட்டனர்.

மற்றவைக்கு குறிலுக்கு ஒரு கோடும் நெடிலுக்கு இரு கோடுகளும் இட்டனர். அகர நெடிலுக்கும், இகர குறிலுக்கும் நெடிலுக்கும், எழுத்தின் மேல்பகுதியில் வலப்புறம் கோடிட்டனர். உகர குறிலுக்கும் நெடிலுக்கும், எழுத்தின் கீழ் வலப்புறம் இட்டனர். கீழே வளைவு உள்ள எழுத்துகளாயின் கீழ் நோக்கி இட்டனர். எகரத்திற்கு எழுத்தின் மேல் இடப்புறம் ஒரு கோடு இட்டனர். ஐகாரத்திற்கு எழுத்தின் மேல் இடப்புறம் இருகோடுகள் இடப்பட்டன. ஒகரத்திற்கு மேல் இடப்புறம் ஒன்றும் வலப்புறம் ஒன்றுமாக இடப்பட்டன. இக்குறிகள் அனைத்தும் வடிவத்துடன் இணைந்தே இடப்பட்டிருக்கும். தனித்து இடப்படவில்லை. இவை உயிர் மெய்யின் வடிவம் உயிரில் 'அ' வில் ஒரு கோடு இட்டால் 'ஆ' வாகவும் 'உ' இல் ஒரு கோடு இட்டால் 'ஊ' வாகவும் கொள்ளப்பட்டது.

இவ்வாறு எளிமையாக இடப்பட்ட கோடுகளே, பிற்காலத்தில் காலாகவும், வளைந்த கோடுகளாகவும் ஆயின. சில தனித்து எழுதப் படுபவையாகவும் மாறின. உதாரணமாக 'கா' என்பதில் இப்போது கால் தனித்து எழுதப்படுகிறது. முற்காலத்தில் 'க' என்ற வடிவில் இணைந்தே கால் எழுதப்பட்டிருக்கும்.

### முடிவு

தமிழி என்பது ஒலி எழுத்து என்றும் அது உயிர்மெய் வகையைச் சார்ந்தது என்றும் குறிப்பிட்டோம். ஒலி எழுத்து என்பது சித்திரமும் அல்ல, கருத்தைக் குறிப்பதும் அல்ல. ஓர் உருவைக் குறிக்கும் ஒலி என்று தற்கால தொல்லெழுத்து வல்லுநர் கூறுவர். இது போன்ற அரியதொரு கருத்தைப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே நச்சினார்க்கினியர் தன் உரையில்

> "எழுத் தென்றது யாதனையெனின் . . . .
> கட்புலனாகிய வடிவமுடைத்தாக வேறுவேறு வகுத்துக்கொண்டு தன்னையே உணர்த்தியுஞ் சொற்கு இயைந்து நிற்கும் ஓசை யாம்"

என்று குறித்துள்ளார்.

இவ்வெழுத்துகள் நன்கு வளர்ச்சி பெற்று வந்தன. கி.பி. மூன்றாம் நூற்றாண்டைச் சார்ந்ததாகக் கருதப்படும். அரச்சலூர் கல்வெட்டில் இவ்வளர்ச்சி ஒரு கட்டத்தை அடைந்து காணப்படுகின்றன. தமிழ் எழுத்து என்றும் வட்டெழுத்து என்றும் குறிக்கப்பெறும் எழுத்துகளின் தொடக்கத்தை இவை தெளிவாகக் காட்டுகின்றன. ஆதலின் கி.பி. மூன்றாம் நூற்றாண்டு வரை உள்ள எழுத்துகளையே தமிழி என்றும், பிற்பட்டவைகளை பிற பெயராலும் அழைப்போம்.



# தமிழ் எழுத்து

இரா. நாகசாமி

தமிழகத்தில் வழக்கிலிருந்த மிகத்தொன்மையான தமிழ் எழுத்துகளை 'தமிழி' என்று பண்டைய நூல் குறிக்கிறது. அவை தமிழ் மொழியை எழுத வழங்கப்பட்டுள்ளன. கி.பி. மூன்றாம் நூற்றாண்டிலிருந்து அவ்வெழுத்துகளில் எளிதில் அறியக்கூடிய சில உருவ மாற்றங்கள் காணப்படுகின்றன. இம்மாற்றங்கள் இரண்டு பிரிவைத் தோற்றுவிக்கும் வகையில் காணப்படுகின்றன. ஒன்று தமிழ் என்று அழைக்கப்படும் எழுத்துகளின் தொடக்கத்தையும், மற்றது வட்டெழுத்து என்று அழைக்கப்படும் எழுத்துகளின் தொடக்கத்தையும் காட்டுகின்றன. ஆயினும் இருவகை எழுத்துகளும் ஒரே கல்வெட்டில் காணப்படுகின்றன.

ஆதலின் கி.பி. 3-ம் நூற்றாண்டில் இருந்து தமிழ்மொழியை எழுத இருவகை எழுத்துகள் வழக்கத்தில் வந்தன. ஒன்று தமிழ் என்றும் மற்றது வட்டெழுத்து என்றும் கூறலாம். இதற்கு எடுத்துக்காட்டு அரச்சலூர் கல்வெட்டு ஆகும்.

இவ்வாறு தோன்றிய தமிழ் எழுத்துகளும் வட்டெழுத்துகளும் படிப்படியாக பிரிந்து வளர்ந்து முழு நிலையை அடைந்தன. இவை வளர்ச்சி பெற காரணங்கள் உண்டு. விரைவாக எழுதுதலால் ஏற்படும் மாற்றம், அழகுக்காக இடப்பட்ட கோடு வளர்ச்சி பெறல், எதன்மேல் எழுதப்படுகின்றதோ அப்பொருளின் திண்மை என்ற காரணங்களை முக்கியமாகக் கூறலாம்.

எழுத்துகளுக்கு அழகு அளிப்பதற்காக சில வடிவங்களின் தலையில் முதலில் குறுக்கே கோடு இடப்பட்டது. இவ்வாறு எழுதப்பட்ட வடிவை கையை பல முறை எடுத்து எடுத்து எழுதல் வேண்டும். ஆனால் இதையே விரைவாக எழுதும் போது கையை எடுக்காமலேயே எழுத முற்படுகிறோம். இதன் பயனாய் எழுத்துகள் படிப்படியாய் மாற்றம் பெறுகின்றன. இது தவிர கல்லில் எழுதுவதற்கும் ஓலையில் எழுதுவதற்கும் வேறுபாடு உண்டு. அதனாலும் சில மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன.

அரச்சலூர் கல்வெட்டில் தலையில் குறுக்கே இடப்பட்ட கோடுகளைக் காணலாம். அரச்சலூர் கல்வெட்டு தமிழும் வட்டெழுத்தும் கலந்து எழுதப்பட்டுள்ளது என்கிறோம். அதே போன்று கி.பி. 5,6-ம் நூற்றாண்டைச் சார்ந்த கல்வெட்டுகளும் கலந்த எழுத்துகளில் தமிழும் வட்டெழுத்தும் காணப்படுகின்றன. கி.பி. 7-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஆண்ட பல்லவ மன்னன் மகேந்திரன் காலக் கல்வெட்டு செங்கல்பட்டு அருகில் வல்லம் என்னும் இடத்தில் கிடைத்துள்ளது. இது முழுதும் தமிழில் உள்ளது. இருப்பினும் தமிழி எழுத்து நிலையிலிருந்து வளர்ந்த தமிழ் நிலையை இது காட்டுகிறது. மகேந்திரனின் தந்தை சிம்மவிஷ்ணு காலச் செப்பேடு ஒன்று கிடைத்துள்ளது. இதைப் பள்ளன்கோயில் செப்பேடு என்பர். இச்செப்பேட்டை கிரந்த எழுத்திலும், தமிழ் எழுத்திலும் எழுதியுள்ளனர். இதில் உள்ள தமிழ் எழுத்துகள் மிகவும் அழகாக எழுதப்பட்டுள்ளன. இவை அரசாங்க எழுத்து வல்லுநன் ஒருவனால் எழுதப்பட்டவை. மிக அழகிய தமிழ் எழுத்துகளில் தொன்மையானவை இவையே.

நல்ல வளர்ச்சியுற்ற தமிழ் எழுத்துகளும் வளர்ச்சியின் தொடக்கத்தில் இருந்த எழுத்துகளும் ஒரே காலத்தில் வழக்கிலிருந்திருக்கின்றன. இதற்கு என்ன காரணம் என்பது தெளிவாகத் தெரியவில்லை. அரசாங்கத்தில் பணிபுரிந்தோரிடம் எழுத்துகள் அழகும் வளர்ச்சியும் விரைவில் பெற்றன என்றும், பிற இடங்களில் சற்று தயக்கமான வளர்ச்சியைப் பெற்றன என்றும் கருத இடமிருக்கிறது.

பல்லவர் காலத்தில், சிம்மவிஷ்ணு, மகேந்திரன், முதல் நரசிம்மன், தந்திவர்மன், நிருபதுங்கன், அபராஜிதன், கம்பவர்மன் ஆகிய மன்னர்களின் ஆட்சிக் காலத்தைச் சேர்ந்த தமிழ்க் கல்வெட்டுகள் கிடைத்துள்ளன. முதல் நரசிம்மவர்மனின் திருக்கழுக்குன்றக் கல்வெட்டில் ஒரு சில வட்டெழுத்து உருவங்களும் உள்ளன. முதல் பரமேச்வரவர்மனின் கூரம் செப்பேட்டில் தமிழ் நல்ல அழகிய முறையில் எழுதப்பட்டுள்ளது. அரச அவையில் போற்றப்பட்ட இவ்வெழுத்து அழகு பெற்று, வளர்ச்சி பெற்று மலர்வதை தந்திவர்மனின் கல்வெட்டுகளில் காணலாம். திருவல்லிக் கேணியிலும், திருவெள்ளறையிலும் கிடைத்துள்ள இம்மன்னனின் கல்லெழுத்துகள் சிறந்த வனப்புடையவை. இவற்றின் அடிப்படையிலேயே பின்னர் ஒப்பற்ற வனப்புடைய தமிழ் எழுத்துகளை இராஜராஜனின் ஆட்சியில் காண்கிறோம்.

சோழர் காலத்திய எழுத்துகளை முற்கால சோழர் எழுத்து என்றும் பிற்கால சோழர் எழுத்து என்றும் பிரிக்கலாம். முற்கால சோழர் எழுத்துகள் பெரிய எழுத்துகளாக பெரும்பாலும் எழுதப்பட்டிருக்கும், பல்லவர் எழுத்துகளையே ஒத்திருக்கும். மிகவும் கவனத்தோடு பிழைகள் குறைந்து எழுதப்பட்டிருக்கும். இராஜராஜன் காலம் முடிய முற்கால சோழர் எழுத்து எனலாம். சோழர் காலத் தமிழ் எழுத்துகளிலேயே மிக ஒப்பற்ற வனப்பு வாய்ந்த எழுத்துகள் முதல் இராஜராஜன் காலத்திய எழுத்துகள்தாம். அவற்றிலும் தஞ்சைப் பெருங்கோயிலில் எழுதப்பட்டுள்ள எழுத்துகளுக்கு ஈடு இணை இல்லை என்றால் மிகையாகாது. இராஜராஜன் தென்னகத்திலேயே தலை சிறந்த எழுத்து வல்லுநர்களைக் கொண்டு இவற்றை எழுதி மகிழ்ந்தான் என்று தோன்றுகிறது.

இராஜராஜனுக்குப் பின்னர் தமிழகத்தில் நூற்றுக்கணக்கான கல்வெட்டுகள் பொறிக்கப்பட்டன. ஏராளமான கோயில்களும், அவற்றிற்கு வேண்டிய பரிசுகளும் கல்லில் வெட்டி வைக்கப்பட்டன. ஆயினும், இராஜராஜன் காலத்தில் காணப்பட்ட அழகும், அமைதியும் பிற்காலச் சோழர் கல்வெட்டுகளில் இல்லை. எனினும், நன்கு எழுதப்பட்டு இவை திகழ்கின்றன. கி.பி.13-ம் நூற்றாண்டு தொடக்கத்திலிருந்து எழுத்துகள் அழகு குன்றத் தொடங்கிவிட்டன. விஜயநகரக்கால (கி.பி. 14-ம் நூற்றாண்டு) எழுத்துகள் பெரும்பாலும் இன்றைய அமைதியைப் பெற்றுவிட்டன. இவை அழகின்றி பிழை மலிந்து காணப்படுகின்றன. கி.பி. 16,17-ம் நூற்றாண்டு நாயக்கர் காலச் செப்பேடுகளும், கல்வெட்டுகளும், விஜயநகரக் காலத்தைக் காட்டிலும் சீரற்ற நிலையில் தான் காணப்படுகின்றன.

பல்லவர் ஆட்சியில் முழுவதும் தமிழில் எழுதப்பட்டது போல பல கல்வெட்டுகள் வட்டெழுத்திலும் எழுதப்பட்டுள்ளன. இவை பற்றி வட்டெழுத்து என்னும் தலைப்பின் கீழ் காணலாம். பல்லவர்களின் கல்வெட்டுகள் தமிழிலும் வட்டெழுத்திலும் காணப்படுகின்றன. முதல் பல்லவ அரசர்களின் செப்பேடுகள் (தெலுங்கு, கிரந்த, கன்னட) திராவிட எழுத்துகளில் உள்ளன. பிற்காலத்திய செப்பேடுகள் கிரந்தத்திலும் தமிழிலும் உள்ளன. கிரந்த எழுத்துகளிலும், நாகரி எழுத்துகளிலும் உள்ள கல்வெட்டுகளும் உண்டு. அண்மையில் வட ஆற்காடு மாவட்டத்திலும் தருமபுரி மாவட்டத்திலும் கண்டுபிடிக்கப்பட்ட பல்லவர்

கால நடுகற்கள் வட்டெழுத்தில் உள்ளன. பல்லவர் அவையில் தமிழும், கிரந்தமுமே செல்வாக்குப் பெற்றிருந்தன. சில இடங்களில் வட்டெழுத்துகளும் இருந்தன என்று தெரிகிறது.

மதுரையைத் தலைநகராகக் கொண்டு கி.பி. 7-ஆம் நூற்றாண்டு முதல் 9-ஆம் நூற்றாண்டு வரை ஆண்ட பாண்டியர்களின் கல்வெட்டுகள் சில தமிழிலும், பல கிரந்தத்திலும் உள்ளன. அவர்களது செப்பேடுகள் அனைத்தும் வட்டெழுத்திலேயே காணப்படுகின்றன. இதிலிருந்து பாண்டிய அரசவையில் வட்டெழுத்துக்கே பெருமதிப்பு இருந்தது எனத் தெரிகிறது. ஆனால் அதே காலத்தில் இன்னம் தெற்கில் வேணாடு என்னும் பகுதியில் ஆய் மன்னர்களின் செப்பேடுகள் தமிழ் எழுத்தில் உள்ளன. ஆய்வேளிரின் அவையில் தமிழ் எழுத்துகள் செல்வாக்குப் பெற்றிருந்தன.

தமிழ்நாட்டின் பிறபகுதிகளில் அதியர், பழுவேட்டரையர், இருக்குவேளிர், முத்தரையர், பாணர், கங்கர் முதலிய சிற்றரசர்கள் ஆண்டிருக்கிறார்கள். அதியர்களின் கல்வெட்டு பல்லவ கிரந்த எழுத்துகளிலும், வட்டெழுத்திலும் உள்ளன. பழுவேட்டரையர் எழுத்துகள் தமிழிலும், கிரந்த எழுத்துகளிலும் உள்ளன. இருக்குவேளிர் எழுத்துகள் கிரந்தம், தமிழ், கன்னடம் ஆகிய எழுத்துகளில் உள்ளன. இவர்களுக்கும் கன்னடப் பகுதிக்கும் தொடர்பு இருந்திருக்க வேண்டும். முத்தரையர் கல்வெட்டுகள் தமிழில் உள்ளன. கங்கர், பாணர் கல்வெட்டுகள் தமிழ், வட்டெழுத்து, கிரந்தம் ஆகியவற்றில் உள்ளன.

சோழர்களின் கல்வெட்டுகள் பெரும்பாலும் தமிழிலும் கிரந்தத்திலும் உள்ளன. பாண்டிய நாட்டைக் கைப்பற்றிய போது சில காலம் வட்டெழுத்திலேயே எழுதிவந்தனர். பின்னர் பாண்டிய மண்டலத்திலும் தமிழிலேயே எழுதத் தலைப்பட்டனர். கொங்கு நாட்டில் கொங்குச் சோழர் என்ற அரசர்களது பல கல்வெட்டுகள் வட்டெழுத்தில் உள்ளன. பிற இடங்களில் தமிழில் உள்ளன. விஜயநகரப் பேரரசர்கள் தமிழகத்தை ஆளத் தொடங்கியதிலிருந்து வட்டெழுத்து தமிழகத்தில் வழக்கிலிருந்து மறைந்தது. தமிழ், கிரந்தம், தெலுங்கு, சில இடங்களில் கன்னடம் ஆகிய எழுத்துகள் வழங்கின.

### வடிவங்கள்

தமிழி நிலையிலிருந்து வளர்ச்சிபெறும் எழுத்துகளில் கீழ்வரும் மாறுபாடுகளைக் காணலாம்.

1. மெய்யைக் குறிக்க சில இடங்களில் புள்ளியிட்டும், பல இடங்களில் புள்ளி இடாமலும் எழுதப்பட்டு உள்ளன.
2. உயிர்க் குறிலையும், நெடிலையும் குறிக்க மெய்யில் இணைக்கப்பட்ட கோடுகள் படிப்படியாக அளவில் நீண்டு பின்னர் வளைத்து எழுதப்பட்டன.
3. 'ஆ'வைக் குறிக்கும் உயிர்க்குறி வளர்ந்து, நாளா வட்டத்தில் மெய்யிலிருந்துப் பிரிந்து தனித்துக் காலாக எழுதப்பட்டது.
4. 'இ'யைக் குறிக்கும் கோடு எழுத்தின் மேல் வலப்புறம் முதலில் எழுதப்பட்டது. இது பக்கத்தில் குறுக்கே இழக்கப்பட்டு மேலே நேர்கோணம் போல் எழுதப்பட்டது. பின்னர் கோணம் மறைந்தும் வளைத்து எழுதப்பட்டது. பின்னர் வலப்புறம் தொடங்கி இடப்புறம் வரை எழுத்தின் மேல் வளைத்து எழுதப்பட்டது. இந்நிலையில் வலப்புறம் வடிவுடன் இணைந்தும் இடப்புறம் வடிவைத் தொடாமலும் இருக்கும். பின்னர் இருபுறமும் தொடாமல் எழுத்தின் மேல் வளைத்து எழுதப்பட்டது. முடிவில் எழுத்தோடு இடப்புறத்தில் தொடங்கி, வலப்புறம் தொடாமல் மேலே வளைத்து இன்றுள்ளபடி எழுதப்பட்டது.
5. 'ஈ' ஐக் குறிக்கும் கோடு 'இ' போல் முதலில் இருகோடுகளுடன் இருந்தது. பின்னர் இடப்புறம் 'இ' போலவே வளைந்தபோது ஒரு சுழி இடப்பட்டது. முடிவில் வலப்புறம் சுழி இடப்படுகிறது.
6. 'உ' ஐக் குறிக்கும் குறி கீழே ஒரு கோடாக இருந்தது. காலப்போக்கில் வளைத்து எழுதப்பட்டது.
7. 'ஊ' ஐக் குறிக்க இருவளைவுகள் இணைத்து இடப்பட்டு பிறகு இன்றைய நிலையை அடைந்தது.
8. 'எ' ஐக் குறிக்க எழுத்தின் மேல் இடப்புறம் எழுதப்பட்ட கோடு நீண்டு, வளைந்து எழுத்திலிருந்து பிரிந்து கொம்பாக எழுதப்பட்டது. பல இடங்களில் குறிலைக் குறிக்க எழுத்தின் தலையில் புள்ளி இடப்பட்டது. (எகர ஒகரத்தியற்கையும் அற்றே என்பது தொல்காப்பிய சூத்திரம்).
9. 'ஏ' காரத்தைக் குறிக்க தனியாக குறி இல்லை. இக் குறியில் வேறுபாட்டைக் குறிக்க இரு சுழிகள் உள்ள கொம்பை நெடிலுக்கும் 'பெஸ்சி' பாதிரியார் கண்டு

பிடித்தார் என்று ஒரு கருத்து உள்ளது. ஆனால் இது பெஸ்சிக்கும் முற்பட்டகாலக் கல்வெட்டுகளிலேயே உள்ளது என்று டி.ஏ.கோபிநாதராவ் காண்பித்துள்ளார்.

10. 'ஐ' குறிக்க முதலில் இருகோடுகள் இடப்பட்டன. இவை வளைந்து வளர்ந்து இரு கொம்புகளாக வழங்கப்பட்டன. பின்னர் இரு கொம்புகளும் இணைந்து இன்றைய நிலையை அடைந்துள்ளன.

11. 'ஒ' வைக் குறிக்கும் குறி, எழுத்தின் மேல் இடப்புறம் இட்டது கொம்பாகவும், வலப்புறம் இட்டது காலாகவும் மாறின. குறிலைக் குறிக்க சில இடங்களில் புள்ளி இடப்பட்டது. பிற 'எ' கரக் குறியைப் போன்று வளர்ச்சி பெற்றன.

12. 'ஔ' வைக் குறிக்கும் பண்டைய எழுத்துகள் இல்லை. மிகவும் பிற்கால எழுத்துகளில் இன்றைய வடிவு காணப்படுகிறது. முற்காலத்தே அகர உயிர்மெய்யை எழுதி அருகில் 'வ்' எழுதினர் என்று கருத இடமிருக்கிறது. வீரசோழியம்: "அகரம் வகரத்தினோடியையந் தௌவாம் யகரத்தினோட கரமியைந்தையதாகும்" என்று குறிப்பது இதை உறுதி செய்கிறது.



# வட்டெழுத்து

இரா. நாகசாமி

தமிழகத்தில் தமிழ் மொழியை எழுதுவதற்கு வழங்கிய வட்டவடிவமான ஒரு வகைத் தமிழ் எழுத்துகளை வட்டெழுத்து என்பர். கி.பி. 13 - ஆம் நூற்றாண்டைச் சார்ந்த ஒரு கல்வெட்டில் இவ்வெழுத்து "வட்டம்" என்று அழைக்கப்பட்டுள்ளது. "திருமலை ஜீர்ணிக்கையால் உத்தாரணம் பண்ணினவிடத்து திருமலையில் கல்வெட்டு வட்டம் ஆகையால் தமிழாகப் படி எடுத்து" என்று கல்வெட்டு கூறுகிறது. திருக்குற்றாலத்து குற்றாலநாத சுவாமி கோயிலில் உள்ள ஒரு கல்வெட்டிலிருந்து, புரிந்து கொள்ள முடியாத வட்டம் நீங்கலாக மற்ற எல்லா கல்வெட்டுகளும் திரும்பவும் சுவரில் எழுதப்பட்டன என்று அறிகிறோம். இவற்றிலிருந்து இவ்வெழுத்தை அக்காலத்தார் வட்டம் என அழைத்தனர் என்றும் இதை அனைவராலும் அக்காலத்தே படிக்க முடியவில்லை என்றும், இதைப் படிக்கத் தெரிந்தோர் சிலர் இருந்தனர் என்றும் அறிகிறோம். இவ்வெழுத்து மலையாள நாட்டில் மிக அண்மைக் காலம் வரை வழங்கி வந்தது. இதற்கு 'தெக்கன் மலையாளம்' என்றும் 'நாநாமோன' என்றும் பெயர் உண்டு.

வட்டெழுத்தின் தோற்றத்தைப் பற்றி பல கருத்துகள் இதுகாறும் நிலவி வந்தன. திரு. டி. ஏ. கோபிநாதராவ் அவர்கள் வட்டெழுத்தும் பிராம்மி எழுத்திலிருந்தே வளர்ச்சி அடைந்தது என்று கூறியுள்ளார். இவர் பிராம்மி என்று கூறுவது தமிழகத்தில் குகைகளில் காணப்படும் தமிழி எழுத்துகளையேயாகும். மகாமகோபாத்யாய ஹரபிரசாத் சாஸ்திரி என்பார் கரோஷ்டி எழுத்திலிருந்து வட்டெழுத்து உருவாகியிருக்க வேண்டும் என்ற கருத்து கூறிப் போந்துள்ளார். வட்டெழுத்து பினீஷியன் எழுத்திலிருந்து உருவாக்கியிருக்க வேண்டும் என்றும் அசோகன் பிராம்மியிலிருந்து இவை வேறு ஆனவை என்றும் டாக்டர் பர்னல் கூறியுள்ளார். வடமொழி தமிழகத்தில் பரவுவதற்கு முன்னரே வட்டெழுத்து வழக்கிலிருந்ததால், பிராம்மியிலிருந்து இது வளர்ந்தது என்னும் கருத்து

ஏற்றுக்கொள்ள முடியாது என்றும் இவர் கூறியுள்ளார். டாக்டர் பூலர் "வட்டெழுத்து தமிழினுடைய ஒரு மாறுப்பட்ட வடிவம்தான். மராட்டியர்கள் எவ்வாறு 'மோடி' எழுத்தைப் பயன்படுத்தினரோ அவ்வாறு வியாபாரிகள் மட்டும் பயன்படுத்தும் எழுத்தாக இது இருந்தது" என்றும் கூறியுள்ளார்.

இக்கருத்துகள் அனைத்தும் எழுத்தாராய்ச்சி தொடக்க நிலையில் இருந்தபோது தெரிவிக்கப்பட்ட கருத்துகள். குகைகளில் காணப்படும் தமிழி எழுத்துகளுக்குப் பின்னர் கி.பி. 6-ம் நூற்றாண்டு வரை எவ்வித எழுத்துகளும் அண்மைக் காலம் வரை கிடைக்கவில்லை. ஆதலில் எவ்வாறு பண்டைய எழுத்து வட்டெழுத்தாக மாறியது என்று தெளிவாகக் கூற வடிவங்கள் கிடைக்கவில்லை. ஆயினும் திரு. டி.ஏ. கோபிநாதராவ் அவர்கள் திறனுடன் பண்டைய தமிழி எழுத்துகளிலிருந்து வட்டெழுத்து வளர்ந்தது என்று தெளிவாகக் காட்டினார்.

அண்மையில் வட ஆற்காடு மாவட்டத்தில் தமிழ் நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை பல நடுகற்களைப் படி எடுத்தது. இவை கி.பி. 6-ம் நூற்றாண்டிலிருந்து கி.பி. 9-ம் நூற்றாண்டுக்கு உட்பட்ட காலத்தைச் சார்ந்தவை. இவற்றில் பெரும்பாலானவை வட்டெழுத்தில் உள்ளன. கி.பி. 5-ம் நூற்றாண்டைச் சார்ந்ததாகக் காணப்படும் இரு நடுகற்கள் தருமபுரி மாவட்டம் இருளப்பட்டி என்னும் இடத்தில் இருந்து கிடைத்தன. இவையும் வட்டெழுத்தில் உள்ளன. அண்மையில் கண்டுபிடிக்கப்பட்ட கல்வெட்டுகள் பண்டையத் தமிழி எழுத்தில் இருந்துதான் வட்டெழுத்து வளர்ந்தது என்று தெளிவாகக் குறிக்கின்றன. ஆதலின் வட்டெழுத்தின் வளர்ச்சியைக் குறித்து இனி ஐயப்பாட்டுக்கே இடமில்லை. தமிழி எழுத்துகள் படிப்படியாக வட்டெழுத்தாக மலர்வதை ஒவ்வொரு எழுத்திலும் காட்டலாம்.

இதுகாறும் வட்டெழுத்தில் காலத்தால் முற்பட்டதாகக் கருதப்பட்டது செஞ்சியின் அருகில் திருநாதர்குன்று என்ற இடத்தில் கிடைத்த கல்வெட்டாகும். இது கி.பி. 5-ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகக் கருதப்பட்டது. ஆனால் அண்மையில் கண்டு பிடிக்கப்பட்ட கல்வெட்டுகள் இதைக் காட்டிலும் தொன்மையானவை. இவற்றில் பலவற்றைக் கவனித்தால் இவை தனி வட்டெழுத்தில் எழுதப்படவில்லை. வட்டெழுத்தும் தமிழும் கலந்தே எழுதப்பட்டுள்ளன; ஆதலின் தொடக்கத்தில் வட்டெழுத்தும் தமிழும் கலந்தே எழுதப்பட்டன என்பது தெளிவாகியது. இதன் அடிப்படையில் காணும் போது அரச்சலூரில் உள்ள கல்வெட்டு இரு

எழுத்துக்களின் தொடக்கத்தையும் காட்டுகிறது. இரண்டும் ஒரே கல்வெட்டில் கலந்தே எழுதப்பட்டுள்ளதையும் இங்கு காண்கிறோம். ஆதலின் வட்டெழுத்து கி.பி. 3-ம் நூற்றாண்டிலிருந்து தமிழகத்தில் வழக்கில் வந்தது என்று கூறலாம்.

வட்டெழுத்து பாண்டி நாட்டில் சிறப்பாக வழங்கியது என்றும், மலையாளப் பகுதிகளில் அண்மைக்காலம் வரை சிறப்புற்றிருந்தது என்றும் முன்னர் கூறினோம். ஆதலின் தமிழகத்தின் தென் பகுதியில் தோன்றியிருக்க வேண்டும் என்றும் அங்கு தான் வழக்கிலிருந்தது என்றும் கருத்து நிலவியது. ஆனால் அண்மைக்காலக் கண்டுபிடிப்புகளிலிருந்து தமிழகத்தின் வடபகுதியில் வடஆற்காடு, தென்னாற்காடு, செங்கல்பட்டு, தருமபுரி, கோவை முதலிய மாவட்டங்களில் (அதாவது பண்டைய கொங்கு நாடு, கங்கபாடி, பெரும்பாணப்பாடி, தொண்டை மண்டலம் ஆகிய பகுதிகளில்) பரவலாக இவ்வெழுத்து வழக்கிலிருந்தது என்று அறிகிறோம். காலத்தால் தொன்மையான வட்டெழுத்துக் கல்வெட்டுகள் அனைத்தும் தமிழகத்தின் வடபகுதியில்தான் கிடைத்துள்ளன.

பல்லவர்களின் கல்வெட்டுகள் தமிழ் எழுத்திலும், வட்டெழுத்தும் தமிழும் கலந்த எழுத்திலும் உள்ளன என்று கண்டோம். ஆக இருவகை எழுத்துகள் ஒன்றாக வளர்ச்சி பெற்றிருக்கின்றன. இரண்டும் தமிழ் மொழியை எழுதப்பயன்பட்டவைதான்.

கி.பி. 6-ம் நூற்றாண்டிலிருந்து கி.பி. 8-ம் நூற்றாண்டு வரை பல்லவர்களின் பல கல்வெட்டுகள் வட்டெழுத்தில் கிடைத்து உள்ளன. பாண்டி நாட்டில் ஏழாம் நூற்றாண்டிலிருந்து வட்டெழுத்துக் கல்வெட்டுகள் கிடைக்கின்றன. கி.பி. 8,9-ம் நூற்றாண்டைச் சார்ந்த பாண்டியர்களது செப்பேடுகள் அனைத்தும் வட்டெழுத்தில் உள்ளன. செப்பேடுகள் அரசனால் அளிக்கப்பட்டவை. ஆதலின் வட்டெழுத்து பாண்டியர் அவையில் சிறப்புற்றிருந்தது என்பது தெளிவு. பல்லவர்களது பகுதிகளில் வட்டெழுத்து வழக்கிலிருந்த போதிலும் செப்பேடுகளில் அது காணப்படவில்லை. சோழ மண்டலத்தில் வட்டெழுத்து செல்வாக்குப் பெறவில்லை. சோழர்கள் தமிழையே உபயோகித்தனர். ஆனால் பாண்டி நாட்டைக் கைப்பற்றிய போது அவர்கள் அப்பகுதிகளில் வட்டெழுத்தையே வழங்கினர். விரைவில் வட்டெழுத்தை விட்டு அங்கும் தமிழிலேயே எழுதத் தலைப்பட்டனர். கொங்கு நாட்டில் கொங்குச் சோழர் என்ற குலத்தோர் வட்டெழுத்தைப் பரவலாக உபயோகித்தனர். தொண்டை மண்டலத்தில் கங்கர், பாணர் பகுதிகளிலும்

வட்டெழுத்து கி.பி. 8-ம் நூற்றாண்டுக்கு பிறகு வழக்கற்று போயிற்று. கொங்கு நாட்டிலும், பாண்டியர் பகுதிகளிலும் கி.பி.12-ம் நூற்றாண்டு வரை வட்டெழுத்து வழங்கி பின்னர் அங்கும் மறைந்தது. கேரளத்தில் அது வளர்ந்து, கிரந்தமும் வட்டெழுத்தும் இணைந்து இன்றைய மலையாள எழுத்தாக மலர்ந்துள்ளது.



# கிரந்த எழுத்து

ச. ஹரிஹரன்

தமிழ் நாட்டில் வடமொழியை எழுத தொன்றுதொட்டு வழங்கிய எழுத்தை கிரந்தம் என்பர். வடமொழியில் கிரந்தம் என்றால் நூல் என்று பொருள். ஆதலின் வடமொழியை எழுத வழங்கிய எழுத்தையும் கிரந்தம் என்றனர் போலும். முதன்முதலில் இப்பெயர் எப்பொழுது வழக்கில் வந்தது என்று தெளிவாகத் தெரியவில்லை. கடந்த சில நூற்றாண்டுகளாகவே இப்பெயர் வழங்கி வந்துள்ளது. பல எழுத்துகளின் பெயர்களைக் குறிக்கும் 'சமவயங்க சுத்த' என்ற சமண நூலோ 'லலித விஸ்தரம்' என்ற பௌத்த நூலோ, இப்பெயரைக் குறிக்கவில்லை. திராவிடி என்னும் பெயருள்ள ஒரு எழுத்து லலிதவிஸ்தரத்தில் குறிக்கப்பட்டுள்ளது. இந்நூல் கி.பி. 5,6-ம் நூற்றாண்டைச் சார்ந்தது. அக்காலத்தில் தமிழகத்தில் வடமொழியை எழுத வழங்கிய எழுத்தும், தெலுங்கு-கன்னட பகுதியில் நிலவிய எழுத்தும் ஒன்று போலவே இருந்தன. ஆதலின் இவ்வெழுத்தையே திராவிடி என்று அழைத்தனர் போலும். கிபி.7-ம் நூற்றாண்டில் இருந்து தெலுங்கு கன்னட எழுத்துகளும், கிரந்த எழுத்துகளும் தனித்தனியாகப் பிரியத் தொடங்கின. தமிழ் நாட்டில் தமிழ் எழுத்துகளின் அமைதியைப் பின்பற்றியே இவ்வெழுத்துகள் வளர்ந்தன. திராவிடியில் இருந்து பிரிந்து, தமிழ் எழுத்தின் அடிப்படையில் தமிழகத்தில் வளர்ந்த இவ்வெழுத்தை கிரந்தம் என்று அழைக்கிறோம்.

தமிழி கல்வெட்டுகளில் பிராகிருதச் சொற்களை எழுத உபயோகிக்கப்பட்ட வடமொழி எழுத்துகளே கிரந்த எழுத்துகளின் முன்னோடிகள் எனலாம். தமிழகத்தில் பல குகைகளிலுள்ள கல்வெட்டிகளில் 'ஸ' என்னும் வட எழுத்தும், 'த' என்னும் வர்க்க எழுத்தும் காணப்படுகின்றன. அரிக்கமேட்டில் நடந்த அகழ்வாய்வில் எழுத்துக்கள் பொறித்த பானை ஓடுகள் கிடைத்துள்ளன. இவை கி.பி. 2-ம் நூற்றாண்டைச் சார்ந்தவை. இவற்றில் தமிழ் எழுத்துகளும்,

சாதவாஹனர் எழுத்துகளை ஒக்கும் வர்க்க எழுத்துகளும் உள்ளன. இவையே கிரந்த எழுத்துகளின் முன்னோடிகளாகும்.

**பல்லவ கிரந்தம்**

பல்லவர் காலத்திலிருந்து கிரந்த எழுத்துகளின் வளர்ச்சியைத் தொடர்ந்து அறியலாம். கி.பி. 3-ம் நூற்றாண்டின் இறுதியிலிருந்து ஆட்சி செலுத்திய பல்லவ மன்னர்கள், கன்னட-ஆந்திர மாநிலங்களின் தென் பகுதிகளையும் தமிழகத்தின் வட பகுதியையும் ஒன்றாக இணைத்து ஆண்டனர். ஆதலின் இம்மாநிலங்களின் மொழிகளும், எழுத்துகளும் இணைந்து திராவிட எழுத்தாகவும், மொழியாகவும் வளர இவர்கள் அடிகோலினர். கி.பி. 3,4-ம் நூற்றாண்டுகளில் ஆண்ட பல்லவர்களின் அவையில் பிராகிருதம் செல்வாக்குப் பெற்றிருந்தது. அக்காலத்தில் நாடெங்கும் பிராகிருத மொழி சிறப்பாக வழங்கி வந்தது. கி.பி. 4-ம் நூற்றாண்டின் இறுதியிலிருந்து பல ஒப்பற்ற காப்பியங்கள் சமஸ்கிருதத்தில் இயற்றப்பட்டன. பிராகிருத மொழியும் செய்யுள் மொழியாகி சமஸ்கிருதத்தோடு நெருங்கியது. ஆதலின் சமஸ்கிருத மொழி செல்வாக்கில் சிறந்தது. ஆதலின் கி.பி. 6-ம் நூற்றாண்டிலிருந்து பல்லவர்கள் சிறப்பாக சமஸ்கிருதத்தை உபயோகித்தனர். பல்லவர்கள் வழங்கிய கிரந்த எழுத்துகள் மிகவும் எழிலான வடிவுடையவை. ஆதலின் இவற்றைப் பல்லவகிரந்தம் என்று அழைப்பர்.

கி.பி. 6-ம் நூற்றாண்டிலேயே கிரந்தம் முழு வளர்ச்சியடைந்து காணப்படுகிறது. பல்லவ மன்னன் மகேந்திரவர்மனின் எழுத்துகள் பெரியவையாயும், கவனத்துடன் பொறிக்கப்பட்டவையாயும் விளங்குகின்றன. கிரந்த எழுத்துகளில் ஒப்பற்ற வடிவையும், எழிலையும் தோற்றுவித்தவன் கி.பி. 8-ம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஆண்ட இரண்டாம் நரசிம்மவர்மன் என்னும் பல்லவன் இராஜசிம்மன் ஆகும். இவன் கலை ஆர்வம் மிக்கவன். மாமல்லையில் உள்ள கலைச் செல்வங்களையும், காஞ்சி கைலாயநாதர் ஆலயத்தையும் தோற்றுவித்தவன் இவனே. இவன் கிரந்த எழுத்துகளைப் பல்வேறு அமைதிகளில் எழுதி மகிழ்ந்திருக்கிறான். வடிவங்களில் மாற்றங்களை உடைய நால்வகைக் கிரந்த எழுத்துகளை, இவன் தோற்றுவித்த கலைக்கோயில்களில் காணலாம். எழுத்துகளை மயில்

போலும், அன்னப்பறவை போலும், பாம்பு போலும், பல்வகைக் கொடி போலும், எழிலார்ந்த சித்திரங்களைப் போலும் எழுதி மகிழ்ந்த தமிழ் மன்னன் இவனே. எழுத்துகளைச் சித்திரங்களாகவே எழுதி மகிழ்ந்த இவன் போலும் வேறொரு தமிழ் மன்னன் இல்லை. கி.பி. 8-ம் நூற்றாண்டின் இறுதிக்குள்ளாக பல்லவராட்சியில் கிரந்த எழுத்துகள் சற்றேறக்குறைய இன்றைய நிலையைப் பெற்றுவிட்டன.

பல்லவராட்சியில் ஏற்பட்ட மற்றொரு எழுத்துப் புரட்சியையும் இங்கு குறித்தல் வேண்டும். பல்லவர் கடல் கடந்த கீழை நாடுகளுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தனர். கீழை நாடுகளில் எல்லாம் பௌத்தமும், இந்து மதமும் சிறப்பாக பரவி இருந்தன. பல்லவகிரந்த எழுத்துகள் அங்கெல்லாம் பரவின. நல்ல சமஸ்கிருதத்தில் ஏராளமான கல்வெட்டுகள் அங்கு பொறிக்கப்பட்டன. அவை எல்லாம் பல்லவ கிரந்த எழுத்துகளில் மிளிர்வதைக் காணலாம். இவ்வெழுத்துகளே கீழை நாடுகளில் வளர்ந்து அந்தந்த நாட்டு எழுத்துகளாகப் பரிணமித்தன. கம்போடியா, சுமத்ரா, ஜாவா ஆகிய பகுதிகளில் இவ்வாறு வளர்ந்த எழுத்துகள் உள்ளன.

கி.பி.8-ம் நூற்றாண்டில் தமிழகத்தின் தென் பகுதியை பாண்டியர் ஆண்டனர். அவர்களும் பல்லவர்களைப் போலவே தமிழிலும் சமஸ்கிருதத்திலும் சாஸனங்களைப் பொறித்துள்ளனர். அவர்களது செப்பேடுகளிலும் கல்வெட்டுகளிலும் சமஸ்கிருத மொழி வருமிடத்து கிரந்த எழுத்துகளையே வழங்கியுள்ளனர். பாண்டி நாட்டில் வழங்கிய கிரந்த எழுத்துகளும் பல்லவ கிரந்தத்தைப் போலவே இருந்ததால் அவற்றையும் பல்லவ கிரந்தம் என்றே அழைப்பர். ஆனைமலை, அழகர் மலை, திருமெய்யம், குடுமியாமலை முதலிய இடங்களில் உள்ள பாண்டியர் கல்வெட்டுகளும், வேள்விக்குடி, சின்னமனூர், ஸ்ரீவரமங்கலம், தளவாய்புரம் ஆகிய செப்பேடுகளிலும் கிரந்த எழுத்துகள் பொறிக்கப்பட்டுள்ளதைக் காணலாம்.

தகடூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட அதியர்களில் கி.பி. 8-ம் நூற்றாண்டில் சிறந்தவன் சோமன் என்னும் அதியேந்திரன் புகழ் பெற்றவனாகும். இம்மன்னன் நாமக்கல்லில் இரு குகைக் கோயில்களைத் தோற்றுவித்துள்ளான் இவற்றில் எழில் வாய்ந்த கிரந்த

எழுத்துக்கள் உள்ளன. பல்லவரது எழுத்துகளைப் போன்றே இவையும் உள்ளன. கொடும்பாளூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட வேளிர்களும் நல்ல கிரந்த எழுத்துகளை வழங்கியுள்ளனர். வேணாட்டரசர்களான ஆய்வேளிர்கள் நாகரி எழுத்தை அதிகம் உபயோகித்தபோதிலும் கிரந்த எழுத்துகளையும் உபயோகித்துள்ளனர்.

சோழப் பேரரசர்களும் கிரந்த எழுத்துகளை உபயோகித்துள்ளனர். கல்வெட்டுகளிலும், செப்பேடுகளிலும் அக்கால கிரந்த எழுத்துகளைக் காணலாம். சோழ மன்னர்களால் வழங்கப்பட்ட செப்பேடுகளின் முத்திரைகளில் கிரந்த எழுத்துகளே உள்ளன. சோழர்களுடைய சாஸனங்களைத் தவிர காசுகளிலும் கிரந்த எழுத்துக்கள் வழங்கப்பட்டுள்ளன. சோழர்களின் காசுகள் பலவற்றில் நாகரி எழுத்துகள் வழங்கப்பட்டுள்ளன. ஆயினும் சிலவற்றில் கிரந்த எழுத்துகளும் உள்ளன. மதிராந்தகன், கங்கைகொண்ட சோழன், மலை நாடு கொண்ட சோழன் என்ற பெயர்கள் கொண்ட காசுகளில் கிரந்த எழுத்துகளில் பொறிக்கப்பட்டுள்ளன.

விஜயநகரப் பேரரசர்களும் அவர்களுக்குப் பின் வந்த நாயக்கர்களும் கிரந்த எழுத்துகளை உபயோகித்துள்ளனர். சுமார் 1950 வரை கிரந்த எழுத்துகளே தமிழகத்தில் வடமொழிக்கு உபயோகிக்கப்பட்டு வந்தன. பெரும்பாலான வடமொழி நூல்கள் கிரந்த எழுத்திலேயே அச்சிடப்பட்டன. இதற்குக் காரணம் இது தமிழ் எழுத்தின் அடிப்படையிலேயே வளர்ந்ததாலும், தமிழறிந்தவர்கள் எளிதில் அறிய முடியுமாகையாலும் இதுவே சிறப்புற்று திகழ்ந்தது. இப்பொழுது நாகரி எழுத்துகள் பெற்றுவரும் செல்வாக்கினால் 1500 ஆண்டுகளுக்கு மேலாகச்சீரும் சிறப்புடனும் திகழ்ந்த கிரந்த எழுத்துகள் மறைந்து வருகின்றன.

தமிழ் நாட்டில் தொன்றுதொட்டே தமிழ் மொழியுடன் வடமொழியும் எழுதப்பட்டது என்று கண்டோம். தமிழ்ப் பகுதியின் இடையிலே வடமொழிச் சொற்களும், வடமொழிப் பகுதியின் இடையிலே தமிழ்ச் சொற்களும் எழுத வேண்டிய தேவை ஏற்பட்டது. அதுபோன்ற இடங்களில் கிரந்த எழுத்துகளின் இடையில் தமிழ் எழுத்துகளையும், தமிழ் எழுத்துக்களின் இடையில் கிரந்த எழுத்துகளையும் வழங்கியுள்ளனர்.

◇✠◇

# பிற எழுத்துகள்

ச. ஹரிஹரன்

### நாகரி

கி.பி. 6-ஆம் நூற்றாண்டிலிருந்து இந்தியாவின் வடபகுதியில் சமஸ்கிருத மொழியை எழுத வழங்கப்பட்ட ஒரு வகை எழுத்துகளை நாகரி என்பர். இதை 'தேவநாகரி' என்றும் அழைப்பர். பாடலிபுத்திரத்திற்கு நகரம் என்றும் பெயர் இருந்தது என்றும், அங்கு முதலில் வழங்கியதால் நாகரி என்னும் பெயர் ஏற்பட்டது என்றும் வல்லுநர் குறிப்பர். நாகரி எழுத்துகள் பிராம்மியிலிருந்து தோன்றியவை.

தமிழ்நாட்டில் வடமொழியை எழுத கிரந்த எழுத்துகள் வழங்கின என்று கண்டோம். நாகரி எழுத்தும் ஒரு சில இடங்களில் தமிழகத்தில் வழங்கப்பட்டுள்ளதைக் காண்கிறோம். கி.பி. 8-ம் நூற்றாண்டில்தான் இது இந்தியாவின் வடபகுதியில் சிறப்பையும் முழுமையையும் பெற்றது. அதே காலத்தில் தமிழகத்திலும் இவ்வெழுத்து சிறப்பாக எழுதப்பட்டுள்ளது. மாமல்லபுரத்துக்கு அருகில் சாளுவங்குப்பம் என்று ஒரு இடம் இருக்கிறது. அங்கு இரண்டாம் நரசிம்மவர்மன் தோற்றுவித்த ஒரு குகைக் கோயில் இருக்கிறது. அக்கோயிலை 'நான் தோற்றுவித்தேன்' என அம்மன்னன் பல வடமொழிச் செய்யுட்களில் கூறியுள்ளான். இச்செய்யுட்கள் ஒரு புறத்தில் கிரந்த எழுத்தில் எழுதப்பட்டுள்ளன. மறுபுறத்தில் இதே செய்யுட்கள் நாகரி எழுத்தில் எழுதப்பட்டுள்ளன. இம்மன்னன் கலையார்வம் மிக்கவன் என்று முன்னரே கண்டோம். ஆதலின் புதிதாக பாரதத்தின் வடபகுதியில் செல்வாக்கு பெற்றுவரும் நாகரி எழுத்திலும் இங்கு எழுதி வைத்திருக்கிறான். காஞ்சியில் உள்ள கைலாயநாதர் ஆலயம் இவனுடைய ஒப்பற்ற படைப்பு ஆகும். அங்கு இம்மன்னன் முன்னூற்றுக்கும் மேற்பட்ட தன் பட்டங்களைக் கல்லில் எழுதி வைத்திருக்கிறான். அவற்றில் ஒவ்வொரு பட்டத்தையும் நான்கு விதமான எழுத்துகளில் எழுதியிருக்கிறான். இவற்றில் மூன்று எழுத்துகள்

மூன்று வகையான கிரந்த எழுத்துகள் ஆகும். நான்காவது நாகரி எழுத்தாகும். இம்மன்னன் கி.பி. 8-ம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஆண்டவன். எழுத்திலும், கலையிலும், கட்டிடத்திலும் பல்வேறு புதுமையைக் கண்டவன்.

கி.பி. 8-ம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வேணாட்டை ஆண்ட ஆய்வேளிர் மன்னர்களில் கருநந்தடக்கன் என்ற மன்னன் நாகரி எழுத்துகளில் செப்பேடு வெளியிட்டுள்ளான். இதன் பிறகு நாகரி எழுத்துகள் கி.பி. 14-ம் நூற்றாண்டு வரை கல்வெட்டு அதிகம் கிடைக்கவில்லை. ஆயினும் சோழப் பேரரசர்கள் தங்களுடைய காசுகளில் நாகரி எழுத்தை உபயோகித்துள்ளனர். உத்தமசோழன், ராஜராஜன், கங்கைகொண்ட சோழன், இராஜேந்திரசோழன் முதலிய மன்னர்களின் பெயர்கள் காசுகளில் நாகரி எழுத்துகளில் குறிக்கப்பட்டு உள்ளன. கி.பி. 13-ம் நூற்றாண்டிலிருந்து தென்னகத்தே வழங்கிய நாகரி எழுத்துகளை "நந்தி நாகரி" என அழைப்பர் கோசல மன்னர்கள், விஜயநகரப் பேரரசர்கள் ஆகியவர்களின் கல்வெட்டுகளிலும், செப்பேடுகளிலும் நந்திநாகரி காணப்படுகிறது.

## தெலுங்கும், கன்னடமும்

தெலுங்கு, கன்னடம் ஆகிய இரு திராவிட மொழிகளும் தங்கள் வளர்ச்சிக்கு துவக்கத்தில் மௌரியப் பேரரசன் அசோகனின் பிராம்மிக் கல்வெட்டுகளை பின்பற்றின. கர்நாடகத்திலும், ஆந்திர தேசத்திலும் காணப்படும் அசோகனின் பிராம்மி கல்வெட்டுகளில் அந்தந்த மாநிலங்களில் வழக்கிலிருந்த சொற்றொடர்கள் இடம் பெற்றுள்ளன. மாநிலங்களுக்கேற்ப ஒரு சில மாற்றங்களுடன் தெலுங்கு-கன்னட எழுத்துகள் பிராம்மியிலிருந்து உதயமாயின. மேற்கே பனவாசியை ஆண்ட கடம்பர்கள், வாதாபியை ஆண்ட சாளுக்கியர்கள் கல்வெட்டுகளிலும், கிழக்கே சாலங்காயனர்கள், வேங்கியைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட சாளுக்கியர்கள் ஆகியோர் கல்வெட்டுகளிலும் தெலுங்கு, கன்னட எழுத்துகள் உபயோகிக்கப்பட்டன. கி.பி. 7-ஆம் நூற்றாண்டு வரை இவ்விரு பகுதிகளில் வழக்கிலிருந்த எழுத்துகளில் மாறுபாடுகள் அதிகம் காணப்படவில்லை.

கி.பி. 7-ஆம் நூற்றாண்டின் இடையிலிருந்து, தெலுங்கு, கன்னட எழுத்துகளின் இடைக்காலத் தோற்றம் உருவாகியது. மேற்குப் பகுதியில் வாதாபி சாளுக்கியர்கள், கங்கபாடியை ஆண்ட கங்கர்கள் ஆகியோரும் கிழக்குப் பகுதியில் வேங்கி சாளுக்கியர்களும், அவர்கள் கீழ் உள்ள

குறுநில மன்னர்களும் தங்கள் கல்வெட்டுகளில் இதைக் கையாண்டனர், மேலைச் சாளுக்கியர் கல்வெட்டுகளில் எழுத்துகள் வலது பக்கம் சரிவாக எழுதப்பட்டுள்ளன. கீழைச் சாளுக்கியர்களின் கல்வெட்டுகளில் எழுத்துகள் நேராகவும், சற்று சதுர வடிவாகவும் எழுதப்பட்டுள்ளன. இக்காலத்தில்தான் தெலுங்கு, கன்னட மொழிகள் கல்வெட்டுகளில் இடம் பெறத்தலைப்பட்டன இதுகாறும் உள்ள கல்வெட்டுகளில் தெலுங்கு கன்னட எழுத்துகள் வழக்கிலிருந்த போதிலும், கல்வெட்டுகளின் மொழி சமஸ்கிருதம் அல்லது பிராகிருதமாகவே இருந்து வந்தது. கன்னட மொழிக் கல்வெட்டுகளில் மிகவும் தொன்மை வாய்ந்தது, வாதாபி வைணவக் குகையின் வெளிப்புறத்தில் பொறிக்கப்பட்டுள்ள சாளுக்கிய மன்னன் மங்களேசன் (596-610) காலத்தைச் சார்ந்ததாகும். கி.பி.634-ல் பொறிக்கப்பட்ட இரண்டாம் புலிகேசியின் 'ஐஹொளே' கல்வெட்டின் இறுதியில் கன்னட மொழி இடம் பெற்றுள்ளது. வாதாபி சாளுக்கியர்கள் காலத்துச் செப்பேடுகள் சமஸ்கிருத மொழியில் அமைந்தபோதிலும், அவர்களது கல்வெட்டுகள் பெரும்பாலும் கன்னட மொழியில் உள்ளன.

தெலுங்கு மொழிக் கல்வெட்டுகளில் மிகவும் தொன்மை வாய்ந்தது ரேணாட்டைச் சார்ந்த தெலுங்குச் சோழர்களின் கல்வெட்டுகளாகும். ஆந்திரபிரதேசத்தின் கடப்பை, அனந்தபூர் மாநிலங்களில் காணப்படும் இக்கல்வெட்டுகள் கி.பி. 6-ம் நூற்றாண்டு முதல் கி.பி.8-ஆம் நூற்றாண்டு வரையான காலத்தைச் சார்ந்தவை. கன்னட மொழிக்கும், தெலுங்கு மொழிக்கும், எழுத்துகள் ஒன்றான போதிலும், இரு மொழிகளுக்கும் உள்ள வேறுபாடுகள் இக்காலம் தொட்டே நன்கு விளங்க ஆரம்பித்தன. இத்தெலுங்குச் சோழர்களின் கலமல்லா கல்வெட்டுகளில், தமிழ்-கிரந்தத்திற்கும், தெலுங்கு எழுத்துகளுக்கும் சில ஒற்றுமைகள் காணப்படுகின்றன.

தெலுங்கு - கன்னட கல்வெட்டுகள் முடிவுறும்போது, அரசனின் பெயரான 'ஸ்ரீஹரிஹர' என்ற பெயரிலோ அல்லது 'ஸ்ரீவிருபாக்ஷ', 'ஸ்ரீதிரியம்பக' என்று இறைவனின் பெயரிலோ எழுதப்பட்டிருக்கும். கி.பி. 13-ஆம் நூற்றாண்டில் ஆட்சி செய்த ஹொய்சள மன்னன் மூன்றாம் நரசிம்மனின் காலத்துக் கல்வெட்டு 'தேவராச' என்ற கன்னட எழுத்தோடு முடிவுறுகிறது. ஸ்ரீகிருஷ்ண தேவராயரின் பொய்யளபந்தா செப்பேட்டுச் சாசனம் 'ஸ்ரீவிருபாக்ஷ' என்ற தெலுங்கு எழுத்துகளோடு முடிவு பெறுகிறது.

## மராட்டிய எழுத்து

மராட்டிய மொழியில் பொறிக்கப்பட்ட கல்வெட்டுகளும் தமிழகத்தில் காண கிடைக்கின்றன. தஞ்சைப் பெருவுடையார் கோயிலில் 'மோடி' என்னும் எழுத்தில் மராட்டிய மொழிக் கல்வெட்டுகள் சில உள்ளன. இக்கல்வெட்டுகளில் தஞ்சையில் ஆட்சி செய்த மகாராஷ்டிர வம்சத்தின் வரலாறு விரிவாகக் காணப்படுகிறது. இக்கல்வெட்டு கி.பி. 1803 - ஆம் ஆண்டு தஞ்சையின் கடைசி அரசனான சரபோஜியால் பொறிக்கப்பட்டது.

## பிற எழுத்துகள்

இந்திய எழுத்துகள் தவிர, பிற நாட்டு மொழிகளில் பொறிக்கப்பட்ட கல்வெட்டுகளும் காணப்படுகின்றன. உதாரணமாக, மேற்கு ஆசியப் பகுதியிலிருந்து மேலைக் கடற்கரைக்கு வந்து அங்கேயே தங்கிய வணிகர்கள் சிலருக்குச் சேர மன்னன் ஒருவன் இருப்பிடத்தையும், சில சலுகைகளையும் வழங்கி இருக்கிறான். அவற்றைத் தெரிவிக்கும் செப்பேட்டுச் சாசனம் தமிழ் மொழியில் மட்டுமல்லாமல் வந்தவர்களுக்கு உரிய ஹீப்ரு மொழியிலும் வழங்கப்பட்டுள்ளது.



# கல்வெட்டின் அமைப்பு

நடன. காசிநாதன்

கல்லில் எழுத்துகளைப் பொறிக்கும் வழக்கம் மிகப் பழங்காலந் தொட்டே தமிழகத்தில் நிலவி வந்துள்ளது. தொல்காப்பியம், புறநானூறு, அகநானூறு போன்ற நூல்களில் இருந்து போரில் வீர மரணம் அடைந்த வீரர்களுக்கு நடுகல் நட்டு வழிபடும் பழக்கமும் அந்நடுகற்களில் அவர்களுடைய வீரச் செயல்களைப் பற்றி பொறிக்கும் பழக்கமும் தமிழகத்தில் தொன்றுதொட்டு இருந்துவந்துள்ளது என்பது தெரிகிறது. அதற்குச் சான்றாக வீர மரணம் அடைந்த போர் வீரனைப் பற்றிக் குறிப்பிடும் நடுகற்கள் ஏராளமாகக் கிடைத்துள்ளன. தமிழகத்தில் கிடைக்கப்பெற்றுள்ள கல்வெட்டுகளாயினும் செப்பேடுகளாயினும், ஒவ்வொன்றையும் ஐந்து பகுதிகளாகப் பிரித்துவிடலாம். அவை மங்கலவாசகம், சாசனம் எழுதப்பட்ட காலம், சாசனச் செய்தி, கையெழுத்துகள், ஓம்படைக் கிளவி என்பனவாம்.

**மங்கலச் சொல் :**

மங்கலவாசகம் கல்வெட்டின் தொடக்கத்தில் பொறிக்கப் பட்டிருக்கும். பெரும்பாலான கல்வெட்டுகளில் 'ஸ்வஸ்தி ஸ்ரீ' (மங்களமுண்டாகட்டும்) என்னும் சொல்தான் காணப்படுகிறது. வேறு சில ஆரம்பச் சொற்களும் உள. பல்லவர் காலச் செப்பேடுகள் சிலவற்றில் "ஜிதம்பகவதா" என்ற சொல் காணப்படுகிறது. ஆய் மன்னன் அளித்த திருப்புறச்செப்பேடு "நமோ நாராயணாய" என்று ஆரம்பிக்கிறது. மற்றொரு ஆய் மன்னனின் பாலியத்துச் சாசனம் "ஓம் ஸ்வஸ்தி ஸ்ரீ" என்று ஆரம்பிக்கிறது. கி.பி. பதினாறாம் நூற்றாண்டிலிருந்து இன்னும் வேறு சில சொற்களும் ஆரம்பத்தில் உபயோகப்படுத்தப்பட்டுள்ளன. "அருளிச் செயல்" "ஹரி நன்றாக குருவே துணை", "ஹரி சுபமஸ்து", "ஹரி ஸ்ரீ கணபதயே நம", "சிவமயம்" ஆகியவைகளாகும். செப்பேடுகளில் உள்ள சமஸ்கிருத பகுதிகளில் மங்கலத் தொடரை அடுத்து ஆண்டவனது அருளை வேண்டும் சுலோகங்கள் சிலவும் காணப்படுகின்றன. அதன் பின்னர் எம்மன்னன் கொடையளிக்கிறானோ அம்மன்னனின்

முன்னோர்களைப் பற்றிய புராண மரபையும், உண்மை வரலாறுகளையும் காணலாம். செப்பேடுகளின் தமிழ்ப் பகுதியிலும் கொடையளிக்கும் மன்னனின் முன்னோர்களைப் பற்றிய வரலாறு காணப்படுகிறது.

## கல்வெட்டின் காலம்

அதன் பின்னர், கொடையளித்த காலத்தில் ஆட்சிபுரிந்த மன்னனையும், அம்மன்னனது ஆட்சி ஆண்டும் ஒரு சில சமயங்களில் அதற்கு ஈடான சகவருடத்தையோ அல்லது கொல்லம் ஆண்டையோ சேர்த்தும் குறிக்கப்பெற்றுள்ளன. சோழர் கல்வெட்டுகள் அரசனது பெயரையும் ஆண்டையும் குறிக்கும் முன்னர் மெய்க்கீர்த்தி என்ற ஒன்றை (முதலாம் இராஜராஜன் காலத்திலிருந்து) சேர்த்துள்ளன. அம்மெய்க் கீர்த்திகளில் அரசனின் வீரச் செயல்கள் வரிசைப் படுத்திக் கூறப்பட்டு இருக்கும். மெய்க்கீர்த்தியைக் கொண்டே இது இன்ன அரசனைச் சார்ந்த கல்வெட்டு என்று எளிதில் கண்டுபிடித்து விடலாம். அம்மன்னனின் பட்டத்தரசி யார் என்பதையும் சில மன்னனர்களின் மெய்க்கீர்த்திகள் தெரிவிக்கின்றன. சோழ மன்னர்கள் வீரராசேந்திரன், அதிராசேந்திரன், முதலாம் குலோத்துங்கன், விக்கிரமசோழன், இரண்டாம் குலோத்துங்கன் அவனுக்குப் பின்வந்தவர்கள் ஆகியவர்களின் மெய்க்கீர்த்திகள் அவர்களின் பட்டத்தரசிகளோடு "செம்பொன் வீரசிம்மாசனத்தில்" வீற்றிருந்ததைத் தெரிவிக்கின்றன.

## கல்வெட்டின் நோக்கம்

அடுத்து, கல்வெட்டின் பொறிக்கப் பெற்ற காரணத்தை விளக்கும் பகுதி காணப்படும். பெரும்பாலான கல்வெட்டுகளில் கோயில்களும் நிலம் தன்மமாக வழங்கியதையோ அல்லது கோயில்களில் திருநொந்தா விளக்கு அமைப்பதற்கு "சாவாமூவாப் பேராடு, பசு அல்லது எருமை" கொடுத்ததையேதான் குறிக்கின்றன. நிலம் கோயிலுக்கு விற்கும் பொழுதாயினும் சரி, பிறறொருவருக்கு விற்பதாயினும் சரி அந்நிலத்தின் பரப்பளவு, அதன் நான்கு பக்க எல்லைகள், அந்நிலத்தைச் சார்ந்திருக்கும் பிறபொருள்கள், அந்நிலத்திற்கு நீர் பாய்ச்சும் வாய்க்கால் ஆகியவை விரிவாகக் குறிக்கப்பட்டுள்ளன. "இந்நாற்பாற் கெல்லைக்குட்பட்ட உண்ணிலம் ஒழிவின்றி" "உடும்போடி ஆமை தவழும் இடம்" அனைத்தும் "கீழ் நோக்கிய கிணறும், மேல் நோக்கிய மரமும், மீன்படு பள்ளமும், தேன்படு பொதும்பும், புற்றும் தெற்றியும்" ஆகிய எல்லாம் விற்கப்பட்டன

என்று குறிக்கப் பெற்றிருக்கும். சில இடங்களில் நிலத்தின் பெயர் கூடக் குறிப்பிடப் பெற்றுள்ளது. சிவன் கோயிலுக்கு நிலம் விற்கப் பட்டபோதெல்லாம் சண்டேசுரர் பெயராலேயே விற்கப்பட்டன. மற்ற பொருள்களை கொடையாகக் கோயிலுக்கு அளித்தால் அவைகள் நன்கு விளங்கும் வண்ணம் சொல்லப்பட்டுள்ளன. ஒரு சில காசை ஒருவனிடம் தந்து, கொடுத்தவனின் நன்மைக்காக கொடை அளி என்று கூறும் போது கொடுத்த "முதல் கெடாது பொலி ஊட்டாகக் கொண்டு" வந்த பொலி (வட்டி)யில் கொடை அளிக்க வேண்டும் என்று கூறப்பெற்றிருக்கும். அத்தோடு வட்டி விகிதமும் குறிக்கப்பெற்றிருக்கும். அவ்வாறு அளிக்கப்பெற்ற கொடை சந்திரன் சூரியன் உள்ளளவும் நிலை பெற்றிருக்கும் என்றும் குறிக்கப்பட்டிருக்கும்.

## கையெழுத்து

அடுத்து கொடை அளித்தவனின் கையெழுத்தும், அதை கொடையளித்தவன் சொல்ல, எழுதிய ஊர்க்கணக்கன் கையெழுத்தும், சில கல்வெட்டுகளில் அதைக் கல்லில் பொறித்த தச்சனின் கையெழுத்தும், சாட்சிகளின் கையெழுத்துகளும் காணப்படும்.

## கல்வெட்டின் முடிவு

இறுதியாக, அளிக்கப்பட்ட கொடையை "பன்மாஹேஸ்வரர் ரக்ஷை" என்றோ "வைஷ்ணவர் ரக்ஷை" என்றோ குறித்துவிட்டு அக்கொடைக்குத் தீங்கு நினைத்தாலோ அல்லது தீங்கு செய்தாலோ "கங்கைக் கரையிலே காராம் பசுவைக் கொன்ற தோஷத்தில் போவார்கள்" என்றோ "இத்தர்மத்துக்கு அஹிதம் நினைத்தார் கங்கையிடை குமரியிடை எழு நூற்றுக் காதத்திலுஞ் செய்தார் செய்த பாவத்துப் படுவார்" என்றோ குறிக்கப்பெற்றிருக்கும். பிற்காலக் கல்வெட்டுகளில் "இத்தர்மத்துக்கு யாதுமொருவன் அஹிதம் நினைத்தால் திருவேங்கடமுடையானுக்குத் துரோகியுமாகி தன்னுடைய மாதா பிதாவையும், தனது குருவையும் கங்கைக் கரையிலே வதைத்த தோஷத்திலே போகக் கடவானாகவும்" என்றும் "யாதுமொருவன் அகிதம் பண்ணினால் சிதம்பரம், சீயாழி, புள்ளிருக்கு வேளூரிலே நெருப்பிட்ட பாவத்திலே போகக் கடவன்" என்று குறிக்கப்பெற்றிருக்கும். பலர் கூடி நிறைவேற்றும் தீர்மானங்களைக் குறிக்கும் கல்வெட்டாயின் அதில் "இவையிற்றுக்கு அழிவு செய்வார்

திருவாணை புவனமுழுதுடையாராணை" என்றும், "இது இறக்குவான் மதுராந்தகன் கலச்சோற்றைத் தின்பான்" என்றும் "மாறுவான் சிவ துரோகியுமாய், மோவாய் புக்கு முலையெழுந்தானுமாய், ஒருவனுக்கும் ஒருத்திக்கும் பிறந்தானுமல்லானாய், கோமாங்கி சத்தை புசிப்பானுமாய், கங்கையிடை குமரியிடை குரால் பசு கொன்றான் பாவம் கொள்வான்" என்றும் கூறும். மதத்தைச் சம்பந்தப்படுத்திக்கூறும் சொற்றொடர்களும் உண்டு. "இத்தன்மத்துக்கு ஆதாமொருவர் பிசகு பண்ணினால் கெங்கைக் கரையிலே காராம் பசுவைக் கொன்ற தோஷத்திலே போவார்களாகவும், துலுக்கரிலே யாதாம் ஒருவர் பிசகு பண்ணினால் மகாவுலே மிறுகத்தினால் வகிறு சாப்பிட்ட தோஷத்திலே போவாராகவும்" என்பன போன்று ஒரு சில சொற்றொடர்கள் உண்டு. கொடையைக் காப்பாற்றினால் அதனால் கிடைக்கும் நன்மையும் குறிக்கப் பெற்றிருக்கும். கொடையைக் "காப்பவர்கள் அடி என் முடிமேலின என்றும்" "இத்தன்மத்தை ரக்ஷித்தார் அஸ்வமேதயாகஞ் செய்த பலம் எய்துவாராகவும்" என்றும் குறிப்பிடப் பெற்றிருக்கும். "இந்த தன்மத்தை நடத்தினவன் அறுபத்துனாலு திருவிளையாடல்களும் விளையாடின அழகிய சொக்கநாதர் அருளைப் பெற்று, அங்கையக்கண்ணியார் அருளைப் பெற்று பிறுது விராச்சியம் பண்ணி சுகமேருயிப்பான்" என்றும் கூறும்.

செப்பேடுகளில் சமஸ்கிருதப் பகுதியில் "பிராம்மணன் சொத்து கொடிய விஷம். வேறு எந்த விஷமும் விஷமாகாது. விஷம் ஒருவனைக் கொல்லும்; பிராம்மண சொத்தோ புத்திர பௌத்திரர்களைக் (கொல்லும்)"

(ஸ்லோகம்) "தான் அளித்தது பிறர் அளித்தது எதுவாயிலும் பூமியை அபகரிக்கும் ஒருவன் அறுபதினாயிரம் ஆண்டுகள் மலத்தில் புழுவாகப்பிறந்து உழல்வான்".

(ஸ்லோகம்) "அநேகர் நிலம் அளித்திருக்கிறார்கள். பலர் அதைக் காப்பாற்றியிருக்கிறார்கள் எந்த எந்த அளவு பூமியோ அந்த அந்த அளவு பயன்" என்று குறிப்பிடப்பட்டிருக்கும். இந்த சுலோகத்தின் தமிழ் ஆக்கம் பிற்காலத்திய கி.பி. 17,18 - ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டுகளிலும் காண முடிகிறது.

### பிறசெய்திகள்

சில கல்வெட்டுகள் கொடையளிக்கப்பட்டதை சந்திராதித்யவரை முட்டாமல் நடத்திப் போகக் கடவார்களாகவும் என்று குறிப்பிட்டு விட்டு

இப்படிக்கு "செம்பிலும் சிலையிலும் வெட்டிவித்துக் கொள்ளவும்" என்று குறிப்பிடும். எனவே கொடையளிக்கப்பட்ட செய்தி கல்லில் பொறிப்பதோடு மட்டுமல்லாது செப்பேட்டிலும் எழுதிவைக்கப்பட்டுள்ளன என்பது தெற்றென விளங்கும். அக்காலத்தில் ஓலையில் எழுதும் பழக்கமும் இருந்திருக்கிறது. செங்கற்பட்டு மாவட்டத்தைச் சேர்ந்த உத்தரமேரூர் கல்வெட்டு "குடவோலையை"க் குறிக்கிறது. இக்கல்வெட்டு முதற்பராந்தக மன்னன் காலத்தியது. இக்கல்வெட்டு ஊர்ச் சபைக்கு உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கும் முறை பற்றிக் குறிப்பிடுகையில், வேட்பாளராக நிற்பவருடைய பெயரை ஓலையில் எழுதி குடத்தினுள் இடுவதைக் குறிக்கிறது. அரசனுடைய அதிகாரிகளுள் "திருமந்திர ஓலை", "ஓலை நாயகம்" போன்ற அதிகாரிகள் இருந்தமையால் ஓலையில் எழுதும் பழக்கம் அக்காலத்தில் இருந்து வந்தது என்பது நன்கு தெரிகிறது. சில கல்வெட்டுகளில் "இப்படி மக்கள் செய்வார்களாகவும், செம்பிலும், சிலையிலும் வெட்டிக் கொள்வார்களாகவும், நம் ஓலை" கொடுத்தோம் என்று வருவதால் செம்பிலும் சிலையிலும் பொறிப்பதற்கு முன்னர் ஓலையில்தான் எழுதப்பட்டது என்பது விளங்குகிறது. அத்தோடு தஞ்சைப் பெருவுடையார் கோயில் கருவறையைச் சுற்றியுள்ள சுவர்களில் காணப்படும் ஓவியங்களில் தடுத்தாட்கொண்ட புராணக் காட்சியையும் காணலாம். அதில் ஒருவர் ஓலை ஒன்றைக் கையில் ஏந்தி நிற்கிறார். அவ்வோலையில் "இப்படி நானறிவேன்" என்று பொறிக்கப்பட்டிருப்பதை, கூர்ந்து நோக்கின் தெரியவரும். பெரிய லெய்டன் செப்பேடு, ஆனைமங்கலம் என்ற ஊரை அரசன் கொடையாக வழங்கியதை "அறவோலை செய்து இருந்தோம்" என்று குறிக்கிறது. எனவே ஓலையில் எழுதும் வழக்கமும் தொன்றுதொட்டு நம்மிடையே இருந்து வருகிறது என்பதை இதனால் தெரிந்து கொள்ளலாம். அத்தோடு, அரசனது ஆணை அனைத்தும் ஓலையிலோ அல்லது திரைச் சீலையிலோ எழுதப்பெற்றது என்றும், பின்னர் செப்பேடுகளிலும் கல்லிலும் வெட்டி வைத்துக் கொண்டார்களென்றும் தெரிகிறது.

கல்வெட்டுகளில் அரசன், "தேவர்" "பெருமாள்" "நாயனார்" என்றும், அவன் தேவியை "நம்பிராட்டியார்" என்றும் அத்தேவியரும் அரச குலத்துப் பெண்களும் "ஆழ்வார் நாச்சியார்" என்றும் வழங்கப்படுகின்றனர். "காடவராயன் நம்பிராட்டியார் பெண்ணரசியான உடையாழ்வார்", "அம்மங்கை ஆழ்வார் ஆன பெரிய நாச்சியார்" (முதற் குலோத்துங்கன் மகள்) "ஆளுடையநாச்சியார்" போன்ற குறிப்புக்களைக் கூறலாம். "வயிற்றில்

பிறந்தவளே யாகிலும் ராஜமகரிஷியாய்ப் பட்டங்கட்டினால் 'ஆழ்வார்' என்றே சொல்வது'' (திருநெடுந்தாண்டகம், ஸவ்யாக்) என்று ஸ்ரீபெரியவாச்சான் பிள்ளை எழுதிய தொடரும் ஈண்டு குறிப்பிடத்தக்கது.

கோயில்களுக்குக் கொடையாக நிலம், ஆடு, பசு, பிற பொருள்கள் ஆகியவற்றை அளித்துள்ளார்கள் என்பது அறிந்ததே. அத்தோடு தெய்வங்களின் செப்புச் சிலைகளையும் செய்து அளித்துள்ளார்கள். கல்வெட்டுகள் தெய்வ உருவங்களைத் திருமேனிகள் என்றும், மக்கள் உருவங்களை பிரதிமங்கள் என்றும் குறிக்கின்றன.

இறந்த அரசனைப் புதைத்த இடம் கல்வெட்டுகளில் பள்ளிப் படை என்று குறிக்கப்பெற்றுள்ளது. அந்த இடத்தில் கோயிலை எழுப்பும் பழக்கம் அக்காலத்தில் இருந்து வந்திருக்கிறது.

## அரச ஆணை

நிலக்கொடையைப் பற்றிய அரசனுடைய ஆணையை வெளிப்படுத்தும் கல்வெட்டுகள் சிலவற்றில் அவ்வாணை எவ்வாறு உருவாக்கப்படுகிறது என்பதையும் அது எங்ஙனம் நிறைவேற்றப்படுகிறது என்பதையும் தெளிவாக வெளிப்படுத்துகின்றன. செங்கற்பட்டு மாவட்டத்தைச் சார்ந்த திருமுக்கூடலில் காணப்படும் சோழ மன்னன் வீரராசேந்திரனின் கல்வெட்டு அரசனின் ஆணை எவ்வாறு நிறைவேற்றப்படுகிறது என்பதை அழகுறத் தெரியப்படுத்துகிறது. அரசனுடைய ஆணை "திருமந்திர ஓலை" என்னும் அதிகாரியால் எழுதப்படுகிறது. எழுதி முடித்தபின் "திருமந்திர ஓலை நாயகம்'' என்ற அதிகாரியால் ஒப்பு நோக்கப்படுகிறது. பிறகு,''விடையில் அதிகாரி'' 'வரி' என்ற புத்தகத்தில் எழுதும்படி ஆணையிடுகிறார் "உடன்கூட்டம்", "விடையில்" "நடுவிருக்கை" ஆகிய அதிகாரிகள் அதை எழுதும்படி செய்கிறார்கள். "புரவுவரி திணைக்களம்" "வரிப்பொத்தகம்" "முகவெட்டி" "வரியிலீடு" "வரிப்பொத்தகக் கணக்கு" "பட்டோலை" ஆகிய அதிகாரிகள் தங்கள் கையொப்பங்களை இட்டு தங்களது இசைவைத் தெரிவிக்கிறார்கள். அதன் பின்னர் அவ்வாணை அரசமரியாதையோடு எவ்வூரைச் சார்ந்த நிலம் கொடையளிக்கப்படுகிறதோ அவ்வூருக்கு எடுத்துச் செல்லப்படும்.

அவ்வாணையைப் பற்றி முன்னமே செய்தியைத் தெரிந்து கொண்ட நாட்டாரும் மற்றவரும் 'ஆணை' கொண்டுவரும் போது இருக்கையை விட்டெழுந்து, கை கூப்பித் தொழுது, அவ்வாணையைத் தங்கள் தலையின் மீது கொண்டு செல்கிறார்கள். பிறகு ஆணை படித்துப் பார்க்கப்படுகிறது. அதன் பின்னர் குறிப்பிடப்பட்ட நிலத்தின் எல்லையை நிலம் கூறு செய்வார், நாட்டார், ஊர்க் கரணத்தார் ஆகியோரை வைத்துக் கொண்டு "பிடிசூழ" எல்லைகளை நிர்ணயிக்கிறார்கள். பின்னர் எல்லைகள் தெரிய கல்லும் கள்ளியும் நடப்படுகிறது. சிவன் கோவிலுக்கு நிலம் விற்கப்பட்டால் 'திருச்சூலத்தைக் கல்லில் பொறித்து நடுகிறார்கள். திருமால் கோயிலுக்கு விற்கப்பட்டால், "திருஆழியைக்" கல்லில் பொறித்து நடுகிறார்கள். எல்லா தரப்பாரும் சம்மதம் தெரிவித்த பின்னர் அவ்வாணை கல்லிலும் செம்பிலும் எழுதப்படுகிறது. இத்தகைய செய்திகளைக் கல்வெட்டுகளைக் காட்டிலும் செப்பேடுகள் நன்கு விரிவாகக் கூறுகின்றன. பெரிய லெய்டன் செப்பேடு, திருவாலங்காடு செப்பேடு, அன்பில் செப்பேடு ஆகியவைகள், நன்கு தெரிவிக்கின்றன. பெரிய லெய்டன் செப்பேடு "நாட்டோமுக்குத் திருமுகம் வர, நாட்டோமுந் திருமுகங்கண்டு, எதிரெழுந்து சென்று, தொழுது, வாங்கித் தலை மேல் வைத்துப் பிடிசூழ்ந்து பிடாகை நடந்து, எல்லை தெரித்து, கல்லுங் கள்ளியும் நாட்டி, அறவோலை செய்த நிலத்துக்கு" என்று அழகாக ஒவ்வொரு செயலையும் ஒன்று விடாமல் கூறுகிறது.

இவ்வாறு அரசன் பிறப்பித்த ஆணைகளாயினும் சரி, கல்வெட்டு களாயினும் சரி; அவைகள் பெரும்பாலும் சமயம் தழுவிய கொடையைப் பற்றிக் குறிப்பவனவாகவே உள்ளன. ஆயினும் வரலாறு, கல்வி, மருத்துவம், ஊராட்சி முறை, நீதிமுறை ஆகியவற்றைக் கூறும் பல கல்வெட்டுகளும் கிடைத்துள்ளன. கல்வெட்டுகள், நமக்கு இது வரையில் கிடைத்திடாத சில புதிய இலக்கியங்களைப் பற்றியும் குறிப்பிடுகின்றன.

வரலாற்றைப் பற்றிக் குறிப்பிடும் கல்வெட்டுகளில் வாயலூர்க் கல்வெட்டு முதன்மை இடத்தைப் பெறுகிறது. இதில் பல்லவ மன்னர்களின் வழி முறை தெளிவாகக் குறிக்கப் பெற்றுள்ளது. அதேபோன்று சோழ மன்னர்களின் வழிமுறையைப் பற்றி கன்னியாகுமரியில் உள்ள வீர ராசேந்திரனின் கல்வெட்டு கூறுகிறது. சோழ மன்னர்களின் கல்வெட்டுகளில் காணும் மெய்க்கீர்த்திப் பகுதிகளும் வரலாற்றுக்குப் பெருந்துணை புரிகின்றன.

கல்விச் சாலையைப் பற்றி எண்ணாயிரம் என்ற ஊரில் காணப்பெறும் முதலாம் இராஜேந்திரனுடைய கல்வெட்டும், செங்கல்பட்டு மாவட்டத்தில் திருமுக்கூடல் என்ற ஊரில் கிடைத்த கல்வெட்டும் விளக்கமாகக் கூறுகின்றன. மருத்துவச் சாலையைப் பற்றி அதே ஊரில் காணப்பெறும் வீரராஜேந்திரனின் கல்வெட்டு தெரிவிக்கிறது. ஊராட்சி முறையைப் பற்றி மானூரில் காணப்பெறும் மாறஞ்சடையனுடைய கல்வெட்டும், சோழ மன்னன் முதற் பராந்தக சோழனுடைய உத்தரமேரூர்க் கல்வெட்டும் தெளிவாக்குகின்றன. நீதிமுறையைப் பற்றி திருப்பாதிரிப்புலியூரில் காணப்பெறும் பெருமாள் பராக்ரம பாண்டியனுடைய கல்வெட்டு அருமையாக விவரிக்கிறது.



# தமிழி கல்வெட்டுகள்

இரா. நாகசாமி

தமிழகத்தில் இயற்கையாக அமைந்த குகைத் தளங்களில் சமணப் பெரியார்கள் வாழ்வதற்கு அமைக்கப்பட்ட பாழிகளைக் குறிக்கும் கல்வெட்டுகளும், பானை ஓடுகளிலும், காசுகளிலும் கிடைத்துள்ள எழுத்துகளும் பண்டைத் தமிழ் எழுத்துகளில் (தமிழி) குறிக்கப்பட்டுள்ளன என்று முன்னர் குறிப்பிட்டோம். அவையே தமிழகத்தில் இதுகாறும் கிடைத்துள்ள மிகவும் தொன்மையான கல்வெட்டுகளாகும். அவைகள் எங்கெங்கு இருக்கின்றன என்பதையும், அவற்றின் வரலாற்றுச் சிறப்பையும் இங்கு கவனிப்போம்.

## மீனாக்ஷிபுரம் (அரிட்டாபட்டி)

மதுரையிலிருந்து மேலூர் செல்லும் நெடுஞ்சாலையிலிருந்து ஒரு குறுக்குச் சாலையின் வழியே சென்று அதிலிருந்து மற்றொரு வண்டிப் பாதை வழியாக சென்றால் இவ்வூரை அடையலாம். இவ்வூர் மலையின் அடிவாரத்தில் இருக்கிறது. இவ்வூரிலிருந்து மலை தென்வடலாக சுமார் ஐந்து கல்லுக்கு அப்பால் உள்ள அரிட்டாபட்டி என்ற ஊர் வரையில் நீண்டிருக்கிறது. ஒரு காலத்தில் இம்மலை முழுவதும் அரிட்டாபட்டி ஊரைச் சார்ந்ததாகக் கருதினர். தற்சமயம் வடபகுதி அரிட்டாபட்டியையும் தென் பகுதி மீனாக்ஷிபுரத்தையும் சார்ந்ததாகக் குறிக்கப்படுகிறது. சுமார் அறுபது ஆண்டுகளுக்கு முன்னர் இங்கு கல்வெட்டை படி எடுத்தபோது, அரிட்டாபட்டி ஊரைச் சார்ந்ததாக இதைக் குறித்துள்ளனர். ஆனால் மீனாக்ஷிபுரம் என்ற ஊரே இக்கல்வெட்டுகளுக்கு அருகில் இருக்கிறது. இம்மலையின் அடிவாரத்திலேயே இவ்வூர் இருக்கிறது. குகைக்கு இங்கிருந்து செல்வதுதான் எளிது. ஆதலின் இது மீனாக்ஷிபுரம் என்றே இங்கு குறிக்கப்படுகிறது.

ஆனால் இதை மாங்குளம் கல்வெட்டுகள் என்று திரு.ஐ. மகாதேவன் குறிப்பிட்டிருக்கிறார். மாங்குளம் இம்மலையில் இருந்து சுமார் மூன்று கல் தொலைவில் இருக்கிறது. அவ்வூருக்கும் இம்மலைக்கும் எவ்விதத்தொடர்பும் இல்லை. அவரது நூலில் மாங்குளம் என்ற ஊரின் கீழ் குறிக்கப்பட்டுள்ள கல்வெட்டுகளே மீனாக்ஷிபுரம் என்ற தலைப்பில் இங்கு குறிக்கப்படுகின்றன. ஆதலின் மாங்குளம் என்பதைக் கண்டு குழம்பிவிடக்கூடாது.

இம்மலையைக் கழுகுமலை என்றும் ஓவாமலை என்றும் ஊரார் குறிப்பர். மலையின் கிழக்குப்புறத்தில் இயற்கையாக அமைந்த குகைத் தளங்களில் படுக்கைகள் அமைக்கப் பட்டுள்ளன. மேல் பாறையின் புறத்தே நீண்ட கல்வெட்டுகள் காணப்படுகின்றன.

1. கணிய் நந்தஅ ஸிரிய் இகுவ்அன் கே
   தம்மம் இத்தஅ நெடுஞ்சழியன் பணஅன்
   கடல்அன் வழுத்திய் கொட்டுபித்தஅ பளிஇய்
2. கணிய் நந்த ஸிரிய்குஅன் தமம்
   இத நெடிஞ்சழியன்
   ஸாலகன் இளஞ்சடிகன் தந்தைய்
   சடிகன் செஇய பளிய்
3. கணிஇ நத ஸிரிய் குவ . .
   வெள்அறைய் நிகமது காவிதிஇய்
   கழிதிக அந்தைஅ ஸுதன்
   பிணஊ கொடுபிதோன்
4. சந்தரிதன் கொடுபிதோன்
5. வெள்அறை நிகமதோர் கொடிஓர்

***கருத்து***

சமண சங்கத்தைச் சேர்ந்தவர்களை கணி என்று குறிப்பது வழக்கம். அதுவே இக்கல்வெட்டில் கணி என்று குறிக்கப்பட்டுள்ளது. நந்தஸிரியக்குவன் (இயக்கன்) என்பவருக்கு நெடுஞ்செழியன் பள்ளி அமைத்துக் கொடுத்ததை முதல் கல்வெட்டு குறிக்கிறது. "கே தம்மம்" என்றால் அவருக்கு கொடுக்கப்பட்டது என்று பொருள். கே என்பது நான்காம் வேற்றுமை உருபு. பள்ளன்கோயில் செப்பேடு வஜ்ரநந்திகுரவர்

என்பவருக்கு பள்ளிச்சந்தம் கொடுத்ததைக் குறிக்கிறது. அவர் 'கணி' என்று குறிக்கப்படுகிறார். அடுத்து, இரண்டாவது கல்வெட்டு அதே பெரியாருக்கு நெடுஞ்செழியனின் சாலகன் இளஞ்சடிகனின் தந்தை சடிகன் என்பான் பள்ளி செய்வித்ததைக் குறிக்கிறது. மூன்றாவது கல்வெட்டு அதே பெரியாருக்கு வெள்ளறை நிகமத்தைச் சேர்ந்த காவிதி கழிதிக அந்தை என்பவரின் மகன் பிணவு என்பவன் கொடுத்ததைக் குறிக்கிறது. சந்தரிதன் என்பவனும் வெள்ளறை நிகமத்தோரும் கொடுத்ததைமற்ற கல்வெட்டுகள் குறிக்கின்றன.

## எழுத்து

மெய்யிலிருந்து புள்ளியை நீக்கிவிட்டால் எந்த வடிவு எஞ்சுகிறதோ அவ்வடிவே அகரத்தோடு கூடிய உயிர்மெய்யாக இலக்கணப்படி கொள்ளப்படும். ஆனால் இக்கல்வெட்டில் அம்மரபு இல்லை. அகரத்தோடு கூடிய உயிர்மெய்யைக் குறிக்க எழுத்தின் தலையில் ஒரு கோடு இடப்பட்டுள்ளது. இதுவே அகரத்தோடு கூடிய உயிர்மெய்யையும் குறிக்கும். உதாரணமாக 'க' என்ற எழுத்தில் தலையில் ஒரு குறுக்குக் கோடு இருந்தால் அதை 'க' என்று தான் படிக்க வேண்டும். குறுக்குக் கோடு இல்லாவிடின் 'க்' என்று மெய்யாகத்தான் கொள்ளுதல் வேண்டும். 'க'விற்கும், 'கா'விற்கும் எழுத்தில் வேறுபாடு இல்லை. மொழி அறிந்தவர்கள் சொல் அறிந்து வேறுபடுத்தி வாசித்தல் வேண்டும். இவ்வாறு தலையில் கோடு இல்லாத வடிவை மெய்யாகவும், கோடு உள்ள வடிவை அகரமுடைய உயிர்மெய்யாகவும் படித்தால்தான் இக்கல்வெட்டில் தெளிவாகக் கிடைக்கும். எழுத்துகள் இம்முறையில் எழுதப்பட்டன என்பதை முதன்முதலில் "பட்டிப்புரோலு" என்னும் இடத்தில் கிடைத்த கல்வெட்டிலிருந்து டாக்டர். பியூலர் என்பார் கண்டுபிடித்தார். அக்கல்வெட்டுகள் பிராகிருத மொழியில் இருக்கின்றன. புத்தபிரானுடைய புனிதமான எலும்பு ஒன்றை வைத்திருந்த ஒரு கற்பேழையில் இவ்வெழுத்துகள் காணப்படுகின்றன. இப்பேழைகள் சென்னை அருங்காட்சி சாலையில் வைக்கப்பட்டுள்ளன. டாக்டர். பியூலரின் முறையைப் பின்பற்றி இக்கல்வெட்டுகளை திரு.ஐ.மகாதேவன் அவர்கள் இப்போது படித்துள்ளார்.

"கணிய்" "ஸிரிய்" "பளிய்" "வழுத்திய்" முதலிய சொற்களில் இறுதியில் இகரத்தின் பின்னர் 'ய்' வருவது குறிக்கத்தக்கது. தொல்காப்பியத்தில் 'இகர யகரம் இறுதி விரவும்' என்று ஒரு சூத்திரம் உள்ளது. இதற்கு இகர வீற்று மொழிக்கண் இகரமும் யகரமும் விரவி

வரும் என்றும் 'நாய்' நாஇ எனக் கண்டு கொள்க (விரவும் என்றதனால் அவை இரண்டும் கொள்க, என்றவாறு) என்று இளம்பூரணர் உரை எழுதியுள்ளார். இதற்கு நச்சினார்க்கினியர் இகரமும் யகரமும் ஒரு மொழியின் இறுதிக்கண் ஒசை விரவி வரும். அவ்விகாரம் கொள்ளற்ன" என்று உரை எழுதியுள்ளார். யகரத்திற்கு இகரமும், இகரத்திற்கு யகரமும் மாறி வரும் என்பது இவர்கள் கருத்தாகத் தோன்றுகிறது. ஆனால் "விரவி" என்றால் சேர்த்தல் என்று பொருள் உண்டு. ஆதலின் சொல்லின் இறுதியில் இகரத்தின் பின்னர் 'ய்' சேரும் என்பதை இச்சூத்திரம் குறிக்கிறது எனக் கொள்வதில் தவறில்லை. மேற்குறித்த சொற்கள் இக்கருத்துக்குச் சான்று பகர்வனவாய் உள்ளன.

### சொல்

இங்குள்ள இரண்டாவது கல்வெட்டில் நெடுஞ்செழியனின் சாலகன் (சலகன்) இளஞ்சடிகன் என்பான் குறிக்கப்படுகிறான். மனைவியின் உடன்பிறந்தாள் கணவன் சாலகன் என குறிக்கப்படுகிறான். (இதைச் சலகன் என்றும் படிக்கலாம். இச்சொல்தான் பின் திரிந்து சகலன் என வழங்கப்பட்டதோ என்று கருத இடமுண்டு.)

இக்கல்வெட்டில் வெள்ளறை நிகமம் என்று ஒரு சொல் வருகிறது. நிகமம் என்பது நகரத்தையும், வணிகக் குழுவையும் குறிக்கும். இங்கு நிகமம் (உம். நியமம், நேமம்) என்பது நகரத்தைக் குறிப்பதாகக் கொள்ளலாம்.

"காவிதி, பிணஊ" போன்ற பழைய சொற்களும் இக்கல்வெட்டு களில் இடம் பெற்றுள்ளன.

ஸிரி, இகுவன், தம்மம், பளி, ஸுதன், நிகமம், கணி முதலிய பாகதச் (பிராகிருத) சொற்கள் இவற்றில் இடம் பெற்றுள்ளன.

'அன்' என்ற விகுதி 'பணஅன்' 'கடல்அன்' (கடலன்) இகஅன் (இகுவன்) என்ற சொற்களில் தனித்தே சேர்க்கப் பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

'அ' என்ற விகுதி ஆறாம் வேற்றுமை உருபாக இங்கு வழங்கப்பட்டிருக்கிறது என்பதை "அந்தைஅ" என்று வருவதிலிருந்து காணலாம்.

"கொட்டு பித்த அ" என்ற சொல்லுக்கு கொடுப்பித்த என்று மகாதேவன் பொருள் கூறுகிறார். கொட்டுதல் என்றால் கம்மியர் சம்மட்டியால் அடித்தல் அல்லது செதுக்குதல் என்றும் பொருள் *(D.E.D. 1740)* உண்டு. ஆதலின் இச்சொல் இங்கு பாறையைச் செதுக்கி படுக்கையாக அமைத்ததைக் குறிக்கிறது என்றும் கொள்ளலாம்.

### கருத்து

"ஆசிரியக உவன்கே தம்மம் "என்று திரு.ஐ.மகாதேவன் இதைப் படித்துள்ளார். இக்கல்வெட்டில் குறிக்கப்படுகின்ற நெடுஞ்செழியன் கடலனென்றும், வழுதியென்றும், பணவன் என்றும் குறிக்கப்படுகிறான். இவை பாண்டியர்களுடைய குலப்பெயர்கள். ஆதலின் இம்மன்னன் பாண்டியன் என்பது தெளிவு. சங்க இலக்கியங்களில் "தலையாலங் கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனும்", "ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனும்" குறிக்கப்படுவது அனைவரும் அறிந்ததே. ஆனால் அவர்கள் இருவரும் கிறிஸ்துவிற்குக் காலத்தால் பிற்பட்டவர்கள் என்றும், இக்கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ள நெடுஞ்செழியன் கி.மு. இரண்டாவது நூற்றாண்டில் ஆண்டவனாக இருத்தல் வேண்டும் என்றும் திரு.ஐ. மகாதேவன் கருதுகிறார். இக்கல்வெட்டு கி.மு. 3-2ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது என்பதில் ஐயமில்லை. ஆனால் இலக்கியத்தில் குறிக்கப்பட்டுள்ளவர்கள் கிறிஸ்துவிற்குப் பின்னர்தான் ஆண்டார்கள் என்பதற்குப் போதிய சான்றுகள் இல்லை.

### திருவாதவூர்

மணிவாசகப் பெருமான் பிறக்கும் பெரும்பேறு பெற்றது திருவாதவூர் என்னும் புண்ணியத்தலமாகும். அங்கு ஊரின் புறத்தே சிறு குன்று ஒன்று உண்டு. அக்குன்றில் இயற்கையாக அமைந்த குகைத்தளம் ஒன்று உண்டு. அங்கு பள்ளியமைத்ததை பண்டைய கல்வெட்டுகள் குறிக்கின்றன. இங்கு இரு கல்வெட்டுகள் இருக்கின்றன.

1. பங்காட அர்இதன் கொட்டுபிதோன்
2. ஊபாசன் பர்அசூ ஊறை கொட்டுபிதோன்

### கருத்து

1. பங்காட்டைச் சேர்ந்த அரிதன் என்பான் இதை செதுக்கியமைத்தான்.

2. உபாசகன் ஆகிய பரசு என்பவன் உறை (உறைவ தற்கு இடம்) செதுக்கியமைத்தான்.

இல்வாழ்க்கை நடத்தி சமயநெறியில் நிற்போரை உபாசகர் என்று சமண சமயத்தோர் குறிப்பர். இக்கல்வெட்டுகளில் உபாசன், பரசு என்ற பாகதச் சொற்கள் உள்ளன. 'ர' நேர் கோடாக இல்லாமல் பாம்பு போல் வளைத்து எழுதப்பட்டுள்ளது.

'கொட்டூ பிதோன்' என்பதற்கு கொடுப்பித்தோன் என்று திரு. ஐ. மகாதேவன் பொருள் கொள்கிறார்.

### கொங்கற்புலியன்குளம்

மதுரையிலிருந்து சுமார் ஒன்பது கல் தொலைவில் இவ்வூர் இருக்கிறது. ஊரின் அண்மையிலுள்ள குன்றில் ஒரு புறத்தே மிகப் பெரியதான இயற்கை குகைத்தளம் ஒன்று உள்ளது. பாறையின் மேல் முகப்பில் மூன்று கல்வெட்டுகள் பொறிக்கப்பட்டிருக்கின்றன. இங்கு ஏராளமான படுக்கைகள் செதுக்கி அமைக்கப்பட்டுள்ளன.

1. குற கொடுபிதவன் ஊபாசஅன் ஊபறுவ . . .
2. குற கொடல குஇத்தவன் செறஅதன் என்
3. பாகன்ஊர் பேதாதன் பிடன் இத்த வேபோன்

### கருத்து

1. உபாசன் ஆகிய உப்பறுவன் உறையும் இடம் கொடுப்பித்தான்.
2. சிறுஆதன் என்பவன் உறைவிடம் செதுக்கியளித்தான்
3. பாகனூர் பேதாதன் பிடன் என்பவன் இதை வேய்ந்தான்

### விக்கிரமங்கலம்

மதுரைக்கு அருகில் உண்டாங்கல்லு என்று அழைக்கப்படும் ஒரு குன்றில் இயற்கையாக அமைந்த ஒரு குகைத் தளத்தில் பள்ளி அமைக்கப்பட்டதை இங்குள்ள கல்வெட்டு கூறுகிறது. இங்கு ஐந்து கல்வெட்டுகள் இருக்கின்றன.

1. அந்தைய் பிகன் மகன் வெந்அ தான
2. பெதலை குவிரன்
3. செங்குவீரன்
4. குவீராதன்
5. எம்ஊர் சஅதன்அ தான

**கருத்து**

1. அந்தை பிகன் என்பான் மகன் செய்ததானம். இக் கல்வெட்டில் 'செய்' என்ற சொல் 'வொந்' என்று எழுதப் பட்டுள்ளது. இதை சுப்பிரமணிய அய்யர் 'வெந்' என்று வாசித்துள்ளார்.
2. பெதலை குவிரன் என்பானுடை பெயர்.
3. செங்குவீரன் என்பான் பெயர்.
4. குவீராதன் என்பானுடைய பெயர்.
5. எம் ஊர் சாதனுடைய தானம்.

இக்கல்வெட்டுகளில் தானம் என்பது வடமொழியில் பரிசு (gift) கொடுக்கப்பட்டது என்ற பொருளில் வரும் 'தானம்' என்னும் சொல் என்று ஐ. மகாதேவன் கருதுகிறார். ஆயினும் இடம் என்ற பொருளில் வரும் வடமொழிச் சொல்லாகிய 'ஸ்தானம்' என்பதின் திரிபே 'தானம்' என்றும் இதைக் கொள்ளலாம். 'தேவஸ்தானம்' என்பது கல்வெட்டுகள் அனைத்திலும் 'தேவதானம்' என்றே வருவது காணத்தக்கது. இது போன்ற குகைக் கல்வெட்டுகளிலெல்லாம் கொடுத்த பள்ளி, கொடுப்பித்த பள்ளி, உறை போன்று சொற்றொடர்கள் வருகின்றன.

ஆகவே 'ஸ்தான' என்பதின் தமிழாக்கமே 'தான' என்று கொண்டாலும் தவறில்லை.

**மேட்டுப்பட்டி**

பேரணைக்கட்டுக்கு அருகில் உள்ள மேட்டுப்பட்டி என்ற ஊரின் அண்மையில் சித்தர் மலை என்ற மலை உண்டு. அதன் மேல் மிகவும் உயரமான பகுதியில் இயற்கையாக அமைந்த குகைத்தளம் ஒன்று

இருக்கிறது. புதர் நிறைந்த ஒற்றையடிப் பாதை வழியாகத்தான் மிகவும் உயரமான இப்பகுதியை அடையமுடியும். இதற்கும் மேலே மலையின் உச்சியில் பாழடைந்த சிவாலயம் ஒன்று இருக்கிறது. அதில் சக வருடம் 1410 (கி.பி. 1488)ஐ சார்ந்த ஒரு கல்வெட்டு இருக்கிறது. அக்கல்வெட்டில் இம்மலை சித்தர் மலை என்று குறிக்கப்படுகிறது. குகைத்தளத்தின் அருகில் இரு திருவடிகள் செதுக்கப்பட்டிருக்கின்றன. அதன் அருகில் ஒரு தமிழ் கல்வெட்டு 'சச்சிதானந்தநாதர்' என்பவரின் சீடன் 'சகஜானந்த நாதர்' என்பவர் ஆனந்தலகரிக்கு மனோரமா என்ற உரை எழுதியவர். என்றும் அவருடைய திருவடிகளே இவை என்றும் குறிக்கிறது. இக்கல்வெட்டு சுமார் 15,16-ம் நூற்றாண்டைச் சார்ந்ததாக இருக்கும். இயற்கை குகைத்தளத்தில் பல கல் படுக்கைகள் செதுக்கப் பட்டிருக்கின்றன. அவ்வாறு உள்ள படுக்கைகளில் ஒன்பது படுக்கைகளின் தலையில் கல்வெட்டுகள் பொறிக்கப்பட்டுள்ளன.

1. அந்தை அரிய்தி
2. அந்தை இரவாதன்
3. மதிர அந்தை விஸுவன்
4. அந்தை செந்தஅ தான
5. சந்தந்தை சந்தன்
6. பதின்ஊர் அதை
7. குவிர அந்தை செய்அ தான
8. குவிர அந்தை வேள்அ தான
9. திடி இளஅ தான

இக்கல்வெட்டுகளில் அந்தை என்ற சொல் பலருக்கு கொடுக்கப் பட்டுள்ளது. சமணப்பெரியார்களை அந்தை என்று அழைப்பது வழக்கம் போலும். 'விஸுவன்', 'குவீரன்' என்ற பாகதச் சொற்கள் இக்கல்வெட்டுகளில் இடம் பெறுகின்றன. 'அந்தை சேந்தஅ தான' என்றால் அந்தை சேந்தன் என்பவருடைய இருக்கை என பொருள் கொள்ளலாம். 'குவீர அந்தை செய்அ தான' என்பது குவிர அந்தை செய்த இடம் என்பதைக் குறிப்பதைக் காணலாம். இதை அந்தை சேந்தனுடைய தானம் (சேந்தன் கொடுத்த தானம்) என திரு.ஐ. மகாதேவன் பொருள் கொள்கிறார்.

### சித்தன்னவாசல்

புதுக்கோட்டையிலிருந்து ஒன்பது கல் தொலைவில் உள்ள இவ்வூர் தமிழக வரலாற்றில் சிறப்பு வாய்ந்தது. இங்கு மலையைக் குடைந்து தோற்றுவிக்கப்பட்ட குகைக் கோயில் ஒன்று இருக்கிறது. இதில் வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த ஓவியங்கள் இருக்கின்றன. இந்த ஓவியங்கள் கி.பி.8-ம் நூற்றாண்டில் ஆண்ட ஸ்ரீமாற ஸ்ரீவல்லபன் என்ற பாண்டிய மன்னன் காலத்தில் தோற்றுவிக்கப்பட்டவை. இது சமணக் குகையாகும். இதே மலையில் சற்றுத் தொலைவில் மறுபுறத்தில் மேலே 'ஏழடிப்பட்டம்' என்று ஒரு பகுதி உள்ளது. அங்கு இயற்கையாக அமைந்த ஒரு குகைத்தளம் இருக்கிறது. அங்கு சில படுக்கைகள் இருக்கின்றன. ஒரு படுக்கையில் பக்கவாட்டில் கல்வெட்டு காணப்படுகிறது.

1. எருமி நாடு குமிழ்ஊர் பிறந்த
2. காவுடி ஈதேன்கு சிறுபோவில்
3. இளயர் செய்த அதிட்அனம்

இதை முன்னர் பலர் பலவிதமாக படித்திருக்கின்றனர். ஆனால் திரு. ஐ. மகாதேவன் அவர்கள் அண்மையில் படித்துள்ளதுதான் சிறப்பாக உள்ளது. மேற்குறிப்பிட்டுள்ளது அதைப் பின்பற்றியது ஆகும். 'சிறுபோவில்' என்பதை மட்டும் திரு. ஐ.மகாதேவன்' சிறுபாவில்' என்று வாசித்திருக்கிறார். காவுடி என்பது காவிதி என்பதன் திரிபாக இருக்கலாம்.

இது தவிர இங்கு பிற்காலத்தைச் சேர்ந்த அதாவது 4-5-ம் நூற்றாண்டைச் சேர்ந்த எழுத்துகளில் 'தொழுக்குன்றத்துக் கடவுளன்', 'திருநீலன்', 'திருப்பூரணன்', 'திருச்சாத்தன்', 'திட்டைச் சாணன்', 'ஸ்ரீபூரண சந்திரன்', 'நியத்தகரன்', 'பட்டகாளி' என்ற பெயர்களும் பொறித்து வைக்கப்பட்டுள்ளன.

### கருங்காலக்குடி

மதுரையிலிருந்து திருச்சி செல்லும் நெடுஞ்சாலையில் மேலூரி லிருந்து சுமார் 8-கல் தொலைவில் கருங்காலக்குடி என்னும் ஊர் உள்ளது. இந்த ஊரின் அருகிலுள்ள ஒரு குன்றில் இயற்கையாய் அமைந்த குகைத்தளம் உள்ளது. அதில் சில படுக்கைகள் காணப்படுகின்றன. கல்வெட்டு பாறையின் முகப்பின் மேலே எழுதப்பட்டுள்ளது. இங்கு சமண

தீர்த்தங்கரருடைய சிலை ஒன்றும், அதன் அருகில் வட்டெழுத்துக் கல்வெட்டு ஒன்றும் உள்ளது. அக்கல்வெட்டு மீனவன் பாண்டியனுக்குப் பணிபுரிந்த பள்ளிதரையன் என்பானைக் குறிக்கிறது.

## கல்வெட்டு

ஏழை ஊர் அரிதின் பளிய்

ஏழை ஊரைச் சார்ந்த அரிதின் என்பானுடைய பள்ளியைக் குறிக்கிறது.

## மறுகால்தலை

திருநெல்வேலி மாவட்டத்தில் பாளையங்கோட்டையில் இருந்து சுமார் 10-கல் தொலைவில் இவ்வூர் இருக்கிறது. இங்கு 'பூவில் உடையார் மலை' என்று ஒரு குன்று உள்ளது. இம்மலைமேல் ஊர் தெய்வங்களுக்குக் கோயில் ஒன்று அமைக்கப்பட்டுள்ளது. அங்கு இயற்கையாக அமைந்த குகைத்தளத்தில் கல்வெட்டு உள்ளது. அது பாறையின் மேல்முகப்பில் எழுதப்பட்டுள்ளது.

## கல்வெட்டு

வெண் காஸிபன் கொடுபித கல் கஞ்சணம்.

வெண்காசிபர் என்பவர் கொடுத்த இருக்கையைக் குறிக்கிறது.

## அழகர்மலை

அழகர்மலை என்றும் பழமுதிர்ச் சோலை என்றும் புகழ் பெற்ற மலையின் ஒரு பகுதியில் இயற்கையாயமைந்த குகைத்தளம் உள்ளது. இதைக் 'கிடாரிப்பட்டி' என்னும் ஊரில் இருந்து சுமார் மூன்று கல் தொலைவு நடந்து சென்றுதான் அடைய முடியும். மலையில் ஏறிப் பார்ப்பதற்கு வசதியாக படிகள் அமைத்திருக்கிறார்கள். இயற்கைக் குகைத்தளத்தில் படுக்கைகள் காணப்படுகின்றன. இங்கு நல்ல சுனை ஒன்றும் இருக்கிறது. படுக்கையிருக்கும் தளத்திற்கும், பாறை முகப்பிற்கும் உயரம் மிக அதிகம். முகப்பின் புறத்தே நீண்ட பண்டைய கல்வெட்டு ஒன்று பொறிக்கப்பட்டுள்ளது. படுக்கையின் ஓரத்திலும் ஒரு கல்வெட்டு உள்ளது. மேலே உள்ள கல்வெட்டுகள் மிகவும் உயரத்திலிருப்பதால் படிப்பது மிகவும் கடினம்.

**கல்வெட்டு**

1. மத்திரைய் பொன் கொலவன் ஆதன்அ தான
2. . . . அனாகன் த. . .
3. கணிநாகன் கணிய் நதன்
4. மத்திரைய் கே. . . . .(இதை திரு.ஐ.மகாதேவன் 'மாதவிரை' என்று படித்துள்ளார்.)
5. ஊபு வணிகன் வியகன் கணதிகன்
6. கனக அதன் மகன் அதன் அ தான
7. ஸபமிதஇன் போ மித்தி
8. பணித வணிகன் நெடுமலன்
9. கொழுவணிகன் எளசந்தன்
10. . ஞ்சி கழுமாறன் தான
11. தார அணி இ கொடுபித அவன்
12. காஸபன் அ தவிர
13. . . அவரும் குடுபிதோ . .
14. வெண்பளிய் அறுவை வணிகன் எளஅ அடன்
15. . . தியன் சந்தன்

இக்கல்வெட்டுகள் மீண்டும் கவனத்தோடு படிக்கப்படல் வேண்டும். இடையில் பல பகுதிகள் தேய்ந்துள்ளன. ஆதலின் மேலே குறிப்பிட்டுள்ளவை தற்காலிகமாக படிக்கப்பட்டவையே. இருப்பினும் இக்கல்வெட்டுகளிலிருந்து சிறந்த செய்திகள் கிடைக்கின்றன. மதுரையைச் சேர்ந்த பல வணிகர்கள் இங்கு குறிக்கப்படுகின்றனர். 'பொன் கொல்லன்', 'உப்பு வணிகன்', 'அறுவை வணிகன்' (துணி வணிகன்), 'பணித வணிகன்' (சர்க்கரை வியாபாரி), 'கொழு வணிகன்' (இரும்பு வியாபாரி) முதலியோர் குறிக்கப்படுகின்றனர். இதிலிருந்து மதுரையைச் சேர்ந்த பல செல்வந்தர்கள் சமண சமயத்தைச் சார்ந்தவர்கள் என்று தெரிகிறது. இக்கல்வெட்டுகளுக்கு அருகில் பாறையில் தீர்த்தங்கரர் சிலை ஒன்றும், கி.பி. 8-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த கல்வெட்டு ஒன்றும் இருக்கின்றன. 'அருகர் மலை' என்பது 'அழகர் மலை' என்று மாறி இருக்கக் கூடும் என்று கொள்வதில் தவறில்லை.

### கீழவளவு

மேலூரிலிருந்து திருப்பத்தூர் செல்லும் சாலையில் கீழவளவு என்ற ஊர் இருக்கிறது, மேலூரிலிருந்து சற்றேறக் குறைய ஏழு கல் தொலைவில் இருக்கிறது. இங்குள்ள குகைத்தளத்தில் கீழே படுக்கைகளும், பாறையின் மேல் முகப்பில் கல்வெட்டுகளும் இருக்கின்றன. அதன் அருகிலேயே பாறையில் சமண தீர்த்தங்கரர்களின் சிலைகள் செதுக்கப்பட்டுள்ளன. அவை சுமார் கி.பி. 7,8-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவையாகக் காணப்படுகின்றன. இவை வண்ணம் தீட்டப்பட்டு விளங்கியிருத்தல் வேண்டும். சிற்சில இடங்களில் இன்னும் தாமரை மலர் போன்ற ஓவியங்கள் எஞ்சி நிற்பதைக் காணலாம். பாறையில் எழுதப்பட்டுள்ள கல்வெட்டில் சில எழுத்துகள் நேராகவும், சில எழுத்துகள் தலைகீழாகவும் எழுதப்பட்டிருப்பதாகக் கருதப்படுகிறது. இக்கல்வெட்டு மீண்டும் ஆராயப்படல் வேண்டும்.

### கல்வெட்டு

ஊபாஸஅன் தொண்டி ளவன் கொடி பளிஇ

இது திரு.ஐ.மகாதேவன் அவர்கள் படித்ததாகும்.

## குறிப்பு

மேலே குறிப்பிட்டுள்ள மீனாக்ஷிபுரம் கல்வெட்டிலிருந்து கீழவளவுவரை குறிக்கப்பட்டுள்ள கல்வெட்டுகளில், எழுத்தின் மேல் கோடு உள்ள வடிவங்களே அகர உயிர்மெய்யாகவும், கோடு இல்லாதவை மெய்யாகவுமே முன்னர் குறிப்பிட்டபடி கொள்ளவேண்டும், ஆதலின் இவை அனைத்தும் கிறிஸ்துவிற்கு சுமார் 200, 300-ஆண்டுகளுக்கு முற்பட்டவையாக இருத்தல் வேண்டும் என்று கருதப்படுகிறது. கீழ் வரும் இடங்களிலுள்ள கல்வெட்டுகள் இலக்கண மரபுப்படி புள்ளி இல்லாத வடிவை அகர மெய்யாகக் கொள்ள வேண்டும். ஆதலின் அவை காலத்தால் சற்று பிற்பட்டவை என்று கருதப்படுகின்றன.

### ஆனைமலை

மதுரைக்கு அருகில் நீண்ட பெரும் யானை படுத்துறங்குவது போல் உள்ள குன்றை 'யானைமலை' என்று அழைப்பர். இம்மலை

வரலாற்றுச் சிறப்புடையது. இங்கு பராந்தக நெடுஞ்சடையன் காலத்து நரசிம்மப் பெருமானுக்கு தோற்றுவிக்கப்பட்ட குடைவரைக் கோயில் ஒன்றும் உள்ளன. இவை தவிர இவற்றின் அருகிலேயே சமணப் பெரியார்கள் வாழ்ந்த தடயங்களும், தீர்த்தங்கரர்களுடைய சிலைகளும், வட்டெழுத்து கல்வெட்டுகளும் உள்ளன. இவை அனைத்தும் மலையின் கீழ்ப்பகுதியில் உள்ளன. மலையின் மேலே இயற்கையாக அமைந்த குகைத்தளம் ஒன்று உள்ளது. அங்கு சில படுக்கைகளும், எழுத்துகளும் உள்ளன.

## கல்வெட்டு

1. இவ குன்றத்து உறையுள் பா தந்தான் எரி
   அரிதன் அத்து வாயி அரட்ட காயிபன்

இதை திரு.ஐ.மகாதேவன் "இவகுன்றதூர் உறையுள் நாதன்தான எரி அரிதன் அத்துவாயி அரட்ட காயிபன்" என்று படித்துள்ளார். இவகுன்றம் என்றால் இக்குன்றம் என்று பொருள் கூறுகிறார்.

'இவ' என்பது யானையைக் குறிக்கும். 'இபம்' என்னும் வடமொழிச் சொல் 'இவ' என்று குறிக்கப்படுகிறது. 'இவமாகி' என்று திருப்புகழில் வருவது அனைவரும் அறிந்ததே. ஆதலின் 'இவகுன்றம்' என்பது 'யானைக் குன்றம்' என்பதே. இதிலிருந்து இம்மலை தொன்றுதொட்டே 'யானைமலை' என்று அழைக்கப்பட்டது என்பது தெளிவு. இம்மலையில் சமணர்கள் வசித்தனர் என்று குறிக்கும் ஞானசம்பந்தர் 'ஆனைமாமலை ஆதியாய இடங்களில்' என்று பாடியுள்ளார். 'பா தந்தான்' என்பது 'படுக்கை தந்தான்' என்ற பொருளில் வழங்கப்பட்டுள்ளது. (பாய்-படுக்கை)

இக்கல்வெட்டு சுமார் கிறிஸ்துவின் சம காலத்ததாகக் கருதப்படுகிறது.

## திருப்பரங்குன்றம்

சங்க இலக்கியங்களில் முருகப்பிரானுடைய உறைவிடமாக சிறப்பாகப் போற்றப்படும் திருப்பரங்குன்றத்தில் மூன்று குகைகள் இருக்கின்றன. இரண்டு குடைவிக்கப்பட்ட கோயில்கள், ஒன்று இயற்கையாக அமைந்த குகைத்தளம். இப்பொழுது முருகப்பிரானுடைய பெருங் கோயிலாக வழிபாட்டில் திகழ்வது, கி.பி. 8-ம் நூற்றாண்டில் பராந்தக நெடுஞ்சடையன் என்னும் பாண்டியன் காலத்தில் தோற்றுவிக்கப்பட்ட

குடைவரைக் கோயில் ஆகும். இது திருமால், முருகன், கணபதி, துர்க்கை, சிவபிரான் ஆகிய தெய்வங்களுக்காக அமைக்கப்பட்ட கோயிலாகும். இதன் இருபுறங்களிலும் துர்க்கைக்கும், சேட்டைக்கும் (ஜ்யேஷ்டாதேவி) அமைக்கப்பட்ட கோயில்களும் உண்டு. இம்மலையின் பின்புறத்தே மற்றொரு குடைவிக்கப்பட்ட குகைக் கோயில் உள்ளது. அது சிவபிரானுக்கு தோற்றுவிக்கப்பட்ட கோயிலாகக் காணப்படுகிறது. சுமார் கி.பி. 13-ம் நூற்றாண்டைச் சார்ந்ததாகத் தென்படுகிறது. இவ்விரு குடைவரைக் கோயில்களைத் தவிர, மலையின் ஒரு புறத்தே இயற்கையாக அமைந்த குகைத்தளம் ஒன்று உள்ளது. இதை எளிதாக சென்று அடைய படிக்கட்டுகள் அமைக்கப்பட்டுள்ளன. குகைத்தளத்தில் பல படுக்கைகள் வெட்டி வைக்கப்பட்டுள்ளன. அவற்றின் தலைப்புறத்தே கல்வெட்டுகள் பொறிக்கப்பட்டுள்ளன.

## கல்வெட்டு

1. எருகாடூர் ஈழ குடும்பிகன் போலாலயன் செய்
   தாஅ ஆய்சயன் நெடுசாதன
2. அந்துவன் கொடுபிதவன்
3. . . . . கய . .
4. . . . . மாறயத்து . .

இங்குள்ள முதற்கல்வெட்டு 'எருகாட்டூர் இழகுடும்பிகன் (ஈழத்து இல்லறத்தான்) போலாலயன்' செய்துவித்த படுக்கையையும், நெடிய இருக்கையையும் குறிக்கிறது. 'சாதன' என்றால் இருக்கை, 'சயன' என்றால் படுக்கை. இதை திரு. ஐ. மகாதேவன் ஆய், சயன், நெடுசாத்தன் என்போர் இதை செய்ததாகப் பொருள் கொண்டுள்ளார்.

மற்றொரு கல்வெட்டில் அந்துவன் கொடுத்தது குறிக்கப்பட்டுள்ளது. அந்துவன் என்ற பெயருடைய பலர் சங்க காலத்தில் சிறப்புற்றிருந்தது இங்கே குறிப்பிடத்தக்கதாகும்.

## வரிச்சியூர்

மதுரையிலிருந்து எட்டு கல் தொலைவில் இவ்வூர் இருக்கிறது. ஊருக்கு அருகில் உள்ள மலையை 'உதயகிரி' என்று கூறுகின்றனர். அதில் இயற்கையாக அமைந்த குகைத்தளத்தில் பல படுக்கைகள் அமைக்கப்பட்டுள்ளன. பாறையின் மேல் முகப்பில் கல்வெட்டு காணப்படுகிறது. கல்வெட்டு இடையிடையே சிதைந்து இருக்கிறது.

### கல்வெட்டு

1. . . . . பளிய் கொடுபி . .
2. . . டா . . இதா[வை]னுறகாலனே . .

இக்கல்வெட்டுகள் மிகவும் சிதைந்திருக்கின்றன.

### முத்துப்பட்டி

மதுரையிலிருந்து பத்துக் கல் தொலைவில் இருக்கிறது. இதை உம்மணாமலை என்று கூறுகிறார்கள். இங்கு இயற்கையாக அமைந்த குகைத் தளத்தில் படுக்கைகளும் கல்வெட்டுகளும் உள்ளன.

### கல்வெட்டு

1. சைஅளன் விந்தைஊர் காவிய் . .
2. நாகபேரூர் அதை சாத்தன் மகன் .
3. . . தி . . க்காத்தான் ம . . ணம் . . ய்

### கருத்து

1. சிங்களத்தைச் சேர்ந்த விந்தை ஊரன் என்பான் கொடுத்த இருக்கையைக் குறிக்கிறது. கல்வெட்டு சிதைந்துள்ளன.

### குன்றக்குடி

இராமநாதபுரம் மாவட்டத்தில் உள்ள குன்றக்குடி முருகப் பெருமானின் உறைவிடமாகப் புகழ்பெற்றது. முருகன் கோயில் மலை மேல் உள்ளது. மலையின் அடிவாரத்தே மூன்று குடைவரைக் கோயில்கள் அருகருகில் அமைக்கப்பட்டுள்ளன. இவை சுமார் கி.பி. 8-ம் நூற்றாண்டில் குடைவிக்கப்பட்டவை. இவை தவிர மலையின் பின்புறத்தே ஒரு குகைத் தளம் உள்ளது. சில படுக்கைகள் உள்ள இங்கே எழுத்துகள் பொறிக்கப்பட்டுள்ளன. இங்கே எழுதப்பட்டுள்ள எழுத்துகளில் ஒரு மாற்றம் காணப்படுகிறது. எழுத்துகளை சுவடியில் நேராக எழுதி ஒரு கண்ணாடியில் பார்த்தால் எவ்வாறு தலைகீழாகத் தெரியுமோ, அதே போன்று இங்கு எழுத்துகள் தலைகீழாகப் பொறிக்கப்பட்டுள்ளன.

### கல்வெட்டு

1. . . பிஊர் ஆதன் சாத்தன்
2. . . குடு . . த . . .

**புகளூர்**

திருச்சி மாவட்டம் கருவூரிலிருந்து பத்துக்கல் தொலைவில் உள்ள புகளூரில் 'ஆறுநாட்டார் மலை' என்ற மலை ஒன்று உண்டு. மலை அடிவாரத்தில் உள்ள ஊரை 'வேலாயுதம்பாளையம்' என்று குறிப்பர். மலை மேல் முருகப் பெருமானுக்கு ஒரு கோயில் உள்ளது. முருகன் கோயிலுக்குச் செல்ல படிகள் அமைக்கப்பட்டுள்ளன. மலை மேல் தென்புறமாக ஒரு இயற்கைக் குகைத்தளம் அமைந்திருக்கிறது. அவ்வழியிலே சென்று மலையைச் சுற்றி வந்தால் வடபுறத்திலும் ஒரு குகைத்தளம் இருக்கிறது. தென்புறத்தில் உள்ள குகைத்தளத்திலும், வடபுறத்தில் உள்ள குகைத்தளத்திலும் படுக்கைகளும், கல்வெட்டுகளும் இருக்கின்றன. தென்புறத்தில் உள்ள குகைத்தளத்தில் பல கல்வெட்டுகள் இருக்கின்றன. அவை வரலாற்றுச் சிறப்பு வாய்ந்தவை. வடபுற குகைத்தளத்தில் ஒரே ஒரு கல்வெட்டு இருக்கிறது. தென்புற குகைத்தளத்திலிருந்து வடபுற குகைத்தளத்திற்குச் செல்லும் வழியில் ஒரு பெரும் கல்லின் அடியிலும் படுக்கைகள் செதுக்கப்பட்டுள்ளன. ஆனால் அங்கு கல்வெட்டு ஏதும் இல்லை.

**வடபுறமுள்ள கல்வெட்டு**

1. ணாகன் மகன்ளங்கீரன்

**தென்புறக் குகையிலுள்ள கல்வெட்டு**

தென்புறக் குகைத்தளத்தில் படுக்கைகளின் பக்கவாட்டிலும், மேலே உள்ள பாறையின் முகப்பிலும் உள்ள இரு கல்வெட்டுகளே தமிழக வரலாற்றுக்கு இன்றியமையாதவை.

1. a. மூதா அமண்ணன் யாற்றூர் செங்காய பன் . .
   b. கோஆ . . ல்லிரும்புறை மகன் பெருங்
   c. கடுங்கோன் மகன் கடுங்கோன் ளங்கடுங்
   d. கோ ளங்கோ ஆக அறுபித கல் .
2. a. . தா அமண்ணன் யாற்றூர் செங்காய பன் உறைய்
   b. கோஆதன் செல்லிரும்பொறை மகன்
   c. பெருங்கடுங்கோன் மகன் ளங்
   d. கடுங்கோ ளங்கோ ஆகி அறுத்த கல்

குகைத்தளத்தில் படுக்கைகளின் தலையில் எழுதப்பட்டுள்ள கல்வெட்டுகளில் ஒன்று 'யாற்றூர் செங்காயபனை'க் குறிக்கிறது. ஆனால் அது மிகவும் சிதைந்துள்ளது. அதுவும் பிற கல்வெட்டுகளும் கீழே தரப்பட்டுள்ளன.

3. யாற்றூர் செங்காயபன் . . ட்டான்னம் . .
4. . . த்த அதிட்டானம் . .
5. . . அதிட்டானம்
6. . . ண்ண வாண்ணிகன்
7. . . தேநா ஆதன் அதிட்டானம்
8. பொ . . . .
   கண் . . . . .
   மகன் . . . .
   ளவ . . . .
9. கொற்றந்தைளஎய்
   முன்று

(இதை ஐ.மகாதேவன் கெற்றந்தை இளவன் மூன்று என்று படித்துள்ளார். கல்வெட்டில் மூன்று என்றே இருக்கிறது).

10. கருஊர் பொன் வாணிகன்
    நத்தி அதிட்டானம்
    (இதை ஐ. மகாதேவன் வாணிகன் அத்தி என்று பிரிக்கிறார்)
11. நல்லிபிஊர்அ பிடந்தை மகள்
    கீரன் கொற்ற . .
12. நல்பி ஊர்அ பிடன் குறும்மகள்
    கீரந்நோறி செயிபித பளி

**எழுத்து**

எழுத்துகள் இக்கல்வெட்டுகளில் வளர்ச்சி பெற்றவைகளாக காணப்படுகின்றன. 'அ' எழுத்து இடைவெளியின்றி சேர்த்து

எழுதப்பட்டிருக்கிறது. உயிர்மெய்யில் இகரத்தைக் குறிக்கும் குறி வளையத் தொடங்குகிறது. 'றகரம்' வளர்ச்சி பெற்று காணப்படுகிறது 'முன்று' போன்ற சொற்களில் மெய்யைக் குறிக்க புள்ளி காணப்படுகிறது. இந்த எழுத்துகளின் வளர்ச்சியைக் கொண்டு இக்கல்வெட்டுகளை கிறிஸ்துவின் சமகாலத்தவையாகக் கொள்ளலாம். இரும்பொறைக் கல்வெட்டில் 'தா அமண்ணன்' என்று இது காறும் படிக்கப்பட்டது. ஆனால் அதன் முன்னர் 'மூ' என்ற எழுத்து உள்ளது என்று திரு. நடன. காசிநாதன் கண்டுபிடித்துள்ளார்.

## சொல்

மூத்த என்ற பொருளில் 'மூதா' என்ற சொல் வழங்கப்பட்டுள்ளது. அமணன் என்பது 'அமண்ணன்' என்று எழுதப்பட்டுள்ளது. ஒரு கல்வெட்டில் 'இரும்பொறை' என்றும், மற்றொரு கல்வெட்டில் 'இரும்புறை' என்றும் எழுதப்பட்டுள்ளது. சொல்லின் இறுதியில் 'ன்'-னும் வருமொழியில் 'இ' கரமும் வரும் இடங்களிலெல்லாம் 'இ' கரம் மறைந்து சேர்க்கப்பட்டுள்ளது.

உதாரணம் :

மகன் + இளங் கடுங்கோ = மகன் ளங்கடுங்கோ
கடுங்கோன் + இளங் கடுங்கோ = கடுங்கோன்ளங் கடுங்கோ
ணாகன்மகன் + இளங்கீரன் = ணாகன்மகன்ளங்கீரன்

இது போன்ற சில இடங்களில் 'ன்' னும் மறைந்து 'இ'யும் மறைந்து காணப்படுகிறது.

உதாரணம்:

கடுங்கோன் + இளங்கோ = கடுங்கோளங்கோ

குறு + மகள் என்ற சொல் 'குறும்மகள்' என்று மகர ஒற்று இரட்டித்து எழுதப்பட்டுள்ளது. 'செயிபித', 'அறுபித' என்ற வழக்குகள் காணப்படுகின்றன.

'ணாகன்' என்ற சொல்லில் 'ண'கரம் சொல்லின் முதலில் வருவது குறிப்பிடத்தக்கது. இது இலக்கண மரபுக்கு ஏற்புடையது அல்லதாயினும் வழக்கில் இருந்துள்ளது என்று இதனால் தெரிகிறது. சுமார் கி.பி. 7-ம்

நூற்றாண்டைச் சேர்ந்த ஒரு கல்வெட்டிலும் 'ண'கரம் சொல்லின் முதலில் வரும் வகையில் 'ணாக்கையார்' என்ற பெயர் வந்துள்ளது.

### பொருள்

சேரன் இளங்கடுங்கோ 'இளங்கோ' பட்டம் எய்திய போது யாற்றூரைச் சார்ந்த செங்காயபன் என்பவருக்கு உறைவிடம் கொடுத்ததை இரு கல்வெட்டுகள் குறிக்கின்றன. இக்கல்வெட்டுகளில் சேர மன்னர்களுடைய மூன்று தலைமுறைகள் குறிக்கப்பட்டுள்ளது சிறந்த வரலாற்றுச் செய்தியாகும்.

"கோ ஆதன் செல்லிரும்பொறை"
"பெருங் கடுங்கோன்"
"இளங் கடுங்கோன்"

என்று தந்தை, மகன் என்னும் உறவில் குறிக்கப்படுகின்றன. இவற்றில் 'கோ' என்றும் 'இரும்பொறை' என்றும் 'ஆதன்' என்றும் பெயர்கள் வருவதால் இதில் குறிக்கப்பட்டுள்ளவர் சேர குலத்தைச் சார்ந்தவர் என்பதில் ஐயத்திற்கு இடமே இல்லை. அரசர் குலத்தில் மூன்று தலைமுறைகளைக் குறித்துள்ள மிகவும் தொன்மையான கல்வெட்டுகள் இவையே. இவற்றின் உதவி கொண்டு வரலாற்றை ஒருவாறு கணிக்கலாம். ஆதலின் தமிழகத்தின் சங்ககால வரலாற்றிற்கு இவை மிகவும் இன்றியமையாத கல்வெட்டுகளாகும்.

### புகளூர்க் கல்வெட்டுகளும் சங்க இலக்கியமும்

இந்த கல்வெட்டுகளை மிகவும் தெளிவாக படித்து அளித்த பெருமை திரு. ஐ. மகாதேவன் அவர்களையே சாரும். அவர் இக்கல்வெட்டுகள் குறித்து இரண்டாவது உலகத் தமிழ் மாநாட்டில் எழுதியுள்ள கட்டுரையில் பின்வருமாறு குறிக்கிறார்.

"கோ ஆதன் செல்லிரும்பொறை மகன் பெருங் கடுங்கோன், அவன் மகன் இளங்கடுங்கோன் என்பவனும் இக்கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ளனர். இவர்களில் 'ஆதன்' என்றும், 'செல்' என்றும் பெயர் கொண்டவன் சங்கால சேர மன்னர்களின் செல்வக்கடுங்கோவாழியாதன்' என்ற ஒரு மன்னனே ஆகும். பதிற்றுப் பத்தில் ஏழாம் பத்தின் பாட்டுடைத் தலைவன் அவனே. ஆதலின், புகளூர்க் கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ள 'கோஆதன் செல்லிரும்பொறை'யே, பதிற்றுப் பத்தின் ஏழாம் பாட்டின்

தலைவனான 'செல்வக் கடுங்கோ வாழியாதன்' என்பதில் ஐயமே இல்லை. இதிலிருந்து புகளூர் கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ள பெருங்கடுங்கோவும், இவன் மகன் இளங்கடுங்கோவுமே பதிற்றுப்பத்தில் வரும், 'பெருஞ்சேரல் இரும் பொறையும்' 'இளஞ்சேரல் இரும்பொறையும்' ஆகும். இவர்களே எட்டாவது, ஒன்பதாவது பாட்டுகளின் தலைவர்களாவர். 'பெருஞ்சேரல் இரும்பொறை'யே 'பாலை பாடிய பெருங்கடுங்கோ' என்றும், 'இளஞ்சேரல் இரும்பொறையே 'மருதம் பாடிய இளங்கடுங்கோ' என்றும் ஒரு வழிவழிக் கருத்து உண்டு. இதிலிருந்து இவர்கள் 'பெருங்கடுங்கோ' என்றும் 'இளங் கடுங்கோ' என்றும் பெயர் பெற்றிருந்தனர் என்பது தெளிவு ஆதலின் புகளூர்க் கல்வெட்டில் குறிக்கப்படுவோர் இவரே.

'இளஞ்சேரல் இரும்பொறை'யின் தந்தை 'குட்டுவன் இரும்பொறை' என்று குறிக்கப்பெறுகிறான். ஆனால் புகளூரில் 'பெருங்கடுங்கோன் தந்தையாகக் குறிக்கப்படுகிறான். 'குட்டுவன் இரும்பொறை' என்பது சேரர்களின் பொதுப் பெயர் எனக் கொள்ளல் வேண்டும் ஆதலின் பதிற்றுப்பத்தின் 7,8,9-பாட்டுகளின் தலைவர்களே புகளூர் கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ளனர்'' என்பது திரு.ஐ. மகாதேவன் அவர்களுடைய கட்டுரையின் சாரம்.

இங்கு கல்வெட்டுகளில் காணப்படும் பெயர்களுக்கும், இலக்கியத்தில் குறிக்கப்படுவோரின் பெயர்களுக்கும் உள்ள ஒற்றுமை கண்டு இருவரும் ஒருவரே என இணைத்துக் கூறுவது ஒரு போற்றத்தக்க முயற்சியாகும். இக்கருத்திலுள்ள உண்மையைப் புறக்கணித்துவிட முடியாது. இருப்பினும் இன்னும் சிறந்த சான்றுகள் பெறும்வரை இக்கருத்தை முடிந்த முடிவாகக் கொள்ளாமல் இவ்வாறு இருக்கலாம் எனக் கொள்வதில் தவறில்லை. காரணம் இன்னும் சில ஐயப்பாடுகள் இருக்கத்தான் இருக்கின்றன. இரும்பொறை வழி என்றும், குட்டுவன் வழி என்றும் இரு வழிகள் சேரர் குலத்தே இருந்தன என்றும், இரும்பொறை வழியே புகளூருக்கு அண்மையிலுள்ள கருவூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டனர் என்றும் கருதப்படுகிறது. ஆனால் சேரர் குலத்தே இரு வழிகள் இருந்ததாக கூற போதிய சான்றுகள் இல்லை.

### *பிட்டன்கொற்றன்*

"சங்க இலக்கியங்களில் சேரர்களின் தானைத் தலைவர்களாக கருதப்படும் பிட்டனும், பிட்டன் கொற்றனுமே புகளூர் கல்வெட்டில்

குறிக்கப்பட்டுள்ளனர். பிட்டனும், பிட்டன் கொற்றன் என்பவனும் தந்தை, மகன் என்னும் உறவினர். பிட்டன் மகன் கொற்றனும், அதியன் மகன் எழினியும் குதிரை மலையின் தலைவர்களாகக் குறிக்கப்படுகின்றனர். (புறம் 158, 168) பெருஞ்சேரல் இரும்பொறை அதியமானின் தகடுரை எறிந்த போது குதிரை மலையைக் கைப்பற்றி பிட்டன் கொற்றனுக்கு கொடுத்திருக்க வேண்டும். பிட்டன் கோசர்களின் தலைவனாய் இருந்திருக்கலாம். (அகம். 113, புறம். 169) பிட்டன் நல்லியூரைச் சேர்ந்தவனாகக் கூறப்படுகிறான். இது கோசர்களின் நல்லூர் போல் ஒலிக்கிறது. புகளூர் கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ள பெருங்கடுங்கோவே, பெருஞ்சேரல் இரும்பொறை என்றும், அவனே தகடூர் எறிந்தவன் என்றும் யான் கருதுகிறேன். அரிக்கமேட்டில் கிடைத்த பானை எழுத்துகளிலிருந்து புகளூர்க் கல்வெட்டுகள் இன்ன காலத்தைச் சார்ந்தவை என திட்டவட்டமாகக் கூறலாம். இக்காலத்தில்தான் ஔவை, கபிலர், பரணர், பாரி, அதிகைமான் முதலியோர் வாழ்ந்தனர்" எனவும் திரு.ஐ.மகாதேவன் குறித்துள்ளார்.

பிட்டன் கொற்றன் என்று கல்வெட்டில் இல்லை. ஒரு கல்வெட்டில் கடைசி எழுத்து சிதைந்துள்ளது. அது 'பிடந்தை மகள் கீரன்கொற்ற. .' என்று உள்ளது. மற்றதில் 'பிடன் குறும்மகள் கிரந்நோறி' என்று உள்ளது. இரு கல்வெட்டுகளிலும் மகள் என்றே வருவதால் இரண்டும் பெண்களைக் குறிக்கின்றன என்று கொள்ளலாம். அவ்வாறாயின் பிட்டன், கொற்றன் என்றும் அவன் குதிரை மலையின் தலைவன் என்றும் கொள்ள இடமில்லை. மேலும் இரு கல்வெட்டுகளிலும் 'நல்பி ஊர்' என்றே வருகிறது என்பதும் குறிப்பிடல் வேண்டும். இருப்பினும் 'பிடன்', 'கீரன்', 'ஓரி' முதலிய பெயர்கள் சேரர் கல்வெட்டுக்கு அருகில் கிடைத்துள்ளது ஒரு சிறப்பாகும். சங்க இலக்கியங்களில் வரும் பல பெயர்களை இவை நினைவூட்டுகின்றன. ஆதலின் இவை சங்க காலக் கல்வெட்டுகள் என திரு.ஐ. மகாதேவன் குறிப்பது முற்றிலும் பொருத்தமே.

## சேரர் தலைநகர் கருவூர்

புகளூர்க் கல்வெட்டில் கருவூர் பொன் வாணிகன் குறிக்கப்படுகிறான். கருவூர் புகளூரிலிருந்து சுமார் பத்துக் கல்தொலைவில் இருக்கிறது. சேரர்களுடைய தலைநகராகக் கருவூர் குறிக்கப்படுகிறது.

ஆதலின் இதற்கு அருகில் உள்ள கருவூரே சங்ககாலச் சேரர்களின் தலைநகராய் இருந்திருக்க வேண்டும் என்று திரு.ராகவ ஐயங்கார் குறிப்பிட்டுள்ளார். கருவூரில் ஓடும் 'ஆன்பொருணையே' 'ஆம்ராவதி' என திரிந்திருக்க வேண்டும். கருவூருக்கு வஞ்சி மாநகரம் எனப் பெயர் உண்டு. 'கருவூராகிய வஞ்சி மாநகர்' எனக் கல்வெட்டுகளில் குறிக்கப்படுகிறது. இக்கருவூருக்கு அருகிலேயே சேரர் கல்வெட்டுகள் காணக் கிடைக்கின்றன. கருவூர் உள்நாட்டுப் பகுதியில் இருந்தது என்று பண்டைய மேலை நாட்டார் குறித்துள்ளனர். சங்க காலத்தில் மேலை நாடுகளுடன் இந்நகருக்கு வணிகத் தொடர்பு இருந்தது என்பதனை இவ்வூருக்கு அருகில் கிடைத்துள்ள ரோமானிய நாணயங்கள் உறுதி செய்கின்றன. அன்றியும் சேரன் செங்குட்டுவனைப் பாடும் ஐந்தாம் பத்தில்

"காவிரி அன்றியும் பூவிரி புனல் ஒரு
மூன்று உடன் கூடிய கூடல் அனையை"

எனக் குறிக்கப்பட்டுள்ளது. காவிரியும் ஆன்பொருணையும், குடவன் ஆறும் ஒன்றுகூடும் கூடல் என்பது இதற்குப் பழைய உரை. 'ஆம்ராவதி' ஆறுதான் காவிரி ஆற்றுடன் கருவூருக்கு அருகில் கலக்கிறது. அங்கு 'முக்கூடல்' என்னும் ஊர் இன்றும் உண்டு. கருவூர் ஆன் பொருணையின் கரையில் அமைந்தது என்று இலக்கியம் குறிக்கும். மேலும் உறையூருக்கு அருகில் கருவூர் இருந்தது என்பதும் சங்க நூல்களிலிருந்து அறியக் கிடைக்கிறது. இவற்றிலிருந்தும், இந்நகரின் அண்மையில் காணக்கிடைக்கும் கல்வெட்டுகளில் வஞ்சி குறிக்கப்படுவதிலிருந்தும், கருவூர் சேரர்களின் ஒரு தலைநகராய்த் திகழ்ந்தது என்பதில் இனி எவ்வித ஐயமும் இருக்க முடியாது. இதைச் சிலர் ஏற்றுக் கொண்டிருக்கின்றனர்.

இக்கருத்தை சிலர் ஏற்றுக் கொள்வதில்லை. மேலைக் கடற்கரையில் உள்ள கொடுங்கோளூரே வஞ்சி என்று கூறுவோரும் உளர். இதுவே சேரர்களின் பண்டைய தலைநகர் என்றும் பின்னரே கருவூர் தலைநகராகியிருத்தல் வேண்டும் என்றும் அவர் குறிப்பர். ஆதலின் இது குறித்து கருத்து வேறுபாடு உண்டு. மேலைக் கடற்கரையில் உள்ள இடமே வஞ்சி எனக்கூறும் இலக்கியச் சான்றுகள் காலத்தால் மிகவும் பிற்பட்டவை. அப்பகுதி வஞ்சி என்று குறிக்க கல்வெட்டுச் சான்று ஏதும் இதுகாறும் கிடைத்தில. கிடைத்துள்ள தொன்மையான சான்றுகள் அனைத்தும் கருவூரின் அருகிலேயே உள்ளன.

எப்படி இருப்பினும் புகளூர்க் கல்வெட்டுகள் வரலாற்றுச் சிறப்பு வாய்ந்தவை என்பது இதிலிருந்து தெரியவருகிறது.

## மாமண்டூர்

காஞ்சிபுரத்துக்கு அருகில் பன்னிரண்டு கல் தொலைவில் வந்தவாசி செல்லும் சாலையில் மாமண்டூர் என்ற சிற்றூர் உண்டு. அதை 'தூசி மாமண்டூர்' என்று குறிப்பர். அவ்வூரின் புறத்தே உள்ள குன்றில் மகேந்திரவர்மன் காலத்தில் குடைவிக்கப்பட்ட மூன்று குடைவரைக் கோயில்கள் உள்ளன. அதன் அருகில் இயற்கையான குகைத்தளம் ஒன்று உண்டு. அக்குகைத்தளத்தில் சில படுக்கைகள் இருக்கின்றன. பாறையின் முகப்பில் கல்வெட்டு ஒன்று உள்ளது.

## கல்வெட்டு

கணிமான் தேனூர் தந்த கோன் குன்று
செயிதான் தசன் சிறு[வ்]வன்

கல்வெட்டின் அமைதி கொண்டு இது கி.பி.முதல் நூற்றாண்டைச் சார்ந்ததாகக் கொள்ளலாம்.

## அரச்சலூர்

கொங்கு நாட்டில் ஈரோட்டிலிருந்து காங்கேயம் செல்லும் பாதையில் பன்னிரண்டு கல் தொலைவில் அரச்சலூர் என்ற சிற்றூர் ஒன்று இருக்கிறது. ஊரின் எல்லையில் சாலையோரமாக நாகமலை என்ற மலை ஒன்று உள்ளது. அதில் ஆண்டிப்பாறை என்ற பகுதி உள்ளது. அங்கு பாண்டியர் குழி என்ற பகுதி உண்டு. அங்கே பண்டைய எழுத்துகள் உள்ள இயற்கை குகைத்தளம் இருக்கிறது. அதை அடைய மலையின் அடிவாரத்திலேயே செல்லவேண்டும். ஆண்டிப்பாறையை அடைந்தால் இயற்கைக் குகைத்தளத்தை அடையலாம்.

இங்கே தரையில் அருகருகில் மூன்று பண்டையத் தமிழ்க் கல்வெட்டுகள் உள்ளன. முதல் கல்வெட்டு ஐந்தெழுத்துகள் கொண்ட ஐந்து வரிகளாக இருந்திருக்க வேண்டும்.

### முதல் கல்வெட்டு

| | | | | |
|---|---|---|---|---|
| த | தை | தா | தை | த |
| தை | தா | தே | தா | தை |
| தா | தே | தை | தே | தா |
| தை | தா | தே | தா | தை |
| த | தை | தா | தை | த |

என்று உள்ளது.

### இரண்டாம் கல்வெட்டு

இரண்டாவது கல்வெட்டில் இரண்டாம் வரியும், ஐந்தாம் வரியும் சிதைந்துள்ளன. மூன்றாம் வரியில் நடு எழுத்து சிதைந்துள்ளது. ஆயினும் சிதைந்து போன எழுத்துகளை ஒருவாறு ஊகிக்கலாம். அதன்படி இரண்டாவது கல்வெட்டில் காணப்படுவது இதுவே.

| | | | | |
|---|---|---|---|---|
| கை | த | தை | தா | கை |
| த | தை | [த] | தை | த |
| தை | த | தை | த | தை |
| த | தை | [த] | தை | த |
| [கை | த | தை | த | கை] |

இவ்விரண்டு கல்வெட்டுகளையும் இடமிருந்து வலமாகப் படித்தாலும் மேலிருந்து கீழாகப் படித்தாலும் ஒரே மாதிரி உள்ளதைக் காணலாம். இவை இசைத்துறையிலும், கூத்துத் துறையிலும், பாடவல்ல எழுத்துகளை நினைவுறுத்துகின்றன.

### மூன்றாம் கல்வெட்டு

இவ்விரண்டிற்கும் அண்மையில் உள்ள மூன்றாம் கல்வெட்டு மிகவும் முக்கியமானது. இதை திரு. தி. நா. இராமசந்திரன், பேராசிரியர் மகாலிங்கம், திரு. ஐ.மகாதேவன், மத்திய அரசின் கல்வெட்டு ஆய்வுத்துறையினர் எனப் பலர் படித்துள்ளனர். இவர்கள் ஒவ்வொருவர் கட்டுரையிலும் சில மாறுதல்கள் காணப்படுகின்றன.

திரு. தி.நா.இராமச்சந்திரன் அவர்கள் இதை 'எழுத்தும் புணர்த்தான் மணிய வண்ணக்கன் ஆதன் சாத்தன்' என்று படித்துள்ளார். அருகிலுள்ள "தா, தை" என்று வரும் மற்ற இரண்டு கல்வெட்டுகளும் இத்துடன் சமகாலத்தவையே என்றும், மூன்றாம் கல்வெட்டுக்கும் மற்றவற்றிற்கும் தொடர்பு உண்டு என்றும் கொள்கிறார். ஆதன் சாத்தன் என்பவர் கூத்தாசிரியர், வர்ணகம் பாடவல்ல இசையாசான் என்றும், அவர் ஊர் மணியகாரராக இருந்திருக்க வேண்டும் எனக்கொண்டு மற்ற இரு கல்வெட்டுகளும் அடைவு வண்ணங்கன் என்றும் இராமச்சந்திரன் அவர்கள் கருத்துத் தெரிவித்துள்ளார்.

பேராசிரியர் மகாலிங்கம், இது ஆசீவகர் வாழ்ந்த இடம் என்று கொண்டு, மூன்றாம் கல்வெட்டை, 'சித்தம் தீத்தம் பூண தத்தான்' எனப்படித்துள்ளார். தவம் பூண தேவன் சாத்தன் இதை அளித்தான் என்று பொருள் கொள்கிறார். இவர் கருத்துப்படி மற்ற இரண்டு கல்வெட்டுகளும் பிற்காலத்தவை. அவற்றிற்கும் இந்த கல்வெட்டுக்கும் தொடர்பு இல்லை.

திரு. ஐ.மகாதேவன் 'ஏழு தானம் பண்வித்தான் மணிய் வண்ணக்கன் தேவன் சாத்தன்' எனப்படித்துள்ளார். அதன்படி, இங்கு மணிகளைச் சோதிக்கும் தேவன் சாத்தன் ஏழு படுக்கைகளைச் செய்தளித்தான் என்று பொருள் கூறுகிறார். மற்ற இரண்டு கல்வெட்டுகளும் இதே காலத்தவை என்றும், இவை யந்திரங்கள் போன்றவை என்றும் கூறுகிறார். மத்தியக் கல்வெட்டாய்வினர் இதை,

'எழுத்துப் புணருத்தான் மணிய்
வண்ணக்கன் தேவன் சாத்தன்'

எனக் கண்டுள்ளனர். மத்தியக் கல்வெட்டாய்வினர் படித்துள்ள சொற்றொடரே இந்தக் கல்வெட்டில் உள்ளது.

## இசை எழுத்து இலக்கணம்

இக்கல்வெட்டில் 'புணருத்தான்' என்ற சொல்லின் சிறப்பு அறியப்படவில்லை. எனவேதான் 'பண்வித்தான்' என்றும் 'பூண தத்தான்' என்றும் பலவிதமாகப் படித்துள்ளதைக் கண்டோம். புணருத்தான் என்பது புணர்த்தான் என்ற சொல்லின் திரிபே ரகரம் ருகரமாகத் திரிவது வழக்கின் இயல்பே. புணர்த்தான் எனில் தொகுத்தான், சேர்த்தான் என்று பொருள்படும்.

முக்கியமாக எழுத்துக்களைத் தொகுத்தல் அல்லது சேர்த்தலைப் புணர்த்தல் என்பது தமிழ் மரபு. தொல்காப்பியம் எழுத்ததிகாரத்தில் 'புணரியல்' என்றே ஒரு பகுதி இருக்கிறது. இசைத்துறையில் எழுத்துகள் தனி நிலை வகித்தும், உயிர் அளபு கடந்து இசைத்ததும் தொல்காப்பியச் சூத்திரத்திலிருந்து தெளிவுறும்.

## புணருத்தல்

இதனின்றும் வழக்கிலும் செய்யுளிலும் உள்ள எழுத்துகளைப் போல இசை எழுத்துகளைத் தொகுத்தலும் இசை நூல்களில் உள்ளது என்பது பெறப்படுகிறது. சிலப்பதிகாரம் அரங்கேற்றுக் காதையில் குழலோனமைதி கூறுமிடத்து இளங்கோவடிகள்

"சொல்லிய இயல்பின் சித்திர வஞ்சனை
புல்லிய அறிந்து புணர்ப்போன் பண்பின்"

என்று கூறுகிறார். அரும்பதவுரையாசிரியர், 'சித்திரப் புணர்ப்பாவது- இசை கொள்ளும் எழுத்துகளின் மேல் பண்ணீர்மை நிறுத்தல். வஞ்சனைப் புணர்ப்பாவது-இசை கொள்ளா எழுத்தின் மெல்லொற்று வந்துழி மெல்லொற்று போல் நெகிழ்த்துப் புணர்த்தல், புணர்ப்போன் பண்பின்- புணர்க்கத் தக்க பாடலாசிரியனை ஒத்த அறிவினை உடையன்' எனக் குறிக்கின்றார். இசைக்கும் தாளத்துக்கும் ஏற்ப எழுத்துகளைப் புணர்ப்பது சிலப்பதிகாரக் காலத்துக்கும் முன்னிருந்தே தமிழகத்தில் வழங்கிய பண்பு என்பது தெளிவாகும்.

கி.பி. 2-ஆம் நூற்றாண்டிலேயே இசை எழுத்துகளைத் தொகுத்துக் கல்லில் பொறித்த பெருமை தேவன் சாத்தனைச் சாரும். இங்கு மற்றொன்றும் நினைவிற் கொள்ள வேண்டும். சிலப்பதிகாரம் கி.பி. 2-ம் நூற்றாண்டில் இயற்றப்பட்டது என்று ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். அரச்சலூர்க் கல்வெட்டு சிலப்பதிகாரம் எழுதப்பட்ட காலத்தில் தோன்றியது என்பது ஒரு சிறப்பாகும்.

## தமிழ் வட்டெழுத்து தொடக்கம்

இக்கல்வெட்டு கி.பி. 2-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த தமிழி எழுத்துகளில் எழுதப்பட்டு உள்ளது. இதிலுள்ள மகரம், ணகரம் முதலிய

எழுத்துகள் வட்டெழுத்தின் தொடக்கத்தைக் காட்டுகின்றன. மற்ற எழுத்துகள் தமிழ் எழுத்துகளாக விளங்குகின்றன. அண்மையில்-தருமபுரி மாவட்டத்தில் கண்டுபிடிக்கப்பட்ட நடுகற்களிலிருந்து ஒரு பேருண்மை வெளியாயிற்று. கி.பி. 4-ஆம் நூற்றாண்டிலிருந்து 8-ஆம் நூற்றாண்டு வரையில் தமிழ் மொழிக் கல்வெட்டுகள் தமிழ் வட்டெழுத்து இரண்டும் கலந்த எழுத்துகளில் எழுதப்படுவதும் வழக்கம் என்பது புலனாயிற்று. அரச்சலூர்க் கல்வெட்டு இந்த வழக்கின் தொடக்கத்தைக் காட்டுவது மற்றொரு சிறப்பாகும்.

## *பிள்ளையார்பட்டி*

இராமநாதபுரம் மாவட்டம் குன்றக்குடிக்கு அருகில் பிள்ளையார் பட்டி என்ற ஊரில் ஒரு கோயில் குடைவிக்கப்பட்டுள்ளது. இது மலையைக் குடைந்து தோற்றுவிக்கப்பட்ட குடைவரைக் கோயிலாகும். ஒரு கருவறையும் இரண்டு அங்கணங்களை உடைய முகப்பும் உடையதாக குடைவிக்கப்பட்டுள்ள இக்கோவிலில், ஒரு குடைந்த உட்பகுதியில், அரைத் தூண் உடைய சுவற்றில் ஒரு கல்வெட்டு காணப்படுகிறது. இது தொன்மையான வட்டெழுத்து வடிவில் பொறிக்கப்பட்டிருக்கிறது.

## *கல்வெட்டு*

எக் காட்டூரு

க் கோன் பெருந்தசன்

இதைத் திரு.ஐ.மகாதேவன் 'எருக் காட்ரு கோன் பெரு பரணன்' என்று வாசித்திருக்கிறார். அவருக்கு முன்னர் வாசித்தவர்கள் கல்வெட்டின் பின்பகுதி தெளிவாக இல்லை என்று குறிப்பிட்டுள்ளனர். ஆயினும் இக்கல்வெட்டு குடைந்த பகுதியின் உள்ளே இருப்பதால் குடைவரைக் கோயில் தோற்றுவிக்கப்பட்ட கி.பி. 7-ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாக இருக்க வேண்டும் என்றும், ஆயினும் எழுத்தின் வடிவு மிகவும் தொன்மையானது என்றும் குறிப்பிட்டுள்ளனர். எழுத்தின் அமைதியைக் கொண்டு இது சுமார் கி.பி. 6-ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகக் கொள்ளலாம். 'பெருந்தச்சன்' என்று பண்டைக் காலத்தே ஸ்தபதிகளுக்கு பெயர் வழங்கியது உண்டு. ஆதலின் இக்கல்வெட்டு இக்குடைவரைக்

கோயிலைத் தோற்றுவித்த பெருந்தச்சனைக் குறிக்கிறது எனக் கொள்ளலாம். அவன் எருக்காட்டூரைச் சேர்ந்தவன் என்றும் 'கோன்' என்னும் சிறப்புப் பெயர் பெற்றவன் என்றும் கொள்ளலாம். இங்கே குறிப்பிட்டுள்ள காலம் ஏற்புடையதாயின் குடைவரைக் கோயில்களில் இது மிகவும் தொன்மையானதாகும். ஆதலின் இக்கல்வெட்டு வரலாற்றுச் சிறப்பு உடையதாகும்.



# தமிழ்க் கல்வெட்டுகள்

நடன. காசிநாதன்

## பல்லவர் காலம்

பல்லவர் காலத்தைச் சேர்ந்த தமிழ்க் கல்வெட்டுகள் இதுவரையில் சுமார் 260 கிடைத்துள்ளன. இவற்றில் கி.பி. 850க்கு முந்தியவை சுமார் 140 கல்வெட்டுகள் ஆகும். கி.பி. 6-ஆம் நூற்றாண்டுக்கு முன் அரசு செலுத்திய பல்லவர்கள் தங்களது செப்பேடுகளைப் பிராகிருத மொழியிலும் சமஸ்கிருத மொழியிலும் வெளியிட்டார்கள் என்றாலும் சிம்மவர்மன் காலம் தொடங்கி சமஸ்கிருதத்தோடு தமிழிலும் செப்புப் பட்டயங்களை வெளியிடத் தொடங்கினர். பல்லவர் காலத் தமிழ்க் கல்வெட்டுகளிலே மிகப் பழமையானது பள்ளன் கோயிலிலிருந்து கண்டெடுக்கப் பெற்ற சிம்மவர்மனின் செப்பேட்டில் எழுதப் பெற்றுள்ள தமிழ்ப் பகுதியேயாகும். இது சிம்மவர்மனின் ஆறாம் ஆட்சி ஆண்டில் வெளியிடப்பட்டதாகும். இதற்கு அடுத்ததாக, தர்மபுரி மாவட்டம் அரூர் வட்டத்தில் கோரையாறு என்ற இடத்தில் தமிழ்நாடு தொல்பொருள் ஆய்வுத்துறையால் கண்டுபிடிக்கப் பெற்ற சிம்மவிஷ்ணுவின் இருபத்தோராவது ஆட்சி ஆண்டுக் கல்வெட்டைக் கூறவேண்டும் இது நடுகல் கல்வெட்டு. இது தமிழ் மொழியிலும், வட்டெழுத்திலுமாக உள்ளது. இதற்கடுத்து, இம்மன்னனின் முப்பத்துமூன்றாம் ஆட்சி ஆண்டைச் சேர்ந்த, நரசிங்கநல்லூர்க் கல்வெட்டைக் குறிப்பிடவேண்டும். இதுவும் தமிழ்மொழியிலும் வட்டெழுத்திலுமாக உள்ளது. மகேந்திரவர்மன் காலத்திய தமிழ்க் கல்வெட்டுகளும் தமிழகத்தில் பெருமளவில் கிடைத்து வருகின்றன. அவற்றுள் முக்கியமாக வடார்க்காடு மாவட்டத்தில் பத்துக்கும் மேலாகக் கிடைத்துள்ள நடுகற்களைக் குறிக்கலாம். இந்நடுகற்கள் அனைத்தும் வட்டெழுத்திலும் தமிழ் மொழியிலுமாக உள்ளன. இம்மன்னன் காலத்தில் தமிழ் எழுத்தில் பொறிக்கப்பட்ட தமிழ்க் கல்வெட்டு ஒன்றும் கிடைத்துள்ளது. அது செங்கற்பட்டு மாவட்டம் வல்லம் என்ற ஊரில் கிடைத்துள்ள கல்வெட்டேயாகும். இம்மன்னர்களின் வழிவந்த முதலாம் நரசிம்மன், இரண்டாம் மகேந்திரவர்மன், முதலாம் பரமேசுவரவர்மன்,

இரண்டாம் நரசிம்மவர்மன், இரண்டாம் நந்திவர்மன், தந்திவர்மன், கம்பவர்மன் ஆகியோர் காலத்திய நடுகல் கல்வெட்டுகளும் கிடைத்துள்ளன. இரண்டாம் நந்திவர்மன் காலத்திலிருந்து தமிழ் எழுத்தில் பொறிக்கப்பெற்ற தமிழ்க் கல்வெட்டுகள், பெருமளவில் கிடைத்துள்ளன. அதிலும் சிறப்பாகக் கம்பவர்மன் காலத்திலிருந்து நல்ல தமிழில் சிறந்த அமைப்புள்ள கல்வெட்டுகளைக் காணமுடிகிறது.

பல்லவர்கள் காலக் கல்வெட்டுகள் அனைத்தும் "கோவிசைய" என்றே ஆரம்பமாகின்றன. இவர்கள் கல்வெட்டுகளில் பெரும்பாலும் அரசனின் ஆட்சி ஆண்டே குறிக்கப்பட்டு அவை எழுத்தால் எழுதப்பட்டுள்ளன. கல்வெட்டுகள் பல்லவ மன்னர்களை 'வர்மர்' என்றும் 'போத்தரையர்' என்றும் 'விக்கிரமபருமர்' என்றும் அடைமொழிகளால் குறிக்கின்றன. போத்தரையர் என்னும் அடைமொழி செங்கல்பட்டு மாவட்டம் வல்லம் என்ற ஊரில் கிடைத்த மகேந்திரவர்மனது கல்வெட்டில் முதலில் குறிப்பிடப்படுகிறது.

1. சத்துரும்மல்லன் குணபரன்
2. மயேந்திரப் **போத்தரெசரு** அடியான்
3. வயந்தப்பிரியரெசரு மகன் கந்தசேனன்
4. செய்வித்த தேவகுலம் (S.I.I. vol. II p.341)

பல்லவர்கள் கால நடுகல் அனைத்தும் வட்டெழுத்திலும் தமிழ் மொழியிலுமாக உள்ளன. ஆனால் இம்மன்னர்களால் குடைவிக்கப் பெற்ற குடைவரைக் கோயில்களிலாயினும் சரி, எழுப்பப்பெற்ற கோயில் களிலாயினும் சரி வட்டெழுத்தில் கல்வெட்டுகள் காண முடியவில்லை. தமிழ் எழுத்தில் காணப்படுவதும் மிகக் குறைவாகவே உள்ளது. அதே போன்று கி.பி. ஆறாம் நூற்றாண்டு முதலே தமிழ் எழுத்தையும் நன்கு அறிந்திருந்தார்கள் என்றாலும் அவர்கள் கால நடுகற்கள் அனைத்தும் வட்டெழுத்திலேயே காணப்படுகின்றன. இத்தகைய அமைப்புகளுக்கு ஏதாவது ஒரு காரணம் இருந்திருக்கக்கூடும்.

பல்லவர்கள் காலத் தமிழ்க் கல்வெட்டுகளில் "ஸ்வஸ்திஸ்ரீ" என்ற மங்கல வாசகம் பல்லவ மன்னன் இரண்டாம் நந்திவர்மன் காலத்திலிருந்து காணப்படுகிறது.

பல்லவர்கள் காலத் தமிழ்க் கல்வெட்டுகள் தொண்டை மண்டலம், சோழ மண்டலம் ஆகிய பகுதிகளில் பரவிக் காணக் கிடைக்கின்றன.

சயாம் நாட்டில் உள்ள தக்கோலம் (தகூஉபா) என்ற இடத்திலும் பல்லவர்கள் காலத் தமிழ்க் கல்வெட்டு கிடைத்துள்ளது.

பல்லவர்கள் தாங்கள் வெற்றி கொண்ட ஊரைத் தங்களது பெயரோடு சேர்த்து வழங்கி வந்துள்ளனர் என்பதையும் கல்வெட்டுகள் மூலம் உணர முடிகிறது. முதலாம் நரசிம்மவர்மன், சாளுக்கிய மன்னர்களின் தலைநகரான வாதாபியை வெற்றி கொண்டதன் காரணமாக 'வாதாபி கொண்ட நரசிம்மன்' என்று ஒரு பெயர் வழங்கி வந்தது திருக்கழுக்குன்றம் கல்வெட்டால் புலப்படுகிறது. அதே போன்று மூன்றாம் நந்திவர்மன், தெள்ளாற்றில் நிகழ்ந்த போரில் தான் வெற்றி அடைந்ததின் காரணமாகத் தெள்ளாற்றெறிந்த நந்திவர்மன் என்று பெயர் தரித்துக் கொண்டான் என்பது மற்றொரு கல்வெட்டால் தெரியவருகிறது.

பல்லவ மன்னன் அபராஜிதன் வெண்பா இயற்றும் திறமை படைத்தவர் என்பதைத் திருத்தணியிலிருந்து கிடைத்துள்ள கல்வெட்டு மூலம் உணரலாம். அக்கல்வெட்டு பின்வருமாறு பொறிக்கப்பட்டுள்ளது.

திருந்து திருத்தணியில் செஞ்சடை ஈசர்க்கு
கருங்கல்லால் கற்றளியா நிற்க- விரும்பிய
நற்கலைகளெல்லாம் நவின்ற சீர் நம்பி அப்பி
பொற்பமைய செய்தான் புரிந்து.

தென்னார்க்காடு மாவட்டம், தளவானூரிலும் கி.பி. 8-ம் நூற்றாண்டைச் சார்ந்த தமிழ்க் கல்வெட்டு ஒன்று பாடலாக உள்ளது. இதனுடைய வடமொழி ஆக்கமும் அருகில் பொறிக்கப்பட்டுள்ளது. திருச்சி மாவட்டம், திருவெள்ளறையில் பல்லவ மன்னன் தந்திவர்மன் காலத்தில் ஒரு பாடல் பொறிக்கப்பட்டுள்ளது. அது

"ஸ்ரீ கண்டார்காணா வுலகத்திற் காதல் செய்து நில்லாதேய்
பண்டேய் பரமன் படைத்த நாள் பார்த்து நின்று நைய்யாதேய்
தண்டார் மூப்பு வந்துன்னைத் தளரச் செய்து நில்லாமுன்
னுண்டேல் லுண்டு மிக்கது உலகம் மறிய வைம்மினேய்"

என்பதாகும்.

பல்லவர்கள் காலத் தமிழ்க் கல்வெட்டுகள் மூலம் அவர்களது ஆட்சி முறை, வேளாண்மை, நீர்ப்பாசனம், சமயவழிபாடு, கலை, பண்பாடு

ஆகியவற்றைத் தெளிவாக அறிந்து கொள்ள முடிகிறது. நாட்டுப் பகுதிகள் கோட்டம், நாடு, ஊர் என்று பிரிக்கப்பட்டிருந்ததையும் கல்வெட்டுகள் உணர்த்துகின்றன.

## பாண்டியர் காலம் (கி.பி. 575-900)

பாண்டியர்களின் ஆரம்ப காலக் கல்வெட்டுகள் அனைத்தும் தமிழகத்தின் தென் பகுதியில் கிடைப்பதிலிருந்தே அவர்கள் முதலில் தென் பகுதியில்தான் தங்கள் ஆதிக்கத்தைச் செலுத்திக் கொண்டிருந்தனர் என்பது தெளிவாகும். பாண்டிய மன்னர்கள் தொடக்கத்திலிருந்தே, கல்வெட்டுகளிலும் செப்பேடுகளிலும் தமிழ் மொழியைப் பயன்படுத்தி வந்துள்ளனர். இவர்கள் காலத்தில், மிகப் பழமையான தமிழ் மொழிக் கல்வெட்டுகள் அனைத்தும் வட்டெழுத்திலேயே உள்ளன.

பாண்டியர்களின் தமிழ்க் கல்வெட்டுகளில் மிகவும் பழமையானது மதுரை வைகைக் கரையில் கிடைத்துள்ள தமிழ்க் கல்வெட்டே ஆகும். அது வட்டெழுத்தில் எழுதப்பட்டுள்ளது. இதனுடைய மறு படிவம் வடமொழியில் அங்கேயே பொறிக்கப்பட்டுள்ளது. இது பாண்டிய மன்னன் சேந்தன் காலத்தது. அம்மன்னனின் 50-ஆம் ஆட்சி ஆண்டில் பொறிக்கப்பட்டுள்ள இக்கல்வெட்டு அம்மன்னன் மங்கலாபுரம் அமைத்ததையும், வைகையில் மதகுக் கட்டியதையும், “அரிகேசரியான்” என்ற கால்வாயைத் தோண்டியதையும் குறிக்கிறது. அடுத்தாற் போன்று ஜடிலவர்மன் பராந்தக நெடுஞ்சடையனின் வேள்விக்குடிச் செப்பேட்டில் வரும் தமிழ்ப் பகுதியைக் குறிக்கவேண்டும். இது அம்மன்னனின் மூன்றாம் ஆட்சி ஆண்டில் வெளியிடப்பட்டதாகும். இதிலுள்ள தமிழ்ப் பகுதி வட்டெழுத்தில் பொறிக்கப்பட்டுள்ளது. இதே காலத்தது என்று கருதப்படும், ஆனைமலைத் தமிழ்க் கல்வெட்டும் வட்டெழுத்தில்தான் பொறிக்கப்பட்டுள்ளது. இக்கல்வெட்டின் மற்றொரு படி வடமொழியில், அருகில் பொறிக்கப்பட்டுள்ளது. அதில் கலி ஆண்டு குறிப்பிடப்பட்டிருப்பது பாண்டிய மன்னர்களின் காலத்தை அறிந்து கொள்வதற்குப் பெருந்துணை புரிகிறது. கலி ஆண்டு 3871-அதாவது கி.பி. 770-இல் பாண்டிய மன்னன் பராந்தக மாறஞ்சடையனின் உத்தர மந்திரியான மாறங்காரி என்னும் மூவேந்தமங்கலப் பேரரையன் என்பான் ஆனைமலையிலுள்ள நரசிம்மர் ஆலயத்தைக் குடைவித்தான் என்பதை அக்கல்வெட்டு குறிக்கிறது. இதிலிருந்து பராந்தக மாறஞ்சடையன் என்ற மன்னன் கி.பி.770-இல்

ஆண்டான் என்பது தெளிவு. இம்மாறங்காரியும் வேள்விக்குடிச் செப்பேட்டில் ஆணத்தியாகக் குறிக்கப்படும் மாறங்காரியும் ஒருவரே எனக்கொண்டு, வேள்விக்குடிச் செப்பேடு ஜடிலவர்மன் பராந்தக நெடுஞ்சடையனின் மூன்றாம் ஆட்சி ஆண்டில் வெளியிட்டிருப்பதால் அம்மன்னன் அரசு கட்டில் ஏறியது கி.பி. 767-68 ஆக இருக்கலாம் என்று வரலாற்றாசிரியர்கள் கருதுகிறார்கள்.

இக்கருத்துக்கு மேலும் வலுவூட்டுவதாக அதே மன்னனின் காலத்தைச் சார்ந்ததாகக் கருதப்படும் திருப்பரங்குன்றம் கல்வெட்டுகள் அமைகின்றன. திருப்பரங்குன்றத்திலுள்ள துர்க்கைக் கோயில் வாயிலின் மேல் கல்லில் காணப்படும் கல்வெட்டு கலி ஆண்டு 3874 அதாவது கி.பி. 773-இல் பொறிக்கப்பட்டுள்ளது. அது கணபதி என்னும் சாமந்த பீமன், சிவபெருமானுக்கு கோயில் குடைவித்ததைக் குறிக்கிறது. அங்கேயே ஒரு தூணில் காணப்படும் மாறஞ்சடையனின் ஆறாம் ஆட்சி ஆண்டில் பொறிக்கப்பட்டுள்ள மற்றொரு கல்வெட்டு பாண்டி அமிர்தமங்கலப் பேரரையனாயின சாத்தன் கணபதி என்பான் திருக்கோயில் எடுப்பித்ததைக் குறிக்கிறது. இரண்டாம் கல்வெட்டில் குறிக்கப்பெறும் திருக்கோயிலும் முதல் கல்வெட்டில் காணப்பெறும் சம்புவுக்காக அமைக்கப்பெற்ற கோயிலும் ஒன்று என்று கருதினால் முதல் கல்வெட்டில் குறிக்கப்பெறும் கலி ஆண்டு 3874 மாறஞ்சடையனின் 6-ஆம் ஆட்சி ஆண்டுக்குச் சமமாகிறது. அவ்வாறெனில் கலி 3868-அதாவது கி.பி.767-68 மாறஞ்சடையனின் ஆட்சியில் தொடக்கமாக அமைகிறது. இந்த வகையில் மாறஞ்சடையனின் காலத்தைக் கணிக்க மேற் கூறப்பெற்ற செப்பேடுகளும் கல்வெட்டுகளும் உறுதுணையாகின்றன. அடுத்து, சிறப்பாகக் கருதப்படுவது ஸ்ரீவரமங்கலம் செப்பேடு என்பதாகும். இதிலும் தமிழ்ப்பகுதி வட்டெழுத்திலேயே உள்ளது. பாண்டியர்களின் காலத்தைக் கணிப்பதற்கு மற்றுமொரு கல்வெட்டு உதவியது. இது மதுரை மாவட்டம், ஐவர்மலைக் கல்வெட்டாகும். இக்கல்வெட்டில் சக ஆண்டு 792 அதாவது கி.பி. 870க்குச் சமமாக பாண்டிய மன்னன் வரகுணனின் 8-ஆம் ஆட்சி ஆண்டு கொடுக்கப்பட்டுள்ளது. இதிலிருந்து வரகுண பாண்டியன் கி.பி. 862-63-இல் ஆட்சி செய்யத் தொடங்கினான் என்பது தெரியவருகிறது. அத்தோடு இவன் இரண்டாம் வரகுணனாகத்தான் இருக்கமுடியும் என்பதும் உறுதியாகிறது. இக்கல்வெட்டும் தமிழ் மொழியிலும் வட்டெழுத்திலுமாக உள்ளது.

பாண்டியர் காலக் கல்வெட்டுகளில் மன்னர்கள் "கோமாறஞ் சடையர்" என்றும், "கோச்சடையமாறர்" என்றும் அடைமொழிகளால் வழங்கப்

படுகின்றனர். திருச்சி மாவட்டம் லால்குடியில் காணப்பெறும் ஒரு கல்வெட்டு "ஸ்ரீகோமாறஞ்சடையனாயின பாண்டிய குலபதி வரகுணமஹாராயர்" என்று குறிக்கிறது. ஆண்டு குறிப்பிடப்படும்போது பாண்டியர் காலக் கல்வெட்டுகளில் ஒரு புதிய முறை கையாளப்பட்டுள்ளது ஒரு ஆண்டு குறிக்கப்பட்டு அதற்கு எதிராமாண்டு என்று இன்னொரு ஆண்டு குறிக்கப்படுகிறது. உதாரணமாக "*ஸ்வஸ்திஸ்ரீ* கோமாறஞ்சடையற்கு யாண்டு நான்கு இதெனெதிர் எட்டு" என்று வருகிறது என்றால் நான்கு + எட்டு என்று கொள்ளல் வேண்டும். இதை இவ்வாறு கொள்வதற்கு சின்னமனூர் பெரிய செப்பேடு துணை செய்தது. இச்செப்பேடு வடமொழி, தமிழ் ஆகிய இரு மொழிகளில் எழுதப்பட்டுள்ளது. வடமொழிப் பகுதி இரண்டாம் இராஜசிம்மனின் ஆட்சி ஆண்டை பதினாறாம் ஆண்டு என்றும்; தமிழ்ப் பகுதி இராஜசிம்மனின் ஆட்சி ஆண்டை "இரண்டாவதன் எதிர்ப் பதினான்காம்" ஆண்டு என்றும் குறிக்கிறது. தமிழப் பகுதியில் வரும் இரண்டாவதின் எதிர் பதினான்காம் ஆண்டு என்பதைக் கூட்டினால்தான் வடமொழிப் பகுதியில் காணப்படும் பதினாறாம் ஆண்டுக்குச் சரியானதாகும். எனவேதான் இது போன்று எதிர் என வரும்போது கூட்டி மதிப்பிட வேண்டும் என்று ஆராய்ச்சியாளர்கள் தீர்மானித்துள்ளனர்.

பாண்டியர் காலக் கல்வெட்டுகளில் ஆண்டோடு நாட்களும் குறிக்கப்டுகின்றன. கோமாறஞ்சடையற்கு யாண்டு நான்கு நாள் ஈராயிரத்தைந் நூற்றொன்று என்று திருச்சிராப்பள்ளியில் காணப்படும் ஒரு கல்வெட்டில் எழுதப்பட்டிருக்கிறது. சில கல்வெட்டுகளில் ராசி, கிழமை, நட்சத்திரம் ஆகியவையும் கொடுக்கப்பட்டுள்ளன. திருவெள்ளறையில் காணப்படும் ஒரு கல்வெட்டு, 'கோமாறஞ்சடையற்கு யாண்டு நாலாவதற் கெதிர் ஒன்பதாவது விருச்சிக ஞாயிற்று திங்கட் கிழமை பெற்ற அஸ்வதி முதலாக' என்று கோள் நிலைகளையும் கிழமையையும் தெரிவிக்கிறது. இவைகள் அக்கல்வெட்டின் காலத்தை அறிவதற்குப் பெரிதும் உதவியாக உள்ளன.

பாண்டியர்களின் செப்பேடுகளில் காணப்படும் தமிழ்ப் பகுதியும், ஒரு சில கல்வெட்டுகளும் நல்ல செய்யுளுருவில் அமைக்கப் பெற்றுள்ளன.

> "பல்யாக முதுகுடுமிப் பெருவழுதியென்னும் பரமேச்வரனால்
> வேள்விகுடி யென்னப்பட்டது கேள்வியிற் றரப்பட்டதனைத்
> துளக்கமில்லாக் கடற்றானையாய் களப்பிரரா விறக்கப்பட்டது
> என்றுநின்றவன் விக்ஞாப்யஞ்செய்ய நன்றுநன்றென்று முறுவலித்து
> நாட்டானின் பழமையாதல் காட்டிநீ கொள்கவென்ன"

என்று மிக அழகாக வேள்விக்குடிச் செப்பேட்டில் எழுதப்பட்டுள்ளது. இவ்வாறு எழுதுவதற்கு தமிழில் நல்ல தேர்ச்சி பெற்றிருக்க வேண்டும் அல்லவா, இத்தேர்ச்சி அவர்கள் மட்டுமல்ல அவர்கள் முன்னோர்களும் பெற்றிருந்தார்கள் என்பது "மாபாரதம் தமிழ்ப் படுத்தும் மதுராபுரிச் சங்கம் வைத்தும்'' என்று சின்னமனூர்ப் பெரிய செப்பேட்டில் காணப்படும் தொடரிலிருந்து தெரிந்து கொள்ளலாம். தளவாய்புரச் செப்பேடு "தென்மதுராபுரஞ் செய்தும் அங்கதனிலருந்தமிழ் நற்சங்கம் இரீஇத் தமிழ்வளர்த்தும்'' என்றும் பாண்டியர்களின் பெருமையைப் பற்றிப் பேசுவதாலும் உணரலாம். சிவகாசிச் செப்பேட்டின் தமிழ்ப் பகுதி பாண்டிய மன்னர்கள் அகஸ்தியரோடு தமிழ் ஆய்ந்ததைக் குறிப்பதாலும் தெரிந்து கொள்ளலாம்.

பாண்டியர் காலத்தில் முத்தமிழ்ப் புலமை பெற்ற சிறந்த அறிஞர்கள் இருந்தனர் என்பதும் அவர்களுள் ஒரு சிலருக்குத் "தமிழவேள்" என்ற பட்டம் அளிக்கப்பட்டிருந்ததும் கல்வெட்டுகளின் மூலம் உணர முடிகிறது. மதுரை மாவட்டம் கீழ்மாத்தூர் என்ற ஊரில் காணப்பெறும் கல்வெட்டில் தமிழவேள் என்று ஒருவர் குறிக்கப்பட்டு அவர் முத்தமிழிலும், வேதம், புராணம், பாதஞ்சல முதற் பனுவல் ஆகிய நூல்களிலும் நல்ல தேர்ச்சி பெற்றவர் என்று கூறுகிறது.

பாண்டியர் காலத்து ஒரு சில கல்வெட்டுகளில் ஆய்மன்னர்கள் குறிக்கப்படுகின்றனர். இவர்கள் வெளியிட்ட சில செப்பேடுகளும் கிடைத்துள்ளன. இம்மன்னர்கள் பாண்டிய நாட்டுக்கும் சேர நாட்டுக்கும் இடைப்பட்ட பகுதியில் ஆட்சி செய்தவர்கள், இவர்கள் வேளிர் குலத்தைச் சேர்ந்தவர்கள். இவர்கள் வழிவந்தவர்கள்தான் பிற்காலத்தில் வேணாட்டு அரசர்கள் என்று குறிக்கப்படுபவர்கள். திருநெல்வேலி மாவட்டம், கழுகுமலையில் காணப்படும் கல்வெட்டு பாண்டிய மன்னன் மாறஞ்சடையன் மலை நாட்டுசடையன் கருநந்தன் மேல் படையெடுத்துச் சென்றதைக் குறிக்கிறது. இம்மன்னன் ஆய் மன்னன் என்று மத்திய அரசு கல்வெட்டுப் பிரிவினர் கருதுகின்றனர். பார்த்திவசேகர புரத்திலிருந்து கிடைத்துள்ள, ஆய் மன்னன் கருநந்தடக்கனின் செப்பேடு கலி ஆண்டை வெறும் நாட்களினால் மட்டும் தெரிவிக்கிறது. "கலியுகக் கோட்டு நாள் பதினான்கு நூறாயிரத்து நாற்பத்து ஒன்பதினாயிரத்து எண்பத்து ஏழு சென்ற நாள்" என்று கூறுகிறது. இச்செப்பேடு மன்னன் "காந்தளூர் மரியாதையால்" ஒரு சாலையை நிறுவினான் என்றும் அச்சாலையில் 95 சட்டர்களுக்குச்

சாப்பாட்டிற்கு ஏற்பாடு செய்தான் என்றும் அறிவிக்கிறது. இச்செப்பேடு வரலாற்றாசிரியர்களுக்குப் பெரும் புதிராக இருந்த 'காந்தளூர்ச் சாலை'க்கு ஒரு தீர்வைத் தருகிறது. காந்தளூர் மரியாதையால், சாலை ஏற்படுத்தி சட்டர்களுக்கு உணவளிக்க ஏற்பாடு செய்தான் என்பதிலிருந்து, முதலாம் இராஜராஜன் வெற்றி கொண்டதாகக் கூறிக்கொள்ளும் காந்தளூர்ச் சாலையும் இதைப் போன்ற ஒரு அமைப்புதான் என்று தீர்மானிப்பதற்கு வழி கோலுகிறது.

பாண்டியர்கள் காலக் கல்வெட்டுகள் ஒரு குலத்திலிருந்து வந்தவர்களை மிகவும் புகழ்ந்து கூறுகின்றன. களக்குடி என்னும் கரவந்தபுரத்தில் இருந்த வைத்ய குலத்தைச் சேர்ந்த சிலர் பாண்டிய மன்னர்களின் கீழ் உத்தர மந்திரிகளாகவும், ஆணத்திகளாகவும், சாமந்தர்களாகவும் நல்ல உயர்ந்த பதவிகளை வகித்து வந்தனர் என்று கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. வைத்ய குலத்தைச் சேர்ந்த மாறங்காரி என்பான் பாண்டிய மன்னன் பராந்தக நெடுஞ்சடையனின் கீழ் உத்தர மந்திரியாக இருந்து உதவியிருக்கிறான். மாறன் எயினன் என்பான் மாறங்காரியின் இளவல். இவன் அண்ணனுக்குப் பின் முதல் அமைச்சர் பதவியை வகித்து வந்துள்ளான். அதே குலத்தைச் சேர்ந்த சாத்தன் கணபதி என்பான் அதே மன்னன் காலத்தில் மகாசாமந்தனாக இருந்து வந்திருக்கிறான். சாத்தன் கணபதியின் உடன் பிறப்பான ஏனாதி சாத்தன் என்பவன் வேள்விக்குடிச் செப்பேட்டின் தமிழ்ப் பகுதியைப் பாடியவன். இவனது 'ஏனாதி' பட்டம் இவனை ஒரு முக்கியமான படைத்தலைவனாகவும் அறிமுகப்படுத்துகிறது.



# தமிழ்க் கல்வெட்டுகள்-2

கு. தாமோதரன்

## சோழர் காலம்

சோழர் காலக் கல்வெட்டுகளை இரு வகையாகப் பிரிக்கலாம். இராஜராஜன் அரியணை ஏறும் வரையில் ஆண்ட சோழ மன்னர்களின் கல்வெட்டுகள் என்றும் இராஜராஜன் காலம் தொடங்கி பின்னர் ஆண்ட மன்னர்களின் கல்வெட்டுகள் என்றும் கொள்ளலாம். இராஜராஜனுக்கு முன் ஆண்ட மன்னர்களுடைய கல்வெட்டுகள் பெரும்பாலும் சுருக்கமாகவும் பெரிய எழுத்துகளில் எழுதப்பெற்றும் உள்ளன. மன்னன் அடைந்த வெற்றியைத் தெளிவாகக் கூறும் மெய்க்கீர்த்தி என்னும் பகுதி அவற்றில் இடம் பெறா. கல்வெட்டின் தொடக்கத்தில் அரசனுடைய பெயர் குறிப்பிடப்படாமல் பெரும்பாலும் பரகேசரி அல்லது இராஜகேசரி என்றே குறிக்கப்பட்டிருக்கும். இருப்பினும் மன்னர்கள் தாங்கள் பெற்ற வெற்றியையும், பரகேசரி, இராஜகேசரி பட்டங்களோடு இணைத்து வழங்குவதும் உண்டு. விஜயாலய சோழன் தஞ்சையைக் கைப்பற்றியதால் 'தஞ்சைகொண்ட பரகேசரி' என்று கல்வெட்டுகளில் காணப்படுகிறது. முதல் ஆதித்த சோழன் தொண்டை நாட்டை வெற்றி கொண்டதால் 'தொண்டை நாடு பாவிய இராஜகேசரி' என்று பெயர் சூட்டிக் கொண்டான். பராந்தக சோழன் 'மதிரை கொண்ட கோப்பரகேசரி' என்றே அவனுடைய பெரும்பாலான கல்வெட்டுகளில் குறிக்கப்பட்டுள்ளான். மதிரை கொண்ட கோப்பரகேசரி என்று கல்வெட்டு தொடங்குமானால் அது முதலாம் பராந்தகனின் கல்வெட்டு என்று கூறிவிடலாம். இது தவிர அவன் ஈழத்தையும் கைப்பற்றியதால் 'மதுரையும் ஈழமும் கொண்ட கோப்பரகேசரி' என்று சில கல்வெட்டுகளில் குறிக்கப்படுகிறான். 'மதுரை கொண்ட இராஜகேசரி' என்று சுந்தரசோழன் அழைக்கப்படுகிறான். வீரபாண்டியன் தலைகொண்ட பரகேசரி என்று ஒரு மன்னன் குறிக்கப்பெறுகிறான். இவன் இராஜராஜனின் தமையனான ஆதித்த கரிகாலன் என்று வரலாற்று ஆசிரியர்கள் கருதுகிறார்கள்.

## இராஜராஜனும் பின் வந்தவர்களும்

இராஜராஜன் தன் ஆட்சியின் தொடக்கத்தில் 'கோவிராஜராஜ ராஜகேசரி' என்று தன் கல்வெட்டைத் தொடங்குவது வழக்கம், ஆதலின் 'ராஜ' என்ற சொல் மூன்று முறை தொடக்கத்தில் இருந்தால் அது ராஜராஜனின் கல்வெட்டு என்று திட்டவட்டமாகக் கூறலாம். பின்னர் காந்தளூர் சாலையில் பெரும் வெற்றி கண்டான். ஆதலின் "சாலை கல மறுத்தருளிய" அல்லது "காந்தளூர் சாலை கல மறுத்தருளிய" என்று கல்வெட்டுகள் தொடங்கும். இராஜராஜன் சிறந்த தமிழ் நடையில் மெய்க்கீர்த்திகளை அமைத்திருக்கிறான். அவனுடைய மெய்க்கீர்த்தி இவ்வாறு உள்ளது.

"திருமகள் போலப் பெருநிலச் செல்வியுந்
தனக்கே உரிமை பூண்டமை மனக் கொளக்
காந்தளூர்ச் சாலைக் கலமறுத் தருளி
வேங்கை நாடும் கங்க பாடியும்
நுளம்ப பாடியும் தடிகை வழியுங்
குடமலை நாடுங் கொல்லமும் கலிங்கமும்
எண்டிசை புகழ்தர ஈழ மண்டலமும்
இரட்டபாடி ஏழரை யிலக்கமும்
திண்டிறல் வென்றித் தண்டாற் கொண்ட
தன்னெழில் வளரூழியு ளெல்லா யாண்டுந்
தொழுதக விளங்கும் யாண்டே செழியரைத்
தேசுகொள் கோராஜ கேசரி வர்மரான
ஸ்ரீராச ராச தேவர்க்கு யாண்டு. . . ."

இராஜராஜன் காட்டிய வழியைப் பின்பற்றி பின் வந்த சோழப் பேரரசர்கள் தமிழ் கமழும் சிறந்த மெய்க்கீர்த்திகளை எழுதி வைத்துள்ளனர். ஒரே மன்னன் ஆட்சியின் தொடக்கத்தில் பெற்ற வெற்றிகள் அவன் மெய்க்கீர்த்தியில் இடம் பெறும். பின்னர் படிப்படியாக அவன் பெற்ற வெற்றிகள் அவ்வப்போது எழுதப்படும் மெய்க்கீர்த்தியில் இணைத்துக் கொள்ளப்படும். அவன் ஆட்சியில் கடைசியில் எழுதப்பட்ட மெய்க்கீர்த்தியில் அவன் அடைந்த வெற்றிகள் அனைத்தும் இடம் பெறும். ஒரே மன்னனுக்கு இரண்டு அல்லது மூன்று வகைப்பட்ட மெய்க்கீர்த்திகளும்

உண்டு. மிகப் பெரிய மெய்க்கீர்த்தி, குறுகிய மெய்க்கீர்த்தி என்று ஒரே மன்னனுக்கு இரண்டு அல்லது மூன்று வகைப்பட்ட மெய்க்கீர்த்திகளும் உண்டு. மிகப் பெரிய மெய்க்கீர்த்தி, குறுகிய மெய்க்கீர்த்தி என்று இருவகை மெய்க்கீர்த்திகளையும் காணலாம்.

இராஜராஜன் காலத்திலிருந்து மெய்க்கீர்த்திகளின் தொடக்கத்தைக் கொண்டே கல்வெட்டு யார் காலத்தைச் சார்ந்தது என்று கூறிவிடலாம். ஆதலின் மன்னர்களின் பெயரும் மெய்க்கீர்த்திகளும் கீழே கொடுக்கப்படுகின்றன.

சில மெய்க்கீர்த்திகள் இறுதியில் மன்னன் தனது பட்டத்தரசியோடு வீரசிம்மாசனத்தில் வீற்றிருந்ததையும் தெரிவிக்கின்றன. அவ்வாறு தெரிவிக்கையில் அம்மன்னனின் பட்டத்தரசி யார் என்பது தெளிவாகிறது. சில மெய்க்கீர்த்திகளில் மன்னனின் மைந்தர்கள் எங்கெங்கு அனுப்பப்பட்டு, எந்த வகையில் முடிசூட்டிக் கொண்டு ஆண்டார்கள் என்பதும் தெரியவருகிறது.

| மன்னன் : | மெய்க்கீர்த்தி தொடக்கம் : |
|---|---|
| முதலாம் ராஜராஜன் | "காந்தளூர் சாலை கலமறுத் தருளிய"<br>"திருமகள் போல" |
| முதலாம் ராஜேந்திரன் | "திருமன்னி வளர இருநில மடந்தையும்"<br>"பூர்வ தேசமும் கங்கையும் கடாரமும் கொண்ட" |
| முதலாம் ராஜாதிராஜன் | "திங்களேர் தரு தன் தொங்கல் வெண்குடைக் கீழ்"<br>"திங்களேர் பெறவளர்"<br>"திருக்கொடியொடு தியாகக்கொடி" |
| இரண்டாம் ராஜேந்திரன் | "திருமாது புவியெனும்"<br>"திருமகள் மருவிய செங்கோல்"<br>"இரட்டபாடி ஏழரை இலக்கம்" |
| வீரராஜேந்திரன் | "திருவளர் திரள்புயத் திருநில வலயந்"<br>"வீரமே துணையாக" |
| அதிராஜேந்திரன் | "திங்களேர் மலர்ந்து வெண்குடை மண்டிய" |
| முதலாம் குலோத்துங்கன் | "திருமன்னி விளங்கு"<br>"புகழ்மாது விளங்க"<br>"புகழ் சூழ்ந்த புணரி" |
| விக்கிரம சோழன் | "பூமேலரிவையும் பொற்செயப்பாவையும்"<br>"பூமாது புணர"<br>"பூமாலை மிடைந்து" |

| | |
|---|---|
| இரண்டாம் குலோத்துங்கன் | "பூமன்னு பதுமம்" |
| | "பூமருவிய புவியேழும்" |
| | "பூமேவி வளர்" |
| | "பூமேவு திருமகள்" |
| | "பூமன்னு பாவை" |
| | "பூமன்னு பூத்த" |
| இரண்டாம் ராஜராஜன் | "பூமருவிய பொழிலேழும்" |
| | "பூமருவிய திருமாதும்" |
| இரண்டாம் ராஜாதிராஜன் | "கடல் சூழ்ந்த பார்மாதரும்" |
| | "கடல் சூழ்ந்த பாரேழுங்" |
| மூன்றாம் குலோத்துங்கன் | "புயல் பெருக வளம் பெருக" |
| | "புயல் வாய்த்து" |
| | "மதுரையும் ஈழமும் கருவூரும் பாண்டியன் முடித்தலையும் கொண்ட" |
| மூன்றாம் ராஜராஜன் | "சீர்மன்னி இரு நான்கு திசை விளங்கு" |
| | "சீர்மன்னு மலர் மகளும்" |
| மூன்றாம் ராஜேந்திரன் | "பூமியும் திருவும்" |
| | "பூமருவிய திருமடந்தை" |

முதல் இராஜேந்திரன் காலத்திலிருந்து கல்வெட்டுகள் மற்றுமொரு புதிய அமைதியைப் பெறுகின்றன. 'திரிபுவனச் சக்கிரவர்த்தி' என்றும் 'கோனேரின்மை கொண்டான்' என்றும் கல்வெட்டின் தொடக்கத்தில் காணலாம்.

## ஆண்டு

சோழ மன்னர்களுடைய கல்வெட்டுகளில் பெரும்பாலும் அரசனின் ஆட்சி ஆண்டே குறிக்கப்பெற்றிருக்கும். ஆனால் வேறு சில ஆண்டு முறைகளும் குறிக்கப்பட்டுள்ளன. உத்தம சோழனின் 13-ஆம் ஆட்சி ஆண்டில் பொறிக்கப்பட்ட ஒரு கல்வெட்டு கலி ஆண்டு 4083ஐக் குறிக்கிறது. இக்கல்வெட்டு கி.பி. 981 ஆண்டைச் சார்ந்ததாகும். சக வருடம், முதலாம் குலோத்துங்கனுடைய கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ளது. ஆளும் மன்னன் இறந்த பிறகு அரியணையேறியவர் அந்நாளில் இருந்து ஆட்சி ஆண்டைக் கணிப்பது பொது வழக்கம். ஆனால் சோழ மன்னர்கள் தங்களுக்குப் பின் ஆட்சிப் பொறுப்பை ஏற்பவருக்கு தங்கள் வாழ் நாளிலேயே முடிசூட்டிவிடுவது வழக்கம். ஆதலின் இரு மன்னர்கள் ஒரே சமயத்தில் ஆள்வதும் ஆட்சி ஆண்டைக் குறிப்பதும் சோழர் கல்வெட்டுகளில் காணலாம். முதலாம் இராஜேந்திரன் கி.பி. 1012-லிருந்து 1044 வரை ஆண்டான். அவன் மகன், முதல் இராஜாதிராஜன் 1018-லேயே முடிசூட்டப் பெற்றான். ஆகவே அவன் 1018லிருந்தே தன் ஆண்டைக் கணிக்கின்றான். ஆண்டுகள் எண்ணாலோ, எழுத்தாலோ குறிக்கப்பட்டிருக்கின்றன.

மேற்குறித்த காரணத்தால் மன்னனின் கடைசி ஆட்சி ஆண்டைக் கொண்டு அவ்வாண்டில் அவன் இறந்திருக்க வேண்டுமென்றும் அறிய முடிகிறது. ஆனால் அரியணை ஏறியது பிற சான்றுகளைக் கொண்டுதான் அறியமுடியும். சில கல்வெட்டுகளில் சூரிய கிரஹணம், நாள், நட்சத்திரம் முதலியவை கொடுக்கப்பட்டிருக்கும். இதைக் கொண்டு, அக்கல்வெட்டில் வரும் ஆட்சி ஆண்டைக் கொண்டும் மன்னன் எப்பொழுது அரியணை ஏறியிருக்கக்கூடும் என்று கணிக்க முடியும். ஆதித்தன் ஆட்சிக்கு வந்த காலத்தைக் குறிக்க தக்கோலத்தில் உள்ள கல்வெட்டு ஒன்றில் குறிக்கப்பெறும் சூரியகிரஹணம் உதவி செய்கிறது. மூன்றாம் இராஜராஜனுடைய கல்வெட்டுகளில் போசள மன்னர்களின் தொடர்பால் பிரபவாதி வருடம் குறிக்கப்படுகிறது.

## நாட்டுப் பிரிவு

சோழர்களுடைய கல்வெட்டுகள் ஓர் ஊரைக் குறிப்பிடும் போது எந்த மண்டலத்து எந்த கூற்றத்தைச் சார்ந்திருந்தது என்று தெளிவாகக் குறிக்கின்றன. மண்டலம், கூற்றம், வளநாடு, நாடு, ஊர் என்று நாட்டுப் பிரிவுகள் வகுக்கப்பட்டு இருந்தன. தொண்டை மண்டலத்தில் கோட்டம் என்றும், சோழ மண்டலத்திலும் பிற பகுதிகளிலும் கூற்றம் என்றும் குறிக்கப்படுகிறது. இராஜராஜன் ஆட்சிக்கு வந்த பிறகு நாட்டை முழுவதும் அளந்து வகை செய்தான். அப்பொழுது அவனுடைய பெயர்கள் நாட்டுப் பிரிவுகளுக்குக் கொடுக்கப்பட்டன.

உதாரணம்

> "சோழமண்டலத்தும் பாண்டிநாடான ராஜராஜ மண்டலத்தும் தொண்டைநாடான ஜயங்கொண்ட சோழமண்டலத்தும்"

> "இராஜேந்திர சோழமண்டலத்துத் திருவேங்கடக் கோட்டத்துக் குடவூர் நாட்டுத் திருச்சுகநூர்"

> "இராஜராஜ வளநாட்டுப் பொயிற் கூற்றத்துக் கொற்ற மங்கலத்து"

> "ராஜராஜ வளநாட்டுக் கீழ்வேங்கை நாட்டு ஜயங்கொண்ட சோழநல்லூர்

இம்முறை பின்னர் வந்தவர்களாலும் கையாளப்பட்டு வந்தது.

## கொடை

இதற்கு அடுத்து கொடுக்கப்பட்ட கொடையினைக் கல்வெட்டுகள் குறிக்கின்றன. நிலம், சாவாமூவாப்பேராடு, பொருள், பொன் ஆகியவை கொடையாக அளிக்கப்பட்டன. இவைகள் நுந்தாவிளக்கு எரிக்கவும், பூசைக்காக மலர்மாலை வழங்குவதற்கும், திருப்பதியம் ஓதுவதற்கும், இசைக்கருவிகள் இசைப்பதற்கும், நாட்டியத்திற்கும், திருவிழா எடுக்கவும், திருப்பணி செய்வதற்கும் அளிக்கப்பட்டன. இக்கொடைகள் அரசனாலும், அரசமாதேவியர்களாலும், அதிகாரிகளாலும், தனிப்பட்டவர்களாலும் அளிக்கப்பட்டன.

தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டுகள் முதலாம் ராஜராஜனால் கொடுக்கப்பட்ட கொடையினைக் குறிக்கின்றன. பண்டாரத்துப் பொன் கொடு செய்த முத்து வளையல், பொன்கொடு செய்த ஸ்ரீமுடி ஒன்று, பொன்கொடு செய்த திருமாலை, பொன்கொடு செய்த ஸ்ரீசந்தம் , திருப்பட்டிகை போன்றவை அளிக்கப்பட்டன. அடுத்து இவன் கொடுத்த திருவாபரணங்களைக் கல்வெட்டுகள் குறிக்கின்றன.

## கல்வெட்டு

> "உடையார் ஸ்ரீ ராஜராஜீச்வரம் உடையார்க்குச் செய்த வீர பட்டம் ஒன்று தண்டவாணிக்குக் கால் மாற்றுத் தண்ணிய பொன் முன்னூற்று நாற்பத்து முக்கழஞ். . . தடவிக் கட்டின பளிங்கு. . . . கழஞ்சே மஞ்சாடியும் பொத்தி முன்றினால் நிறை மஞ்சாடியும் பளிக்கு வயிரம் பத்தினால். . .திருப் பட்டிகை முதலியனவும்"

> "கண்டநாண் ஒன்றிற் கட்டின மாணிக்கம் பதினைஞ்சும், மரகதம் பதினாறும், வயிரம் இருபத்தெட்டும் தைய்த்த முத்து ஒப்புமுத்துங் குறுமுத்தும் பாட்டமும் ஆக முத்து நாற்பதும் உட்பட நிறை நூற்று எழுபதின் கழஞ்சேய் எழு மஞ்சாடிக்கு விலை காசு ஐஞ்ஞூறு"

இது தவிர நவரத்தின மோதிரம், பிருஷ்ட கண்டிகை, வலத்திருவடிநிலை, இடத்திருவடிநிலை ஆகியவற்றிற்கு பொன் போர்த்துக் கட்டின மாணிக்கமும், திருப்பொற் பூ, கும்பத் தகடு, திருநயநம், மாம்படியாகச் செய்த தகடு, திருக்கைய்க் காரை ஒன்று ஆகியவை கொடுக்கப்பட்டதைக் குறிக்கிறது. திருப்பதிகம் விண்ணப்பம் செய்யவும், தளிச்சேரிப் பெண்டுகள் நியமிக்கப்படுவதற்கும் கொடுத்த கொடைகள் குறிக்கப்படுகின்றன. இதோடு ஊர்களும் கொடையாக அளிக்கப்பட்டன. கோயிலுக்குத் திருவிளக்கு எரிப்பதற்குக் குடுத்த கொடையும், ராஜராஜன் கொடுப்பித்த செப்புத் திருமேனிகளும் கல்வெட்டுகளில் குறிக்கப்படுகின்றன.

## அளவை முறைகள்

பல்வகையான அளவை முறைகள் கல்வெட்டுகளில் குறிக்கப்படுகின்றன. வேலி, மா, குழி, குறுக்கம், செய்தடி போன்ற நில அளவைகளும்: பொதி, கலம், மரக்கால், நாழி, குறுணி, உழக்கு போன்ற

முகத்தல் அளவும், பலம், வராகனெடை, கழஞ்சு, குன்றி போன்ற பொன் நிறுவை அளவையும்: பாகம், முழம், சாண். விரல் போன்ற நீட்டல் அளவையும் குறிக்கப்பட்டுள்ளன. உதாரணமாக முதலாம் ராஜராஜனின் தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டு, இறையிலி நீக்கப்பட்ட நிலத்தின் அளவை முறையினைக் கீழ்க் கண்டவாறு குறிக்கிறது.

## கல்வெட்டு

"அளந்தபடி நிலம் பதினைஞ்சரையே காணி அரைக் காணி முந்திரிகைக் கீழ் அரையே மும்மாவரை முந்திரிகைக் கீழ் அரையே இரண்டு மாவிலும்"

"ஊரிருக்கையும் இவ்வூர்க் களமும் கம்மாளசேரியும் இவ்வூர்ப் பறைச் சேரியும் இவ்வூர் அகையாறும் ஆக இறையிலி நீங்குந் நிலம் முக்காலே நான்கு மா நீக்கி"

என்று மிகவும் நுண்ணிய அளவை முறைகளும் குறிக்கப்பட்டுள்ளன.

## அதிகாரிகள்

சோழர் காலத் தமிழ்க் கல்வெட்டுகள் அரசு அலுவல்களை கவனித்த அதிகாரிகளைப் பற்றி விரிவாகத் தெரிவிக்கின்றன. அதிகாரிகள் கருமிகள் என்றும், மற்றவர்கள் பணி மக்கள் என்றும் அழைக்கப்பட்டனர். அரசனின் ஆணையாகிய திருமுகத்தை எடுத்துச் செல்லும் அதிகாரிக்கு ஆணத்தி என்று பெயர். அரச ஆணை 'ஓலை நாயகம்' என்ற அதிகாரியால் சரிபார்க்கப்பட்டு, பிறகு கருமி என்பவரால் பதிவேட்டில் பதிவு செய்யப்படுகிறது. இதற்கு 'வரியிலிட்டுக் கொள்வது' என்று பெயர். அறவோலை செய்யப்படும்பொழுது 'புரவு வரி திணைக்களம்' 'பட்டோலை 'கீழ்முக வெட்டி' 'புரவு வரி திணைக்களத்துக் கண்காணி' ஆகியவர்களால் பார்வையிடப்படுகிறது. 'புரவுவரி', 'புரவுவரி திணைக்கள நாயகம்' போன்ற அதிகாரிகளின் பெயர்களும் காணப்படுகின்றன. இதைத் தவிர அரசனின் உயர்மட்ட அதிகாரிகளுக்கு 'உடன் கூட்டம்' என்ற பெயர் கல்வெட்டுகளில் குறிக்கப்படுகின்றன.

கோயில்களுக்கு அளிக்கப்படும் பரிசுகளைப் பெற்று மேற்பார்வையிட இசைந்து கையொப்பமிட்ட கோயில் தானத்தாருடைய பெயர்கள் கல்வெட்டுகளில் காணப்படுகின்றன. ஆதலால் அக்கோயிலிலிருந்த தானத்தார் யாவர் என்றும், எவ்வளவு பேர்கள் என்றும்

அதிலிருந்து அறியலாம். இது தவிர, அக்கோயில்களில் பணிபுரிந்த பிற பணியாளர்களுடைய பெயர்களும் வழிபாட்டை நடத்தி வந்த மாகேசுவரர் ஸ்ரீவைஷ்ணவர்களுடைய பெயர்களும் குறிக்கப்படுகின்றன. இது அக்கோயிலின் வரலாற்றை எழுத மிகவும் உதவிபுரிகின்றன.

### ஊர்ச்சபை

ஊர்ச்சபையார் பல வாரியங்களாகப் பிரிந்து ஊர் ஆட்சியை நடத்தி வந்தனர். சோழர் காலத்தில் இம்முறை மிகவும் ஒப்பற்ற நிலையில் இயங்கி வந்தது. ஊர்ச்சபைக்கு எவ்வளவு பேர் தேர்ந்தெடுக்கப்பட்டனர் என்பதையும் அவர்களுடைய வயது, கல்வி, சொத்து, முதலியவற்றின் தகுதிகள் என்ன என்பதைப் பற்றியும், தேர்ந்தெடுக்கக் கூடாதவர்கள் யாவர் என்பதையும், தேர்ந்தெடுக்கும் முறை யாது என்பதும் கல்வெட்டுகளில் குறிக்கப்படுகின்றன. தோட்ட வாரியம், பொன் வாரியம், ஏரி வாரியம், கழநி வாரியம், ஸம்வத்ஸர வாரியம் போன்ற பல வாரியங்களாகப் பிரிந்து செயல்படும் முறையாது போன்ற செய்திகளை மிகத் தெளிவாகவும் விரிவாகவும், சிறப்பாகவும், சோழர் காலக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. பராந்தகச் சோழன் காலத்திய உத்திரமேரூர் கல்வெட்டு இம்முறையைக் குடஓலை முறை என்று சிறப்பாகக் குறித்து உலகப்புகழ் பெற்று விளங்குகிறது.

ஊர்ச்சபை கோயிலுக்கு நிலத்தை விற்ற போதும், கோயிலிலிருந்து நிலத்தை வாங்கிய போதும் அல்லது தனி நபருக்கு விற்ற போதும் விலைப்பிரமாணமும் செய்து கல்லில் வெட்டி வைத்துள்ளனர். இக்கல்வெட்டுகளின் இறுதியில் இது என் எழுத்து என பலருடைய கை ஒப்பந்தம் குறிக்கப்படும். இவையே ஊர்ச்சபை அங்கத்தினர்களின் பெயராகும்.

உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கும் முறையினைக் கீழ்க் கண்டவாறு கல்வெட்டுக் குறிக்கிறது.

### கல்வெட்டு

> "சாலவும் விருத்தரும் பாலரும் அல்லாதார் இறைக்குடிகளில் பொன்காண வல்லவர் எனப்படுவாரை நோக்கி மாட வீதியார் கூடிக் குடவோலை எழுதிப்புக விட்டு தங்கள் சேரியில் நால்வரைக் குடவோலையில் போந்தாரைக் கொள்வதாகவும் இப்பரிசே சங்கரப்பாடியில் மூவரைக் கொள்வதாகவும்"

**கல்வி**

கல்விமுறையைப் பற்றிய விபரங்களும் சோழர்காலக் கல்வெட்டுகளில் காணப்படுகின்றன. கல்வி போதித்தல் கோயில்களிலே நடைபெற்றிருக்கிறது. கல்வெட்டு 'திருச்சுற்றாலைக் கல்லூரி' என்று குறிக்கிறது. தென் ஆற்காடு மாவட்டம் எண்ணாயிரம் என்ற ஊரில் கிடைத்துள்ள, முதலாம் ராஜேந்திரனின் கல்வெட்டு அக்காலத்தில் நடைபெற்ற கல்வி முறையினைக் குறிக்கிறது. மாணவர்களுக்கு உணவு அளிக்கப் பெற்றதையும், பாடம் புகட்டும் ஆசிரியப் பெரு மக்களுக்கு அளிக்கப் பெற்ற பலவகையான வசதிகளையும் கல்வெட்டு குறிக்கிறது.

சோழர் காலக் கல்வெட்டுகள் நீதி முறையைப் பற்றியும், அக்கால அரசிறை, பிற வரிகளைப் பற்றியும் குறிக்கின்றன. நிலவரி நிலத்தில் விளையும் நெல்லாகவும், பொன் அல்லது காசுமாக வசூலிக்கப்பட்டது. அக்காலத்தில் நாட்டில் நடைபெற்ற எல்லா வகையான தொழில்களுக்கும் வரி விதிக்கப்பட்டு வசூலிக்கப்பட்டது.

சோழர் காலக் கல்வெட்டுகள் சோழ மன்னர்களை மட்டும் அல்லாமல் அந்த சமயத்தில் ஆட்சி செய்த குறு நில மன்னர்களாகிய பாணர், கங்கர், பழுவேட்டரையர், இருக்குவேளிர், மழவரையர், சேதிராயர், சம்புவராயர், அதிராயர், போன்றவர்களின் பெயர்களும் குறிக்கப்படுகின்றன.

சோழர் காலத் தமிழ்க் கல்வெட்டுகள் அழகாகவும் பொலிவுடனும் சிறந்து விளங்குகின்றன. பிழைகள் மிகுதியாகக் காணப்படாமல் நல்ல தமிழிலும் பாடல் அமைப்பிலும் கல்வெட்டுகள் காணப்படுகின்றன. கல்வெட்டு வளர்ச்சியில் சோழர் காலம் உயர்ந்த நிலையைப் பெற்று விளங்கியது.

முதலாம் இராசராசனின் இருபத்தேழாம் ஆட்சியாண்டைச் சார்ந்த கல்வெட்டு கவிதை நடையில் மிக அழகாகப் பொறிக்கப்பட்டுள்ளது.

**கல்வெட்டு**

"..... முத்தமிழ் நான்மைத்
தெய்வக் கவிதைச் செஞ்சொற் கபிலன்
மூரிவண் டடக்கைப் பாரி தனடைக்கலப்
பெண்ணை மலையற் குதவிப் பெண்ணை
யலைபுன லழுவத் தந்தரிக்ஷஞ் செல
மினல் புகும் விசும்பின் வீடுபே றெண்ணிக்
கனல் புகுங் கபிலக்கல்லது புனல்வளர்"

வட ஆற்காடு மாவட்டம் செங்கம் சிவன் கோயிலில் தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறையினரால் படியெடுக்கப்பட்ட சோழர் காலக் கல்வெட்டு ஒன்று 'பா' வடிவில் அமைந்துள்ளது.

**கல்வெட்டு**

"எங்கள் பாரெங்கட் கிடவேணு மென்றரசர்
செங்கைவாள் வல்லானைச் சேவிப்பர்-தங்கள்
கொடியொடுங் கொற்றக் குடையொடும் செம்பொந்
முடியொடு நின்றுணங்கி
முவண்டறை தார்மன்னர் மலைபடைத் தெந் மன்
[னரை
வென்கண்ட திறற் காங்கேமன் கண்சிவப்பபண்டே
மலைகடாம் பாட்டுண்ட மாலவரை செஞ்சொரி
அலைகடாம் பாட்டுண்டது."

தென்னார்க்காடு மாவட்டம் சிதம்பரம் நடராஜ கோயிலில் காணப்படும் ஒரு கல்வெட்டு நரலோக வீரன் என்னும் சோழ சேனாபதி செய்த திருப்பணியின் புகழை விரித்துக் கூறுகிறது. இக்கல்வெட்டு வெண்பா அமைப்பில் பொறிக்கப்பட்டுள்ளது.

**கல்வெட்டு**

"தில்லையில் பொன்னம்பலத்தைச் செம்பொநால்
[மேந்து வா
நெல்லையைப் பொந்நாக்கி நாநெஎன்பரால்-ஒல்லை
வடவேந்தர் செல்வமெலாம் வாங்க வேல் வாங்கும்
குடைவேந்தர் தொண்டையார் கொல்.

"தென்வேந்தர் கூநிமிந்த செந்தமிழர் தென் கோயில்
பொன்மேந்து திக்கைப் புகழ் வேந்தானோற்கும்
குற்றம் பல கண்டோன் கோலிழைக்கு வேல் கூத்தன்
சிற்றம்பலத்திலே செந்று"

◇✻◇

# தமிழ்க் கல்வெட்டுகள்-3

நடன. காசிநாதன

## பிற்காலப் பாண்டியர், பிறர் காலம்

தமிழகத்தில் கி.பி. 1000-ல் வலிமையற்றுப் போன பாண்டியர்களின் ஆட்சி திரும்பவும் கி.பி. 12-ஆம் நூற்றாண்டின் இறுதியில் தலைதூக்கத் தொடங்கியது. இப்பாண்டியர்களை வரலாற்றாசிரியர்கள் பிற்காலப் பாண்டியர்கள் என்று கூறுகின்றனர். இவர்கள் கி.பி.14-ஆம் நூற்றாண்டின் முற்பகுதி வரையில் தமிழகத்தில் ஆட்சி செய்துள்ளார்கள். இவர்களுக்குப் பின்னும் 17-ஆம் நூற்றாண்டு வரை ஆட்சி செய்துள்ள ஒரு கிளைப் பாண்டிய மன்னர்கள் கொற்கை, தென் காசி, கரிவலம்வந்தநல்லூர் ஆகிய ஊர்களைத் தலைநகர்களாகக் கொண்டிருந்தார்கள்.

## மெய்க்கீர்த்திகள்

இப்பாண்டிய மன்னர்களுக்கு "மாறவர்மன்" "சடையவர்மன்" என்ற அடை மொழிகள் தவறாது காணப்படுகின்றன. சோழ மன்னர்களைப் போன்றே இவர்களும் மெய்க்கீர்த்திப் பகுதியைத் தங்கள் கல்வெட்டுகளில் இணைத்துள்ளார்கள். அந்த மெய்க்கீர்த்திகளைக் கொண்டே ஒரு கல்வெட்டு எந்த மன்னனைச் சார்ந்தது என்பதை எளிதில் கண்டு கொள்ளலாம். சில பாண்டிய மன்னர்களின் பெயர்களும் அவர்களது மெய்க்கீர்த்திகளும் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

## ஆண்டு

இப்பாண்டிய மன்னர்கள் ஒருவருக்கொருவர் எவ்வகையில் உறவினர் என்பதை விளக்கக் கூடிய கல்வெட்டுகளோ செப்பேடுகளோ இதுவரையில் கிடைத்தில. எந்த ஆண்டில் எந்த பாண்டியன் அரசு ஆளத் தொடங்கினான் என்பதையும் உறுதியாகக் கல்வெட்டுகளிலிருந்து தெரிந்து கொள்ள முடியவில்லை. இவர்களுடைய கல்வெட்டுகள் கலி ஆண்டையோ, சக ஆண்டையோ குறிக்கவில்லை. கல்வெட்டுகளில் மன்னன் ஆட்சி

| மன்னன் : | மெய்க்கீர்த்தியின் தொடக்கம் : |
| --- | --- |
| முதலாம் சடையவர்மன் குலசேகரபாண்டியன் | "பூவின் கிழத்தி" |
| முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் | "பூமருவிய திருமடந்தையும் புவிமடந்தையும் புயத்திருப்ப" "சோணாடு கொண்டருளிய சுந்தரபாண்டிய தேவர்" "சோணாடு வழங்கியருளிய சுந்தரபாண்டிய தேவர்" |
| இரண்டாம் சடையவர்மன் குலசேகரபாண்டியன் | "பூதல வனிதை" |
| இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் | "பூமலர்த் திருவும் பொருசய மடந்தையும்" |
| முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் | "பூமலர் வளர் திகழ் திருமகள் புகழாகம் புணர்ந்திருப்ப" |
| சடையவர்மன் வீரபாண்டியன் | "திருமகள் வளர்" "கொங்கீழங் கொண்டு கொடுவடுகு கோடழித்து" |
| முதல் மாறவர்மன் குலசேகரபாண்டியன் | "தேர் போல்" "திருமகள் ஜயமகள்" |
| மாறவர்மன் விக்கிரமபாண்டியன் | "திருமலர் மாது" |

ஆண்டும் கோள் நிலையுமே குறிப்பிடப்பட்டுள்ளன. உதாரணமாக, “ஸ்ரீகோச்சடைய வன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீவிக்கிரமபாண்டிய தேவற்கு யாண்டு 4-ஆவது மிதுன நாயற்றுப் பூர்வ பட்சத்து நவமியும் வியாழக் கிழமையும் பெற்ற சோதி நாள்” என்று காணப்படும் இந்த ஆதாரங்களை மையமாக வைத்து வரலாற்றாசிரியர்கள் பாண்டிய வேந்தர்களின் காலத்தைக் கணித்துள்ளனர். ஒரு சில இடங்களில் கருத்து வேறுபாடுகளும் உண்டு.

கி.பி. 12-ஆம் நூற்றாண்டுக்கும் 14-ஆம் நூற்றாண்டுக்கும் இடைப்பட்ட காலத்தில் ஆண்ட மன்னர்களிலே மிகவும் புகழ் பெற்ற மன்னர்கள் முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனும் முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியனும் ஆவர். முதலாம் சடையவர்மனின் கல்வெட்டு தமிழ்நாட்டுத் தென் கோடி முதல் ஆந்திர மாநிலத்து நெல்லூர் மாவட்டம் வரை பரவி கிடைத்துள்ளன.

### அரியணை

இக்காலத்தில் பாண்டிய மன்னர்கள் தாங்கள் அமர்ந்து ஆட்சி செய்த அரியணைகளுக்குச் சில பெயரிட்டு அழைத்துள்ளார்கள் என்பதையும் கல்வெட்டுகள் புலப்படுத்துகின்றன. முதலாம் சடையவர்மன் குலசேகர பாண்டியன், தன் தலைநகராகிய மதுரையம்பதியிலிருந்த அரியணைகளை ‘மழவராயன்’, ‘காலிங்கராயன்’ என்ற பெயர்களால் வழங்கி வந்தனன் என்பதைக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.

இரண்டாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன் தன் அரியணைகளை ‘மழவராயன்’, ‘பல்லவராயன்’ என்ற பெயர்களிட்டு அழைத்தான் என்பதையும் உணர முடிகிறது.

### அரச விருதுப் பெயர்கள்

இக்காலத்துப் பாண்டியர்கள் தங்கள் பெயர்களோடு சில பட்டப் பெயர்களையும் பூண்டிருக்கின்றனர். முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன் சோழ மன்னன் மூன்றாம் இராசராசனைத் தோற்கடித்து, அவனது தலைநகரங்களான

“தஞ்சையும் உறந்தையும் செந்தழல் கொளுத்திக்
காவியு நீலமும் நின்று கவினிழப்ப

வாவியு மாறு மணிநீர் நலனழித்துக்
கூடமு மாமதிலுங் கோபுரமு மாடரங்கும்
மாடமு மாளிகையும் மண்டபமும் பலவிடித்துத்
தொழுது வந்தடையா நிருபர் தந் தோகையர்
அழுத கண்ணீராறு பரப்பிக்
கழுதை கொண்டுழுது கவடி வித்தி"ட்டான்

அவ்வாறு செய்தபின் சோழர்க்கு இரண்டாம் தலைநகராகிய பழையாறைக்குச் சென்று அங்கு ஆயிரத்தளி அரண்மனையில் சோழரது முடிசூட்டு விழா நிகழும் மண்டபத்தில் வீராபிடேகஞ் செய்து கொண்டான். பின்பு தில்லையம்பதிக்குச் சென்று ஆடல்வல்லானை வணங்கி அகமகிழ்ந்தான். தன் நாட்டிற்குத் திரும்பிச் செல்லுகையில் பொன்னமராவதியில் இருந்த தனது அரண்மனையில் சின்னாட்கள் தங்கி ஓய்வு பெற்றான் அந்நாட்களில் நாட்டையிழந்த இராசராசனை அழைப்பித்து, தனக்கு ஆண்டு தோறும் கப்பஞ் செலுத்திக்கொண்டு சோழ நாட்டை திரும்பவும் ஆட்சி புரிந்து வருமாறு ஆணையிட்டு அந்நாட்டை வழங்கினான். அதன் காரணமாகச் சுந்தரபாண்டியன் தன்னைச் 'சோணாடு கொண்டருளிய சுந்தரபாண்டிய தேவர்' என்றும்; 'சோணாடு வழங்கியருளிய சுந்தர பாண்டிய தேவர்', என்றும் அழைத்துக் கொண்டமை கல்வெட்டுகளின் மூலம் தெரிய வருகிறது. முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் தெற்கே குமரி முனையிலிருந்து வடக்கே நெல்லூர், கடப்பா மாவட்டங்கள் வரை தன் ஆட்சியைச் செலுத்தியதன் காரணமாக "எம்மண்டலமுங் கொண்டருளிய ஸ்ரீசுந்தரபாண்டிய தேவர்' என்றும்; 'மகாராசாதிராச ஸ்ரீபரமேசுவரன்' என்றும்; எல்லாந் தலையான பெருமாள்' என்றும் கல்வெட்டுகளினால் வழங்கப் பெறுகிறான். இவன் வேறு பலப் பட்டப்பெயர்களையும் சூட்டிக் கொண்டதாகக் கல்வெட்டுகள் காட்டுகின்றன. இம்மன்னன் தில்லையிலும், திருவரங்கத்திலுமுள்ள திருக்கோயில்களைப் பொன் வேய்ந்தமைப் பற்றி 'கோயில் பொன்வேய்ந்த பெருமாள்' என்று அழைக்கப் பெற்றான். சேரனை வென்ற காரணத்தினால் 'சேரனை வென்றான்' என்றும்; தெலுங்குச் சோழனாகிய கண்டகோபாலனைப் போரில் வென்று காஞ்சிமாநகரைக் கைப்பற்றியதால் 'காஞ்சீபுரவராதீசுவரன்' 'காஞ்சீபுரங் கொண்டான்' என்றும் பட்டங்கள் பெற்றனன்.

### பிறந்தநாள் சந்தி

பாண்டிய மன்னர்கள் தங்களது பிறந்தநாளின் நினைவாகக் கோயில்களில் சந்தி ஏற்படுத்தி வழிபாடு செய்து வந்திருக்கின்றனர். எந்த நட்சத்திரத்தில் தாங்கள் பிறந்தவர்கள் என்று குறிப்பிட்டுத் தங்களது பெயரால் சந்தி அமைத்துத் தங்களுக்கு நல்வாழ்வைத் தருமாறு வேண்டி கோயில்களுக்கு நிவந்தங்கள் அளித்துள்ளனர். அவைகளைக் குறிப்பிடும் கல்வெட்டுகளே பெரும்பாலும் காணப்படுகின்றன. அவைகளிலிருந்து ஒவ்வொரு மன்னனும் எந்த நட்சத்திரத்தில் பிறந்து உள்ளான் என்பதைக் கண்டுகொள்ள எளிதாகிறது.

### போசள மன்னர் தொடர்பு

இக்காலத்தில் போசள மன்னர்கள் பாண்டிய மன்னர்களோடு சில சமயங்களில் நல்லுறவு பூண்டும் சில சமயங்களில் பகைமை கொண்டும் இருந்து வந்தனர். முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் சோழ மன்னன் மூன்றாம் இராசராசனைத் தோற்கடித்த போது போசள மன்னன் இரண்டாம் வல்லாள தேவனும் அவன் மகன் வீர நரசிம்மனும் சோழ மன்னனுக்கு உதவிபுரிய வந்தனர். அதன் காரணமாகத்தான் பாண்டியன் திரும்பவும் சோழ மன்னனுக்கே அவனது நாட்டை அளித்தான் என்று ஒரு கருத்து நிலவுகிறது. இச்செய்தி உருத்திரப் பட்டர் இயற்றிய ‘சகநாத விசயம்’ என்ற கன்னட நூலாலும் அப்போசள அரசரின் கல்வெட்டுகளாலும் அறியப்படுகிறது. இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் சோழ மன்னன் மூன்றாம் இராசேந்திரனால் தோற்கடிக்கப்பட்ட போது போசள மன்னனாகிய வீரசோமேச்சுரன் மூன்றாம் இராசேந்திரனைத் தோற்கடித்துத் திரும்பவும் பாண்டிய மன்னனை முன்போல் தன்னாட்டை ஆளச் செய்தான். அதன் காரணமாகப் போசள மன்னன் தன்னைப் ‘பாண்டியகுல சம்ரட்சகன்’ எனவும் ‘இராசேந்திரனைப் போரில் வென்றவன்’ எனவும் தன் கல்வெட்டுகளில் கூறிக் கொள்கின்றான்.

முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் பெரும் படையுடன் சென்று போசளர்க்குரிய நகரமான, திருச்சிராப்பள்ளிக்கு அருகில் உள்ள கண்ணனூர்க் கொப்பத்தை முற்றுகையிட்டு அந்நகரைக் கைப்பற்றியதையும், வீரசோமேச்சுரன் மகன் வீரராமநாதன் இவ்வேந்தனுக்குத் திறையாகக் களிறுகளைத் தந்ததையும் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.

### கோப்பெருஞ்சிங்கனின் பணிவு

முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் அம் மன்னனால் தோற்கடிக்கப்பட்டு ஓடிய சோழ மன்னன் மூன்றாம் இராசராசனைச் சிறையிலடைத்த காடவ மன்னன் கோப்பெருஞ்சிங்கன், பிற்காலத்தில் முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியனால் தோற்கடிக்கப்பட்டான். காடவ மன்னனின் தலைநகராக விளங்கிய சேந்தமங்கலம் முற்றுகையிடப்பட்டுக் கைப்பற்றப்பட்டதோடு, யானை, குதிரை ஆகியவைகளும் பிறச்செல்வங்களும் கவரப்பட்டன. பிறகு அவற்றையெல்லாம் அக்காடவ மன்னனுக்கு அளித்து அவனைத் தன் ஆளுகைக்கு அடங்கி நடக்குமாறு செய்து கொண்டான்.

### காஞ்சிமாநகரின் வீழ்ச்சி

இப்பாண்டியர்கள் காலத்தில் தொண்டை மண்டலப்பகுதி தெலுங்குச் சோழர்கள் என்ற பிரிவினரால் ஆட்சி செய்யப் பெற்று வந்தது. அவர்களில் புகழ்பெற்ற மன்னனான விசயகண்ட கோபாலன் முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் இப்பகுதியை ஆண்டு வந்தான். முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் இச்சோழனைத் தோற்கடித்து, அவனது தலைநகராக விளங்கிய காஞ்சிமாநகரையும் கைப்பற்றினான் என்று பாண்டிய மன்னனது கல்வெட்டுகள் பறைசாற்றுகின்றன.

### அதிகாரிகளின் சிறப்புப் பட்டங்கள்

பாண்டிய வேந்தர்கள் தம் அரசியல் அதிகாரிகளுக்குப் பல சிறப்புப் பட்டங்கள் வழங்கி கௌரவித்திருக்கின்றனர். அதிகாரிகளுக்கு அரையன், பேரரையன், விசையரையன், தென்னவன் பிரமராயன், தென்னவன் தமிழவேள், காவிதி, ஏனாதி, பஞ்சவன் மாராயன், பாண்டிய மூவேந்த வேளான், செழியதரையன், பாண்டிய விழுப்பரையன், தென்னவதரையன், செழியதரையன், பாண்டியப் பல்லவதரையன், தொண்டைமான், பாண்டியக் கொங்கராயன், மாதவராயன், வத்தராயன், குருகுலராயன். காலிங்கராயன் போன்ற விருதுகள் அளிக்கப் பெற்றன. சிலசமயம், போரில் ஈடுபட்டு உயிர் நீத்த வீரர்களின் குடும்பங்களுக்கு ‘உதிரப்பட்டி’ என்ற பெயரால் இறையிலி நிலங்கள் பாண்டிய மன்னர்களால் வழங்கப்பட்டன என்பதும் கல்வெட்டுகளால் அறிய முடிகிறது.

### நாட்டுப் பிரிவு

இவர்கள் காலத்திலும் நாடு பல பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு, இறையை எளிதில் வசூலிக்கத் தக்க அளவுக்கு அமைக்கப்பட்டிருந்தன. பாண்டி மண்டலம் பல நாடுகளாகக் கொண்டிருந்தது. 'பாண்டி மண்டலத்து மதுரோதய வளநாட்டுத் தென்கல்லக நாட்டுப் பராக்கிரம பாண்டியபுரம்' என்று ஒரு பகுதியைக் கல்வெட்டில் காணலாம். சோழர் காலத்தில் புகுத்தப்பட்ட 'வளநாடு' பாண்டியர் காலத்தில் எந்த வகையிலும் பயன்படுத்தப்படவில்லை. ஊராட்சியும், அறநிலைய நிர்வாகமும் சிறப்பான முறையில் திகழ்ந்தன.

### காசுகள்

நாணயங்கள் பலவும் வெளியிடப்பெற்றிருக்கின்றன. பெரும்பாலும் எல்லாக் காசுகளும் பாண்டிய மன்னர்களின் சிறப்புப் பெயர்களாலே வெளியிடப்பட்டன. முதலாம் மாறவர்மன் தனது காசுகளை 'சோணாடு கொண்டான்' என்ற சிறப்புப் பெயரைப் பொறித்தும்; முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன், 'எல்லாந் தலையானான்' என்ற சிறப்புப் பெயரிலும் வெளியிட்டிருக்கிறார்கள்.



# தமிழ்க் கல்வெட்டுகள்-4

ச. ஹரிஹரன்

## விஜயநகர மன்னர்கள் காலம்

விஜயநகர மன்னர்கள் காலத்துக் கல்வெட்டுகள் தமிழ் நாட்டின் தெற்கே மதுரை மாவட்டம் வரை காணக் கிடைக்கின்றன. இவர்கள் காலத்துக் கல்வெட்டுகள் பெரும்பாலும் 'ஸ்ரீமன் மகாமண்டலேசுவர' என்று துவங்குகின்றன. இக்கல்வெட்டுகளில் பொறிக்கப்பட்டுள்ள எழுத்துகள் பெரியதாகவும் அழகு குன்றியும், பிழைகளுடன் எழுதப்பட்டன. கல்வெட்டுகளில் சமஸ்கிருதச் சொற்களை எழுத கிரந்த எழுத்துகள் பயன்படுத்தப்பட்டன.

பிற்காலச் சோழ மன்னர்கட்கும், பாண்டிய மன்னர்கட்கும் உள்ளது போன்ற மெய்க்கீர்த்திப் பகுதிகள் விஜயநகர மன்னர்கள் கல்வெட்டுகளில் காணப்படுவதில்லை. பெரும்பாலும் எல்லா விஜயநகர மன்னர்களது கல்வெட்டுகளின் துவக்கத்திலும் பின்வரும் பகுதியே மெய்க்கீர்த்திப் பகுதியாக அமைந்துள்ளது.

> "ஸ்வஸ்திஸ்ரீ ஸ்ரீமன் மகாமண்டலேசுவரன் அரியராய விபாடன் பாஷைக்குத் தப்புவராயரகண்டன் மூவராயரகண்டன் கண்ட நாடு கொண்டு கொண்டநாடு கொடாதான் பூர்வ பச்சிம தக்ஷிண உத்தர சதுஸ்ஸமுத்திராதிபதி கஜவேட்டை கண்டருளின தேவர் துலுக்கர் தளவிபாடன் ஸார்த்ராண ராஜ்யஸ்தாபனாசார்யன் . . . ."

இதன் கருத்து : பெரிய மண்டலத்துக்கு அரசனும், பகை அரசருக்குக் காலனும், கொடுத்த வாக்கு தவறுவோர்களைத் தண்டிப்பவனும், யானை, குதிரை, காலாள் ஆகிய மூவகைப் படைகளைத் தலைமை தாங்கு பவனும், தன்பார்வைபட்ட நாடுகளை வெற்றிகொண்டவனும், வெற்றி கொண்ட நாடுகளை இழக்காதவனும் கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு

ஆகிய நான்கு திசைகளிலும் கடலாதிக்கம் கொண்டவனும், முகம் மதியர்களுக்குப் பகைவனும், யானை வேட்டையில் திறமை மிகுந்தவனும்.

. . . .

மேலும், விஜயநகர மன்னர்கள் கல்வெட்டுகளில் சோழ, பாண்டிய மன்னர்கள் கல்வெட்டுகளில் உள்ளதுபோல் மன்னரின் ஆட்சியாண்டு குறிக்கப்படுவதில்லை. கல்வெட்டுகளில் சக ஆண்டும் அதற்கு இணையான தமிழ் ஆண்டின் பெயரும் குறிக்கப்பட்டிருக்கும், சில கல்வெட்டுகளில் கலியாண்டும் இடம்பெற்றிருக்கும். இது தவிர இக்கல்வெட்டுகள் மாதம், நாள், கிழமை, பக்ஷம், திதி, நக்ஷத்திரம், யோகம், போன்ற கோள் நிலைக் குறிப்புகளும் கொண்டிருக்கும். பின்வரும் ஹரிஹரராயரின் கல்வெட்டு ஓர் எடுத்துக்காட்டு :

> "*ஸ்வஸ்திஶ்ரீ* ஶ்ரீமன் மகாமண்டலேசுவரன் ஶ்ரீவீரஹரி ஹரராயருக்கு செல்லாநின்ற சகாப்தம் ௲௩௱௨௰௯ருக்கு மேல் செல்லாநின்ற சித்திரபானு ஸம்வச்சரத்து கும்பநாயற்றில் அபரபட்சத்தில் ஸப்தமியும் புதன்கிழமையும் பெற்ற அனுஷத்து நாள் . . . .

விஷுபாக்ஷ உடையாரின் பழையகோட்டைச் செப்பேட்டில் கலியாண்டு குறிக்கப்படுகிறது.

விஜயநகர மன்னர்கள் காலத்துக் கல்வெட்டுகள் பெரும்பாலும் அரசன் அல்லது குடிமக்களால் கோயிலுக்குக் கொடையாக நிலம், பொன், நந்தாவிளக்கு போன்றவை அளிக்கப்பட்டதைக் குறிப்பதாகவே உள்ளன. அரசனின் போர் வெற்றிகளைக் குறிக்கும் கல்வெட்டுகள் மிகக்குறைவு. இருப்பினும் விஜயநகர மன்னர் கிருஷ்ணதேவமகாராயரின் கல்வெட்டு ஒன்று தெலுங்கு தேசத்தில் அவர் பெற்ற வெற்றிகளைக் குறிக்கிறது. திருச்சி மாவட்டத்தில் திருஈங்கோய் மலைமீதுள்ள மரகதாசலேசுவரர் கோயிலில் இக்கல்வெட்டு உள்ளது. சக ஆண்டு 1439 (கி.பி. 1517) -இல் பொறிக்கப்பட்ட இக்கல்வெட்டு , கிருஷ்ணவேணி ஆற்றங்கரையில் மகரசங்கராந்தி நாளன்று மன்னர் முகாமிட்டிருந்த போது சோழமண்டலத்தில் உள்ள சிவன், திருமால் கோயில்களுக்குப் பத்தாயிரம் வராகன் பொன் அளித்ததைக் குறிக்கிறது. இக்கல்வெட்டில் கிருஷ்ணதேவ மகாராயரின் வெற்றிச் செய்திகளும் குறிக்கப்படுகின்றன.

### கல்வெட்டு

ஸ்வஸ்திஸ்ரீ நமஸ்துங்க சிரச்சும்பி
சந்த்ர சாமரசாரவே!
த்ரைலோக்ய நகராரம்ப
மூலஸ்தம்பாய சம்பவே!!

ஸ்வஸ்திஸ்ரீ விசயாப்யுதய சாலிவாகன சகாப்தம் ஆசாஙகூ இதின்மேல் செல்லா நின்ற ஈசுவர (பிலவங்க) சம்வத்ஸரம் (புஷ்ய மாசத்துப் பௌர்ணமி நாள்) ஸ்ரீமன் மஹாமண்டலேசுவர, அரியராயரவிபாடன். பாஷைக்குத் தப்புவராயரகண்டன், கண்டநாடு கொண்டு, கொண்டநாடு கொடாதான், பூர்வ தக்ஷிண பச்சிம உத்தர சதுச்சமுத்திராதிபதி, ஸ்ரீவீரப்பிரதாப ஸ்ரீவீரகிருஷ்ணதேவ மகாராயர், சோழ மண்டலத்து விஷ்ணுஸ்தானம், சிவஸ்தானம் முதலான தேவஸ்தானங்களுக்கு சோடி, சூலவரி, புறவரி, அரசு பேறு மற்றும் உண்டானது எல்லாம் சர்வமானியமாக திருவுளம் பற்றின தர்மசாசன ராயசம். நாம் விசயநகரத்திலிருந்து புறப்பட்டு, பூர்வதிக்கு விசையார்த்தம் எழுந்தருளி உதயகிரி துர்க்கமும் யிரிசிக் கொண்டு, திருமலை ராகுத்தராயனையும் பிடித்துக் கொண்டு வினிகொண்டை, வெல்லம் கொண்டை, நாகார்ச்சுன கொண்டை, கொண்டை வீடு, கொண்டை பள்ளி, ராசமகேந்திரவரம் முதலான துர்க்கங்களும் இரிசிக் கொண்டு பிரதாபருத்திர கசபதி குமாரன் வீரபத்திரனையும், பிரதாபருத்திர கசபதி பிரகலாதன், சிரச்சந்திரன், மல்லூகான், உத்தண்டகான் முதலான பாத்திர சாமந்தரையும் சீவக்கிராகமாகப் பிடித்துக்கொண்டு பிரதாபருத்திர கசபதியையும் முறியவெட்டி சிங்காத்திரிக்கு எழுந்தருளி பொட்டுநூரில் ஜயஸ்தம்பம் நிறுத்தி, சோள மண்டலத்தில் தேவஸ்தானம் திருச்சிராப்பள்ளி, திருஈங்கோய்மலை, சந்தலைகை, திருக்காட்டுப்பள்ளி, திருமழவாடி, வல்லம், தஞ்சாவூர், திருநல்லூர், திருவாரூர், திருநகரி, திருவையாறு, திருவெழுந்தூர், இராசுராமப்பாளையம், திருவாஞ்சியம், திருப்புகலூர், திருப்பனந்தாள், திருநாங்கூர், தாடாலங்கோயில், சீர்காழி, அரிகண்டபுரம் உள்பட இரண்டாற்றுப் பற்றுச்சீர்மை, புவனேகவீரன் பட்டணச்சீர்மை, வீர மடக்குச் சீர்மை, வழுதலம்பட்டுச் சீர்மை, வழுவத்தூர்ச் சீர்மை, பெரம்பூர்ச் சீர்மை, குழித்தண்டனைச் சீர்மை உட்பட்ட விஷ்ணுஸ்தானம், சிவஸ்தானம் தேவஸ்தானங்களில் பூர்வம் முதலாக அரை மனைக்கு இறுத்து வருகிற சோடி, சூலவரி ஆயம் ஸ்தலயாதிக்கம் பதினாயிரம் பொன்னிலே [அந்தந்த

தேவஸ்தானங்களுக்கு மகரசங்கராந்தி புண்ணிய காலத்திலே கிருஷ்ணவேணி தீரத்திலே] உண்ட வல்லி அநந்தசாயி சந்நிதியிலும் விசயவாடை மல்லிகார்ச்சுன தேவர் சந்நிதியிலுமாக தாரா பூர்வமாகச் சர்வமானியமாக விட்டு, [தர்மசாசன ராயசமும் பாவித்தோம். இந்த ராயசப் பிரமாணத்திலே எல்லா தேவஸ்தானங்களிலும்] சிலாசாசனம் எழுதிவிச்சு பூஜை புனஸ்காரமும் அங்கரங்க வைபோகமும் திருப்பணிகளும் சாங்கோபாங்கமாக ஆசந்திராதித்த ஸ்தாயியாக நடத்திக் கொண்டு சுகத்திலே இருக்கவும். இந்த தர்மத்துக்கு அகிதம் நினைத்தவன் தங்கள் தங்கள் மாதாபிதாவையும் கோபிராமணரையும் வாராணாசியிலே கொன்ற பாவத்திலே போகக்கடவராகவும்.

ஸ்வதத்தாத்விகுணம் புண்யம்
பரதத்தானு பாலனம்!
பரதத்தாபஹாரேண
ஸ்வதத்தம் நிஷ்பலம் பவேது!!

விஜயநகரக் காலத்துக் கல்வெட்டுகளில் தளவாய், நாயக்கர், சதாசேர்வை போன்ற அதிகாரிகள் குறிக்கப்பெறுகின்றன. நாட்டுப் பிரிவுகள் சீர்மை, பற்று, ராட்டிரம் என்ற பெயர்களால் குறிக்கப்படுகின்றன. மேற்குறிப்பிட்ட கல்வெட்டில் சீர்மை என அழைக்கப்பட்டவை யாவும் பிற்காலத்தில் சீமை என்று அழைக்கப்பட்டன. இக்காலத்துக் கல்வெட்டுகளில் நாட்டுப் பிரிவுகள் மண்டலம், ராஜ்யம், தேசம், பற்று, கோட்டம் என்று வரிசையாகக் குறிக்கப்படுகின்றன.

பின்வரும் மூன்று சமஸ்கிருதச் செய்யுட்கள் பெரும் பாலும் விஜயநகர மன்னர்களின் கல்வெட்டுகள், செப்பேடுகள் ஆகியவற்றின் ஆரம்பத்தில் கடவுள் வணக்கமாகக் காணப்படுகின்றன.

நமஸ்துங்க சிரச்சும்பி
சந்த்ர சாமர சாரவே !
த்ரைலோக்ய நகராரம்ப
மூலஸ்தம்பாய சம்பவே!!

**கருத்து**

சாமரம் போன்ற சந்திரனைத் தலையிலே அழகாகத் தரித்திருப்பவரும், மூவுலகங்களிலும் உள்ள நகரம், கிராமம் முதலியவற்றின் தோற்றத்திற்கு ஆதாரமான தூணாக இருப்பவரும் ஆன சம்பு என்னும் ஈசுவரனை வணங்குகிறேன்.

ஹரேர் லீலாவராஹஸ்ய
தம்ஷ்ட்ராதண்டஸ்ஸபாதுவ:!
ஹேமாத்ரி கலசா யத்ர
தாத்ரீசத்ரஸ்ரீயம்ததெள !!

**கருத்து**

வராக அவதாரம் எடுத்து விளையாட்டாகப் பூமியைத் தூக்கித் தன் தந்தத்தால் தாங்கி நின்றபோது அந்த தந்தமே பிடியாகவும், பூமியே பொற்கலசமாகவும் அடைந்து குடை பிடித்தாற்போல் விளங்கிய திருமால் காப்பாற்றட்டும்.

கல்யாணாயாஸ்து தத்தாம
ப்ரத்யூஹதிமிராபஹம் !
யத்கஜோப்யகஜோத்பூதம்
ஹரிணாபி ச பூஜ்யதே !!

**கருத்து**

யானை உருவம் பெற்றிருப்பினும் யானையினின்றும் பிறக்காதவரும், [அகஜார் என்னும் பார்வதியினிடம் பிறந்தவரும்] யானைக்கு விரோதியான சிங்கமே வணங்கும் படியானவரும் [விஷ்ணுவினாலும் பூஜிக்கப்படுபவரும்] ஆன கணபதி எல்லா தடைகளையும் போக்கி நன்மை பயப்பாராக.

இந்தச் செய்யுள் சிலேடையாக அமைந்துள்ளது.



# வடமொழிக் கல்வெட்டுகள்

ச. ஹரிஹரன்

தமிழ் நாட்டில் தமிழ்க் கல்வெட்டுகளுக்கு அடுத்து அதிகம் காணப்படுபவை வடமொழிக் கல்வெட்டுகள் ஆகும். இவற்றில் பல தமிழ்க் கல்வெட்டுகளுடன் சேர்ந்தே காணப்படுகின்றன. சில தனித்தும் எழுதப்பட்டுள்ளன. சில கல்வெட்டுகள் தமிழ் மொழியில் இருப்பதின் வடமொழி ஆக்கமாகவும் இருக்கின்றன.

வடமொழிக் கல்வெட்டுகளை இருவகையாக நீதி நூல்கள் குறிக்கின்றன.

1. 'இராஜகீயம்' : அரசுடையது.
2. 'ஜானபதம்' : மக்களுடையது.

அரசனோ, அமைச்சர்களோ அல்லது அதிகாரிகளோ அளிக்கும் உத்தரவுகள் 'இராஜகீயம்' எனப்படும். மக்கள் தமக்குள்ளே செய்து கொள்ளும் உடன்பாடுகள் 'ஜானபதம்' என்று அழைக்கப்படும்.

'இராஜகீயம்' நான்கு உட்பிரிவுகள் கொண்டதாக 'சாசனம்', 'ஜெயபத்ரம்', 'ஆக்ஞாபத்ரம்', 'பிரக்ஞாபனம்' என பிரிக்கப்பட்டுள்ளது. 'சாசனம்' என்னும் வட மொழிச் சொல் கட்டளை அல்லது உத்தரவு என்ற பொருளில் பொதுப்படையாக வழங்கப்படுவது. கோயில்களுக்கும், அந்தணர்களுக்கு கொடை அளித்ததை இவை பெரும்பாலும் குறிக்கின்றன. 'ஜெயபத்ரம்' என்பது வழக்குகளை அரசனேநேரில் ஆராய்ந்து, அறங்கூறும் பெரியோரின் கருத்தையும் அறிந்து, எடுத்த முடிவை அறிவிக்கும் ஓலைக்குப் பெயராகும். அரசாங்க அதிகாரிகளுக்கு அரசன் அளிக்கும் ஆணைக்கு 'ஆக்ஞாபத்ரம்' என்றும் அரசாங்க அதிகாரிகள் அரசனிடத்தில் விண்ணப்பிப்பதற்கு 'விக்ஞாபனம்' அல்லது 'பிரக்ஞாபனம்' என்றும் பெயர்.

'ஜானபதம்' பொது மக்களின் உடன்பாடுகளைக் குறிப்பது என்று கூறினோம். அது ஊர் கணக்கரால் எழுதப்படல் வேண்டும். அரசனைப் பற்றிய செய்திகளும், ஆண்டு, மாதம், பக்ஷம், கிழமை முதலியவைகளும் குறிக்கப்பட்டிருத்தல் வேண்டும் என்று 'ஸ்மிருதி சந்திரிகை' என்னும் நூல் குறிக்கின்றது. இதைத் தமிழ்க் கல்வெட்டுகள் 'வியவஸ்தை' என்றும் குறிக்கின்றன. தமிழ் நாட்டில் கிடைத்துள்ள மிகவும் தொன்மையான வடமொழிக் கல்வெட்டு 'சிவன் வாயில்' என்னுமிடத்தில் கிடைத்த சிம்மவர்மன் என்னும் பல்லவ மன்னனின் கல்வெட்டைக் கூறலாம். இவன் பத்து அசுவமேதயாகங்களையும், 'பகுஸுவர்ணம்' என்னும் வேள்வியையும் செய்தான் என அக்கல்வெட்டு குறிக்கிறது. பல்லவ மன்னர்களில் சிறந்தவனான மகேந்திரவர்மன் வடமொழியில் சிறந்த தேர்ச்சி பெற்றவன். அவனுடைய பெயர்கள் பல குகைக்கோயில்களில் வடமொழியில் காணப்படுகின்றன. மண்டகப்பட்டு என்ற இடத்திலுள்ள அவனது வடமொழிக் கல்வெட்டு வரலாற்றுச் சிறப்புடையது. இக்கோயில் நான்முகன், திருமால், சிவபிரானாகிய முப்பெரும் கடவுளர்க்கும் செங்கலின்றி, மரமின்றி, உலோகமின்றி, சுதையின்றி, விசித்ர சித்தனாகிய அரசனால் தோற்றுவிக்கப்பட்டது என்று அது கூறுகிறது.

ஏதத் அனிஷ்டகம் அத்ருமம் அலோஹம்
அஸுதம் விசித்ரசித்தேன !
நிர்மாபிதம் ந்ருபேண
ப்ரும்மேச்வர விஷ்ணு லக்ஷிதாயதனம் !!

இதிலிருந்து அவன் புதிய முறைகளைக் கையாண்டு இக்கோயிலைத் தோற்றுவித்தான் என அறியலாம். அவன் 'மத்த விலாசப் பிரஹஸனம்' என்னும் சிறந்த நகைச்சுவை நாடகத்தை வடமொழியில் இயற்றியிருக்கிறான். அது மாமண்டூர் என்னுமிடத்திலுள்ள இவனது குகைக் கோயிலில் இவன் கல்வெட்டில் குறிக்கப்படுகிறது. திருச்சி மலைக் குகையில் காவிரி ஆற்றின் அழகைப் போற்றி ஒரு சிறந்த வடமொழிச் செய்யுளைக் குறித்து வைத்துள்ளான். அதே இடத்தில் இவனுக்கு தர்க்க சாத்திரத்தில் உள்ள ஈடுபாட்டையும், புறச் சமயத்திலிருந்து சைவப் பெருஞ்சமயத்திற்கு மாறியதையும் அக்கல்வெட்டு சிறந்த வடமொழிச் செய்யுளில் குறிக்கிறது. மகேந்திரனுக்குப் பிறகு மாமல்லபுரத்தைத் தோற்றுவித்து பெரும்புகழ் கொண்ட இரண்டாம் நரசிம்மவர்மனாகிய இராஜசிம்மன் சிறந்த வடமொழிச் செய்யுட்களை

கல்வெட்டில் குறித்து வைத்துள்ளான். மாமல்லபுரம், சாளுவன்குப்பம், காஞ்சி, முதலிய இடங்களில் உள்ள வடமொழிச் செய்யுட்கள் சிறந்த காப்பியங்களாகவே திகழ்கின்றன. இவற்றில் சிலேடை அணியும், விரோதாபாசம் என்னும் அணியும், உத்பிரேக்ஷை என்னும் அணியும் மிளிருகின்றன. காஞ்சி கல்வெட்டில் இவன் சைவ சித்தாந்த வழியில் நின்று மலங்களை நீக்கிய சிவசூடாமணியாகத் திகழ்ந்தான் என்ற குறிப்பு உள்ளது. தமிழ் நாட்டில் சைவ சித்தாந்தத்தைக் குறிக்கும் மிகவும் தொன்மையான கல்வெட்டு இதுதான். சற்றேறக்குறைய இதே காலத்தில் தெற்கே பாண்டிய மன்னர்கள் குடைவித்த கோயில்களும் கிடைத்துள்ளன. அவற்றில் ஆனைமலையிலுள்ள நரசிம்மப் பெருமானின் கோயில் பாண்டிய பராந்தக நெடுஞ்சடையன் காலத்தில் தோற்றுவிக்கப்பட்டதைத் தமிழ் கல்வெட்டும், வடமொழிக் கல்வெட்டும் குறிக்கின்றன. திருப்பரங்குன்றத்தி லுள்ள ஒரு வடமொழிக் கல்வெட்டும் அக்கோயிலைத் தோற்றுவித்ததைக் குறிக்கிறது. பாண்டியர் பகுதி கல்வெட்டுகளில் சிறப்பாகக் குறிக்கப்பட வேண்டியது குடுமியாமலை என்ற இடத்தில் காணப்படுவதாகும். இதில் ருத்ராசாரியன் என்ற ஆசாரியரின் சீடனும், பரம மாஹேஸ்வரனுமான மன்னனால் சீடனின் நன்மைக்காக இசைப் பண்களெல்லாம் வகை செய்யப்பட்டு கல்வெட்டில் பொறிக்கப்பட்டுள்ளன. இவை வடமொழியில் எழுதப்பட்டுள்ளன. காந்தாரம், கௌசிகம், பஞ்சமம், கைசிகீமத்யமம், முதலிய பண்களைப் பாடும் வகையில் இவற்றில் குறிக்கப்பட்டுள்ளன. பண்களை இசைக்கும் முறை எழுத்துகளில் பொறிக்கப்பட்டுள்ளன. இவற்றை 'ஸ்வராகமங்கள்' என்று கல்வெட்டு குறிக்கிறது. இதே கல்வெட்டு 'திருமெய்யம்' குடைவரைக் கோயிலிலும் காணப்படுகிறது.

சோழர்களது கல்வெட்டுகளிலும் வடமொழி பல இடங்களில் இடம் பெற்றுள்ளது. ஆதித்தன், பராந்தகன் ஆகிய மன்னர்கள் காலத்தில், அவர்களுக்கு உறுதுணையாக நின்ற இருக்குவேளிர்கள் கொடும்பாளூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டனர். அவர்களில் விக்கிரமகேசரி என்று பட்டம் பூண்ட 'பூதி' என்ற மன்னனின் கல்வெட்டு சிறந்த வடமொழிச் செய்யுளில் எழுதப்பட்டுள்ளது. இராஜராஜனுடைய பல கல்வெட்டுகள் கீழ்வரும் வடமொழிச் செய்யுளுடன் தொடங்குகின்றன.

ஏதத் விஸ்வ ந்ருப ச்ரேணீ
மௌலி மாலோப லாலிதம் !
சாசனம் ராஜராஜஸ்ய
ராஜகேசரி வர்மண: !!

என்று தஞ்சைப் பெருங்கோயில் கல்வெட்டுகளிலும் காணலாம். இதே போன்று இராஜேந்திர சோழனுடைய கல்வெட்டும் ஒரு வடமொழிச் செய்யுளுடன் தொடங்கிறது.

ராஜத் ராஜன்ய மகுடஸ்ரேணீ
ரத்னேஷு சாசனம் !
ஏதத் ராஜேந்த்ர சோளஸ்ய
பரகேசரி வர்மண: !!

கன்னியாகுமரியில் வீரராஜேந்திர சோழனுடைய ஒரு கல்வெட்டு இருக்கிறது. இது சோழர் வரலாற்றை கணிக்க மிகவும் இன்றியமையாதது. இதில் இராஜராஜன், இராஜேந்திரன் முதலிய மாமன்னர்களுடைய சிறப்புகளெல்லாம், வெற்றிகளெல்லாம் மிக அழகாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன. இக்கல்வெட்டு மிகச் சிறந்த காப்பிய நடையில் வடமொழியில் எழுதப்பட்டுள்ளது.

தில்லையம்பதியில் நரலோகவீரன் என்ற சோழர் தானைத் தலைவன் செய்த திருப்பணிகள் வடமொழிச் செய்யுட்களாகக் குறிக்கப்பட்டுள்ளன. தவிர தில்லை கீழைக் கோபுரத்திலும், மேலைக் கோபுரத்திலும் பரதமுனியின் நாட்டிய நன்னூலில் குறிக்கப்பட்டுள்ள நூற்றெட்டு கரணங்களும் வாயில் நிலையில் சிலை உருவில் செதுக்கிவைக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு கரணத்தின் கீழும் அக்கரணத்தைக் குறிக்கும் பரதரின் நாட்டிய சாஸ்திரத்திலுள்ள செய்யுள் கி.பி. 12-ம் நூற்றாண்டைச் சார்ந்த எழுத்துகளில் பொறித்து வைக்கப்பட்டுள்ளன. இலக்கிய வரலாற்றிலேயே இது எங்கும் கண்டிராத ஒரு சிறந்த பண்பாகும். ஆடவல்ல பெருமானின் கோயிலாதலின் நாட்டிய சாஸ்திரம் முழுவதும் கல்லிலே எழுத்திலும் உருவிலும் செதுக்கி வைக்கப்பட்டுள்ளதை இங்குதான் காணலாம். குடுமியாமலையில் இசைப் பண்கள் குறிக்கப்பட்டுள்ளதைக் கண்டோம். ஆனால் இங்கு நாட்டிய நன்னூல் முழுவதும் பொறித்து வைக்கப்பட்டுள்ளதைக் காணலாம். திருவாரூர்க் கோயிலில் தர்ம சாஸ்திரம் அறிந்தவர்களால் ஒரு வழக்கு

ஆராயப் பெற்றது. அவ்வாராய்ச்சிக்கு ஆதாரமாய் இருந்த பல வடமொழி நூல்களும், செய்யுட்களும் மேற்கோள்களாக காட்டப்பட்டுள்ளன. இதுவும் சோழர் காலக் கல்வெட்டில் காணப்படுகிறது. குடந்தைக்கு அருகிலுள்ள திரிபுவனத்தில் திரிபுவன வீரன் எனப் பெயர் பெற்ற மூன்றாம் குலோத்துங்கனால் தோற்றுவிக்கப்பட்ட 'திரிபுவன வீரேச்வரம்' என்னும் கோயிலில் அம்மன்னனின் வெற்றிச் சிறப்புகளும், திருப்பணிகளும் வடமொழிச் செய்யுட்களில் குறிக்கப்பட்டுள்ளன. பின்னர் வந்த பிற்காலப் பாண்டியர்களும், விஜயநகர மன்னர்களும் வடமொழிச் செய்யுட்களை ஆங்காங்கே விட்டுப்போந்துள்ளனர்.



# செப்பேடுகள்

நடன. காசிநாதன்

அரசனது ஆணையையோ, அல்லது இரு திறத்தாருக்குள் ஏற்படுகின்ற ஒரு உடன்பாட்டையோ, பழங்கால மக்கள் செப்பேடுகளில் எழுதி வைத்துள்ளனர். அவர்கள் செப்பேடுகளில் எழுதிய காரணம் அது நீண்ட நெடுங்காலம் நிலைத்திருக்கும் என்பதால் இருக்கலாம். தமிழ்நாட்டில் கிடைக்கக்கூடிய கல்வெட்டுகளில்கூட, ஒரு கொடையைப் பற்றிக்குறிப்பிட்டுவிட்டு அதைச் 'செம்பிலும் சிலையிலும் வெட்டுவித்துக்கொள்க' என்று குறிக்கப்படுவதைக் காணமுடிகிறது. செப்பேட்டில் எழுதும் பழக்கம் இந்தியாவில் கி. மு. மூன்றாம் நூற்றாண்டு தொட்டே இருந்து வந்திருக்கிறது. உத்திரப்பிரதேசத்தைச் சார்ந்த சோகௌரா என்னும் இடத்திலிருந்து கிடைத்துள்ள பித்தளைத் தகடுகளில் காணப்பெறும் எழுத்துகள் கி.மு. மூன்றாம் நூற்றாண்டைச் சார்ந்தனவாக உள்ளன. அதைத் தொடர்ந்து இந்தியாவில் எல்லாப் பகுதிகளிலும் செப்பேட்டுச் சாசனங்களைக் காணமுடிகிறது. கி. பி. 21-ஐச் சேர்ந்த பதிகாவினுடைய தக்ஷசீல செப்பேட்டையும் கி.பி. 77-ஐச் சேர்ந்த கவலன் செப்பேட்டையும் உதாரணங்களாகக் காட்டலாம். ஆனால் மேற்குறிப்பிட்ட செப்பேடுகள் அனைத்தும், செப்பேடுகள் எந்த முறையில் எழுதப் பெற வேண்டுமென்று விஷ்ணு புராணமும். யாக்ஞவல்க்கியமும் கூறுகின்றனவோ அந்த முறையில் இல்லை.

ஒரு செப்பேடு எவ்வாறு எழுதப்பெறுதல் வேண்டும் என்பதை விஷ்ணு புராணம் கீழ்வரும் வகையில் குறிக்கிறது. அரசன் பிராமணர்களுக்கு நிலத்தைக் கொடையாக அளிக்க வேண்டும். செப்பேட்டில் அரசனது முத்திரை பதிப்பிக்கப் பெற்றிருக்க வேண்டும். கொடுக்கப்பட்ட நிலத்தின் எல்லைகள், பரப்பு ஆகியவை தரப்பெற்றிருக்க வேண்டும். அரசனது முன்னோர்களைப் பற்றி எழுதப்பெற்றிருக்க வேண்டும்.

இந்த முறைகளுக்குக் கட்டுப்பட்டு எழுதப்பெற்ற சாசனங்கள் கி. பி. நான்காம் நூற்றாண்டிலிருந்து கிடைத்து உள்ளன. அதுவும் குறிப்பாகத் தென்னிந்தியாவிலிருந்து, பல்லவ மன்னர்களுடைய

சாசனங்களாகக் கிடைத்துள்ளன. சிவஸ்கந்தவர்மனைச் சார்ந்த மயிதவோலு, ஹிரஹதகல்லிச் செப்பேடுகளையும், பல்லவ ஸ்கந்த வர்மனுடைய குணபதேயச்செப்பேட்டையும், ஜயவர்மனுடைய கொடைமுடிச் செப்பேட்டையும், வாகடக மன்னன் இரண்டாம் விந்தியசக்தியின் காசிம் செப்பேட்டையும், வேங்கி தேசத்து சாலங்காயன மன்னர்களின் செப்பேடுகளையும் கி. பி. 4-ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகக் கூறலாம். வட இந்தியாவில், குப்த மன்னர் முதலாம் குமாரகுப்தனின் தனைதஹா செப்பேடுதான் (433) இதுவரை கிடைத்தவற்றுள் காலத்தால் முந்தியது.

ஆனால் சில இடங்களில் எழுதப்பெற்றிருக்கும் கல்வெட்டுகளைக் காணின் அவை ஒரு சமயம் செப்பேட்டில் எழுதப் பெற்று பின்னர் அங்கு எழுதப் பெற்றனவோ என்று சந்தேகிக்கும் வண்ணம் உள்ளது. அத்தோடு தமிழ்க் கல்வெட்டுகளில் கூறப்படும் "செம்பிலும் சிலையிலும் எழுதிக் கொள் வீராகவும்" என்ற தொடரை அடிப்படையாகக் கொண்டு காணின் இன்று காணப்பெறும் ஒவ்வொரு கல்வெட்டுக்குமே செப்பேட்டுப் பிரதி ஒன்று இருந்திருக்க வேண்டுமோ என்று ஐயுற வேண்டிய நிலையில் உள்ளது. அந்த ஐயத்தை உறுதிப்படுத்தும் தன்மையில் சில கல்வெட்டுகள் கிடைத்துள்ளன. மேற்கு இந்தியாவில் காணப்பெறும் க்ஷஹராதர், சாதவாஹனர் மன்னர்களின் கல்வெட்டுகளைப் பார்க்கையில் அவைகள் துணியிலோ அல்லது செப்பேட்டிலோ எழுதப்பெற்றிருந்த மூலத்தின் மறு பிரதிகளாகத்தான் தோன்றுகின்றன. இக்கல்வெட்டுகள் கி.பி. இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்தவை. கௌதமி புத்திர சாதகர்னியின் கல்வெட்டு அதை ஒரு 'பட்டிகா' என்று அழைத்துக் கொள்கிறது. பட்டிகா என்றால் செப்புப் பட்டயம் என்றுதான் பொருளாகும். ஆகவே செப்பேட்டுச் சாசனம் இந்தியாவில் கி. பி. இரண்டாம் நூற்றாண்டுக்கு முன்பிருந்தே இருந்து வந்திருக்கிறது என்பது இதனாலும் உறுதியாகிறது.

இச்சூழ்நிலையில் இன்னொன்றும் நம்மால் உணரமுடிகிறது. அரசனது ஆணையோ, சாசனமோ துணியில்தான் எழுதப்பெற்றது என்றும், கொடையைப் பெறுபவர்கள் தான் அதனுடைய பிரதியைச் செப்பேட்டிலோ அல்லது கல்லிலோ எழுதிக் கொண்டார்களென்றும் எண்ண முடிகிறது. கல்வெட்டில் வரும் தொடர் "செம்பிலும் சிலையிலும் வெட்டிப் பரிப்பித்துக் கொள்ளவும்" என்பதாகத்தான் உள்ளது. இதன்படி பார்த்தால் அரசன் தனது ஆணையைச் செம்பிலும் சிலையிலும் வெட்டி வைத்துக் கொள்வதற்கு அனுமதி வழங்கியதாகத்தான் தெரிகிறது.

பிற்காலக் கல்வெட்டுகளில் சில செப்பேட்டின் பிரதிகளாகக் காணப்படுபவைகளுக்கு ஒரு சில உதாரணங்களைக் காணலாம். ஷெர்கத்திலே காணப்படும் கல்வெட்டு பரமார குல மன்னன் உதயாதித்யனின் (கி. பி. 1060-87) செப்பேட்டின் உண்மை நகலாகும். அதேபோல் போசள மன்னன் இரண்டாம் வீரவல்லாளனின் (கி. பி. 1192) கதக் கல்வெட்டு, நான்காம் இரட்ட கார்த்திவீர்யாவின் (1204) பெல்காம் கல்வெட்டு ஆகியவை செப்பேட்டின் பிரதிகளேயாகும். வீரராஜேந்திரனின் கன்னியாகுமரிக் கல்வெட்டும், வாயலூரில் காணப்படும் இராஜசிம்மனின் கல்வெட்டும் செப்பேட்டின் பிரதியாக இருக்கக்கூடும் என்று ஊகிக்கலாம்.

பெரும்பாலான செப்புப்பட்டயங்களின் அமைப்பைக் காணும்போது அவை பனை ஓலையின் வடிவிலே செய்யப் பெற்றிருக்கின்றன. பனை ஓலையைக் கோர்த்துள்ளது போன்று செப்பேடுகளின் இடது ஓரத்தில் துவாரமிட்டு செப்பு வளையத்தில் கோர்த்துக் காணப்படுகிறது. கல்வெட்டுகளிலும் ஓலைச்சுவடிகளிலும் காணப்படாத அரசனது முத்திரை செப்பேடுகளில் காணமுடிகிறது. அந்த முத்திரையைக் கொண்டே அது எந்த மன்னனைச் சார்ந்தது என்பதைக் கண்டுபிடித்து விடலாம். செப்பேட்டில் ஒவ்வொரு இதழின் ஓரத்திலும் காணப்பெறும் சற்று உயர்த்திய வரம்பு மற்றொரு இதழ் அதன்மேலே படுவதால் அதிலுள்ள எழுத்துக்கள் அழிந்து போகாவண்ணம் தடுப்பதற்கு வசதியாக உள்ளது. சில செப்பேடுகளில் இரண்டு பக்கங்களிலும் எழுதப் பெற்றிருக்கும். சில செப்பேடுகளில் ஒரு பக்கத்தில் மட்டும் எழுதப்பெற்றிருக்கும். செப்பேடுகள் சில முழுமையும் பாடலாலும், சில செப்பேடுகள் உரைநடையாலும் எழுதப் பெற்றிருக்கும். செப்பேடுகளில் ஒவ்வொரு பக்கத்துக்கும் எண் இடப்பட்டு இருக்கும்.

அரசனது ஆணையை இரண்டு மூன்று செப்புத் தகடுகளில் முதன் முதலில் எழுதியவர்களில் தென்னிந்தியாவில், பல்லவர்களையும், வாகடகர்களையும், மைத்ரகர்களையும் கூறலாம். ஆனால் அதிக அளவில் செப்புத் தகடுகளில் ஆணையை எழுதி வெளியிட்டவர்கள் சோழ மன்னர்களேயாவர். முதலாம் இராஜராஜனின் (கி. பி. 985-1016) லெய்டன் செப்பேடு இருபத்தொன்று செப்புத் தகடுகளில் 443 வரிகளில் எழுதப்பெற்றுள்ளது. முதலாம் இராஜேந்திரனின் திருவாலங்காட்டுச்செப்பேடு 31 - செப்புத் தகடுகளில் 816 வரிகளில் எழுதப்பெற்றுள்ளது. முதலாம் இராஜேந்திரனுடைய கரந்தைச் செப்பேடுதான் அதிக தகடுகளைக் கொண்டதாகவும், அதிக வரிகளில் எழுதப்பெற்றதாகவும் உள்ளது.

இச்செப்பேடு 55 தகடுகளில் 2500 வரிகளில் எழுதப்பெற்றுள்ளது. இச்செப்பேட்டின் மூலம் அளிக்கப்பெற்ற கொடையைப் பெற்றுக் கொள்ளவேண்டிய 1073 பேரின் பெயர்களையும் கூறியுள்ளது. மேலே கூறப்பெற்றவைகளைக் காண்கையில், "அரசன் கொடை வழங்கியதைச் செப்பேட்டில் எழுதியெழுதி நாட்டில் செம்புத்தட்டுப்பாடு ஏற்பட்டு விட்டது" எனக் கவிஞர்கள் மன்னனைப் புகழ்ந்திருப்பதில் ஓரளவு உண்மையும் இருக்கத்தான் செய்கிறது என்பது தெரிகிறது.

சில காலங்களில் முன்னர் எழுதப்பெற்றிருந்த செப்பேடு உருக்கப் பெற்று பின்னர் புதிதாக எழுதுவதற்குப் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. சில நேரங்களில் முன்னர் எழுதப்பெற்றிருந்தவைகளைச் சுத்தியலால் தட்டிச் சமப்படுத்திவிட்டு பின்னர் வேறு ஆணையை எழுதியும் உள்ளனர். அவ்வாறு உள்ள செப்பேடுகளில் முன்னர் எழுதப்பெற்ற வாசகத்தின் எழுத்துக்கள் சில இடங்களில் தெரியக்கூடும். சில செப்பேடுகளில் பழைய வாசகங்களில் ஒரு பகுதியே அழிக்கப்பெற்று அவ்வாறு அழிக்கப்பெற்ற இடத்தில் புதிய வாசகங்கள் எழுதப்பெற்றிருக்கும். இத்தகைய செப்பேடுகளில் இருவேறுகால எழுத்துக்களையும் காணமுடியும்.

பிற்காலச் செப்பேடுகள் பெரும்பாலும் சதுர வடிவிலோ அல்லது நீண்ட சதுரவடிவிலோ அமைந்துள்ளன. தலைப்பில், செப்பேட்டின் நடுவில் கையால் பிடிப்பதற்காகச் சிறிது நீண்டு இருக்கும். இந்த விதமான செப்பேடுகளில் சிலவற்றில் அரசனது முத்திரையும், சிலவற்றில் சுவாமிகளின் உருவங்களும் வரையப்பெற்றிருக்கும்.

இந்தியாவில் கிடைத்த செப்பேடுகளுள்ளே காலத்தால் முந்திய வற்றுள் பல்லவர்கள் செப்பேடுகள் முதன்மையானவை என்பது முன்னரே அறியப்பட்டது. அவர்களின் செப்பேடுகள் கி.பி. 3-ஆம் நூற்றாண்டு வரை அனைத்தும் கிரந்த எழுத்திலும் பிராகிருதம், ஸமஸ்கிருதம் ஆகிய மொழிகளிலும் அமைந்தனவாயுள்ளன. கி. பி. ஐந்தாம் நூற்றாண்டைச்சார்ந்த முதலாம் குமாரகுப்தனின் செப்பேடு பிராமி எழுத்திலும் ஸமஸ்கிருத மொழியிலும் எழுதப்பெற்றுள்ளது. கி.பி. ஆறாம் நூற்றாண்டு முதல் காணப்படும் பல்லவச் செப்பேடுகளில் தமிழ் எழுத்தில ஒரு பகுதியும் கிரந்த எழுத்தில் ஒரு பகுதியும் காணமுடிகிறது. அதே போன்று தான் சோழ மன்னர்களின் கரந்தைச் செப்பேடு, லெய்டன் செப்பேடு, திருவாலங்காடு செப்பேடு ஆகியவைகள் சமஸ்கிருதத்தில் ஒரு பகுதியும்

தமிழில் ஒரு பகுதியுமாக எழுதப்பெற்றுள்ளன. முதலாம் இராசேந்திரனின் திருக்களர் செப்பேடும், முதலாம் இராசாதிராசனின் திருக்களர் செப்பேடும் முதலாம் குலோத்துங்கச் சோழனின் சிறிய லெய்டன் செப்பேடும் இன்னும் சிலவும் தனித்தமிழிலேயே எழுதப்பெற்றுள்ளன. கி. பி. 8-9 ஆம் நூற்றாண்டுகளில் ஆண்ட பாண்டிய மன்னர்களின் செப்பேடுகளும் சமஸ்கிருதத்தில் ஒரு பகுதியும் தமிழில் ஒரு பகுதியுமாக எழுதப்பெற்றுள்ளன. உதாரணமாக வேள்விக்குடிச் செப்பேடு, சின்னமனூர்ப் பெரிய செப்பேடு ஆகியவைகளைக் கூறலாம். இச்செப்பேடுகளில் ஸமஸ்கிருதப் பகுதி கிரந்தத்திலும் தமிழ்ப் பகுதி வட்டெழுத்திலும் எழுதப்பெற்றுள்ளன. பிற்காலத்திய பாண்டியனான வீரபாண்டியனின் (கி.பி. 1470) செப்பேடு தனித் தமிழிலேயே எழுதப்பெற்றுள்ளது. விஜயநகர மன்னர்களும் நாயக்க மன்னர்களும் தெலுங்கிலும், கன்னடத்திலும், தமிழிலும் செப்பேடுகளில் எழுதியுள்ளனர். இராமநாதபுரம் சேதுபதிகள் தங்கள் செப்பேடுகளையெல்லாம் தமிழிலேயே வெளியிட்டுள்ளனர்.

இனி, பொதுவாகச் செப்பேடுகள் எந்த முறையில் அமைந்திருக்கும் என்பதைப் பார்க்கலாம். செப்பேட்டில் எழுதப்பெற்றிருப்பவைகளைப் பொதுவாக மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம். 1. முன்னுரை, 2 குறிப்புரை, 3 முடிவுரை என்பனவாகும்.

முன்னுரைப் பகுதியில் பொதுவாக ஆண்டவனை வணங்குதலும் எந்த இடத்திலிருந்து அந்த செப்பேடு வழங்கப்பெற்றது என்பதும், கொடை அளிப்பவரின் பெயரும், அவர் முன்னோர்களின் வரிசையும் அமைந்திருக்கும். குறிப்புரைப்பகுதியில் என்ன கொடுக்கப்படுகிறது என்பதும், கொடை பெறுபவரின் பெயரும், எக்காரணத்துக்காக அக்கொடை கொடுக்கப்படுகிறது என்பதும், நிலமாயின் அந்நிலத்தின் நான்கு எல்லைகளும் குறிக்கப்பெற்றிருக்கும். முடிவுரைப் பகுதியில் அளிக்கப்பட்ட கொடைக்கு யாரும் எந்தவிதத் தீங்கும் இழைக்கக்கூடாது என்பதும், அவ்வாணையைத் தயாரிப்பதற்குக் காரணமாயிருந்த அலுவலர்களின் பட்டியலும் குறிக்கப்பெற்றிருக்கும் எந்த ஆண்டில் அக்கொடை வழங்கப்பெற்றது என்பதைச் சில செப்பேடுகளில் செப்பேட்டின் தொடக்கப் பகுதி முடிந்ததும், சில செப்பேடுகளில் முடிவுரைப் பகுதி முடிந்த பின்பும் எழுதப்பெற்றிருக்கும்.

ஒன்றை எழுத ஆரம்பித்தோமானால் பிள்ளையார் சுழிபோட்டுவிட்டு பின்னர் தொடங்குகிறோம் அல்லவா, இந்தப்பழக்கம் இன்று நேற்று

ஏற்பட்டதல்ல. மிகப் பழங்காலந்தொட்டே இருந்து வந்திருக்கிறது என்பது கல்வெட்டுகள் மூலமும் செப்பேடுகள் மூலமும் அறிய முடிகிறது. ஆனால் அப்பொழுது உபயோகப்படுத்தப்பட்ட சொல் வேறாக உள்ளது. அச்சொல்லின் குறுகிய வடிவோ அல்லது அதற்கான குறியோ என்னவோ இப்பொழுது உபயோகிக்கப்படும் பிள்ளையார் சுழி என்று யோசிக்க வேண்டியுள்ளது. பழங்காலச் செப்பேடுகளிலெல்லாம் தொடக்கத்தில் சித்தம் (காரியத்தில் வெற்றி கிட்டுக) என்ற மங்கலச் சொல்தான் காணப்படுகிறது. இந்தச் சொல் காத்யாயணம் காலத்தில் பயன் படுத்தப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. சில நூற்றாண்டுகளுக்குப் பிறகு ஸ்வஸ்தி என்ற சொல்லை மங்கலச் சொல்லாகப் பயன்படுத்தியுள்ளார்கள். ஸ்வஸ்தி என்றால் மங்களமுண்டா கட்டும் என்று பொருள். நாளடைவில் 'ஓம் நமச்சிவாயஜிதம் பகவதாகதகன ககனறாபன பத்ம நாரான' போன்ற நீண்ட மங்கலவாக்கும் உபயோகப்படுத்தப்பட்டுள்ளன.

அடுத்து எந்த இடத்திலிருந்து அந்த ஆணை வெளியிடப்படுகிறது என்பது குறிக்கப்பட்டிருக்கும் என்று முன்னரே சொல்லப்பட்டது. ஒரு சில செப்பேடுகளில் அந்த இடம் சாதாரணமாக விளக்கப்பட்டிருக்கும். சில செப்பேடுகளில் அந்த இடம் மிக விரிவாக விளக்கப்பட்டிருக்கும். தென்கோசலத்தைச் சேர்ந்த முதலாம் மஹாபவ குப்தனின் சோன்பூர் செப்பேட்டை இதற்கு உதாரணமாகக் கூறலாம். அதில் ஆராமா என்ற நகரம் மிக விரிவாக விளக்கப்பட்டுள்ளது.

அடுத்து, அவ்வாணை எந்த மன்னனால் வெளியிடப்படுகிறது என்று சொல்ல வருகையில், அம்மன்னன் இன்னாருக்கு மகன், இன்னாருக்குப் பெயரன் என்று குறிக்கப்பெற்றிருக்கும். சாதவாகனர்களின் செப்பேடுகளில் இன்ன அரசிக்கு மகன் என சொல்லப்பெற்றிருக்கும். ஒரு அரசனுக்குப் பல அரசிகளின் மூலமாகப் பிறந்த மகன்கள் சிலசமயம் ஒரே பெயரைத் தாங்கியிருப்பார்கள். அவர்களைத் தெளிவாகத் தெரிந்து கொள்ள வேண்டி இன்ன அரசிக்கு மகன் என்று குறிப்பிடப்பெற்றிருக்கலாம் என்று கருதுகிறார்கள். அரசனின் முன்னோர்களைப்பற்றியும் அவர்களுடைய வீரச் செயல்களைப் பற்றியும் விளக்கமாகவும் குறிப்பிடப்பெற்றிருக்கும். இந்தப் பகுதியில் மன்னர்களின் குலமுறையை எளிதாகப் புரிந்து கொள்ளலாம். சோழ மன்னர்களின் செப்பேடும், இராட்டிரகூட மன்னர்களின் செப்பேடும், சாளுக்கிய மன்னர்களின் செப்பேடும் மன்னர்களின்

குலமுறையை மிகத் தெளிவாகக் கூறுகின்றன. இந்தப் பகுதியில் எந்த மன்னனுக்குப் பிறகு எந்த மன்னன் அரசாண்டான் என்பதைப் புரிந்து கொள்ள முடிகிறது.

அடுத்து என்ன கொடையளிக்கப்பட்டது என்று கூறும் போது கொடையளிக்கப்பட்டது நிலமாயின் அது எந்த மண்டலத்தில் எந்த நாட்டின், எந்த ஊரில் உள்ள நிலம் என்றும், அச்சொத்துக்களின் நான்கு பக்க எல்லைகளையும் தெளிவாகக் குறிக்கப்பட்டிருக்கும். அச்சொத்தின் அளவும், அது இந்த அளவு கோலினால் அளக்கப்பெற்ற இத்தனை மாநிலம் என்றும் விளக்கமாகக் குறிக்கப்பட்டிருக்கும். கொடையைப் பெற்றுக்கொண்டவர் சில செப்பேடுகளில் தனியராகவும், சில செப்பேடுகளில் பலராகவும் காணப்படுகின்றனர். ஒரு சொத்து பலருக்குத் தானமாக அளிக்கப்பட்டால் ஒவ்வொருவரும் எந்த அளவு பங்கிட்டுக் கொள்ளவேண்டு என்பதும் குறிப்பிடப்பெற்றுள்ளது.

> ". . . . . இவையுள்ளிட்ட ஸர்வ்வ பரிஹாரமாய் பிரமதேயம பெற்ற நல்கூர் நற்பார்ப்பார் காஸ்யப கோத்திரத்து ஆவத்தம்ப சூத்திரத்துக் கரஞ்சை வத்தவன் குமாரகோவச சதுர்வேதிச் சோமாசி பங்கொன்றும்
> இக்கோத்திரத் திச்சூத்திரத் திவ்வூர் வத்தவன் நாராயண உருத்ரச்சதுர்வேதி பங்கொன்றும் இக்கோத்திரத்துக குண்டூர்ச் சன்னயச் சதுர்வேதி பங்கொன்றும். . . . ."

என்று அளவில் கொடுக்கப்பட்ட கொடையைப் பகிர்ந்து கொள்ள வேண்டும் என தண்டந்தோட்டம் செப்பேடு விளக்குகிறது.

கொடையைப் பெற்றுக் கொள்பவர்கள் எந்த வளநாட்டில் உள்ள, எந்த நாட்டைச் சேர்ந்தவர்கள் என்பதையும், சில சமயங்களில் அவர்களது கோத்திரத்தையும் குறிப்பிடும்.

செப்பேடுகள் எச்சூழ்நிலையில் அளிக்கப்பட்டன என்பதும் சில செப்பேடுகளில் குறிப்பிடப்பட்டுள்ளன. சில செப்பேடுகள் சங்கராந்தி தினத்தன்றும், சில செப்பேடுகள் சில குறிப்பிட்ட விழாவின் போதும் சில செப்பேடுகள் சில குறிப்பிட்ட தலங்களுக்கு அரசன் செல்கின்றபோதும், சில புண்ணிய நதிகளில் நீராடிய பிறகும் வழங்கப்பட்டதாகக் குறிக்கப்பட்டுள்ளன.

சில சமயங்களில் மன்னர் தாமாகவே கொடையளித்திருக்கிறார். சில சமயங்களில் மனைவி அல்லது தாய் ஆகியோரின் தூண்டுதல்களினால் மன்னர் கொடை வழங்கியிருக்கிறார். சில சமயங்களில் அதிகாரியின் தூண்டுதலினாலும் நடைபெற்றிருக்கிறது. சில சமயங்களில் ஒருவனின் முன்னோர் பெற்று வந்திருந்த சலுகைகள் இடையிலே நிறுத்தப்பட்டிருப்பின், அதற்கு உரிமையுடையவன் வந்து வேண்டவே அதன் பின்னர் அளிக்கப்பட்டிருக்கும், உதாரணமாக

ஆங்கொரு நாண்,
"மாடமாமதிற் கூடற் பாடு நீத்தவ ராக்ரோதிக்கக்
கொற்றவனே மற்றவரைத் தொற்றென நன்கு கூவி
என்னேநுங் குறையென்று முன்னாகப் பணித்தருள
மேனாணின் குரவராற் பான்முறையின் வழுவாமை
மாகந்தோய் மலர்ச் சோலைப் பாகனூர்க் கூற்றத்துப் படுவது
ஆள்வதானை யடல்வேந்தே வேள்விகுடி யென்னும்
பெயருடையது
ஒல்காத வேற்றானையொ டோதவேலியுடன் காத்த
பல்யாக முதுகுடுமிப் பெருவழுதியென்னும் பரமேச்வரனால்
வேள்விகுடி யென்னப்பட்டது கேள்வியாற்றரப் பட்டதனைத்
துளக்கமில்லாக் கடற்றானையாய் களப்பிரராலிறக்கப்பட்டது
என்று நின்றவன் விக்ஞாப்யஞ் செய்ய"

அங்ஙனமாயின் அதற்குரிய சான்று காட்டி பெற்றுக் கொள்க என்று மன்னன் கூறி, அவ்வூரைத் திரும்பவும் வழங்கப் பெற்றதை வேள்விக்குடிச் செப்பேடு விளக்கமாக்குகிறது.

அவ்வாறு அளிக்கப்பட்டது நிலமாயின் அந்த நிலத்தை எல்லை வகுப்பதற்கு அரசு அதிகாரி ஒருவர் வெண்யானை மீதேறி, மக்கள் (நாட்டார்) பின் தொடர அளிக்கப்பட்ட நிலத்தின் நான்கு எல்லைகளையும் சுற்றி வருவார். சுற்றிவந்த பின்னர் நான்கு எல்லைகளிலும் எல்லைக்கல்லும், கள்ளியும் நடப்படும்.

"நாட்டோமுக்குத் திருமுகம் வர, நாட்டோமுந் திருமுகங்கண்டு, எதிரெழுந்து சென்று, தொழுது, வாங்கித் தலைமேல் வைத்துப், பிடி சூழ்ந்து, பிடாகை நடந்து, எல்லை தெரிந்து, கல்லுங் கள்ளியும் நாட்டி"

என்று முதலாம் இராசராசனின் பெரிய லெய்டன் செப்பேட்டில் உள்ளதை இதற்கு எடுத்துக்காட்டாக கூறலாம்.

இறுதியாக, கொடை அளிக்கப்பட்ட ஒன்றைத் தமக்குப் பின்னர் அரசாள வருபவர்களாயினும், வேறுநாட்டு மன்னர்களாயினும், தனது குடிமக்களாயினும் யாரும் தீங்கு செய்யக்கூடாது என்றும், அதை மதித்துப் பாதுகாக்க வேண்டும் என்றும் அரசனுடைய வேண்டுகோள் அடங்கியிருக்கும். அதற்குப் பிறகு அவ்வாணை வெளிவரும்போது எந்தெந்த அதிகாரிகள் ஒப்பமளித்தார்கள் என்று குறிக்கப்பட்டிருக்கும்.

ஆண்டு குறிக்கப்படும் இடத்தில், அரசனின் ஆண்டு மட்டும் குறிக்கப்பட்டும், சில நேரங்களில் அரசனின் ஆட்சி ஆண்டோடு சக ஆண்டு அல்லது கலி ஆண்டு குறிக்கப் பெற்று காணப்படும்.



# நடுகல்

இரா. நாகசாமி

இறந்துபட்ட வீரர்களுக்கு ஈமக்கடன் ஈந்து கல் நட்டு வழிபடுவது பண்டைய தமிழ் மரபு இவ்வாறு நடப்பட்ட கற்களையே நடுகல் என்று பொதுப்படையாக அழைக்கிறோம். வீரர்களுக்கு நடப்பட்ட கற்களே பெரும்பாலாகக் கிடைப்பதாலும், புகழ் நிறுத்தி இறந்துபட்ட வீரனுக்கு கல் நடுவது இலக்கியங்களில் குறிக்கப்படுவதாலும் பொதுவாக வீரன் என்கிறோம்.

அண்மையில் தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை சுமார் 60-க்கும் மேற்பட்ட நடுகற்களைக் கண்டுபிடித்துள்ளது. அவை இலக்கியத்திற்கும் வரலாற்றுக்கும் பல அரும் செய்திகளைத் தந்திருக்கின்றன.

### உள்ள இடங்கள்

பெரும்பாலும் நடுகற்கள் ஊர்களின் புறத்தே காணப்படுகின்றன. ஊர்களின் நடுவில் காணப்படவில்லை. ஒரே இடத்தில் இரண்டு அல்லது மேற்பட்ட நடுகற்கள் காணப்படுவதும் உண்டு. ஒரே போரில் இறந்த பல வீரர்களுக்கு நடுகற்கள் ஒரே இடத்தில் காணப்படுவதும் உண்டு. ஒரே போரில் இறந்த இரண்டு வீரர்களின் உருவமும் பெயரும் ஒரே நடுகல்லில் பொறிப்பதும் உண்டு. ஒரு போர் இரண்டு ஊர்களில் நடக்க, அந்தந்த ஊர்களில் வீழ்ந்த மறவர்களுக்கு அங்கங்கே நடப்பட்ட கற்களும் உள்ளன. வட ஆற்காடு மாவட்டத்தில் சாத்தனூர், அய்த்தான்பாளையம் என்னும் ஊர்கள் அருகருகில் உள்ளன. பராந்தகச் சோழனுடைய நான்காம் ஆண்டில் ஆநிரைகளைக் கவர்ந்து சென்றனர். அவற்றை மீட்கும் பொழுது அய்த்தான்பாளையத்தில் ஒரு வீரன் வீழ்ந்தான். சாத்தனூரில் மற்றொரு வீரன் வீழ்ந்தான். அய்த்தான்பாளையத்தில் ஒன்றும் சாத்தனூரில் ஒன்றுமாக இரு நடுகற்கள் கிடைத்துள்ளன. தவிர சாத்தனூரில் முதல் மகேந்திரவர்மன், முதல் நரசிம்மவர்மன், இரண்டாம் நரசிம்மவர்மன், பராந்தகன் ஆகிய மன்னர்கள் காலத்தில் வீழ்ந்த மறவர்களுக்கு நடப்பட்ட கற்கள்

ஒரே இடத்தில் காணப்படுகின்றன. இதிலிருந்து ஊரின் ஒரு புறத்தை தேர்ந்தெடுத்து ஈமக்காடு போல் பாவித்து அங்கு வீழ்ந்து பட்ட வீரர்களுக்கெல்லாம் நடுகல் எடுத்தனர் என்று கொள்ள இடமிருக்கிறது. சில நடுகற்கள் ஏரிக்கரைகளிலும், ஆற்றங்கரைகளிலும் காணப்படுகின்றன. சில நடுகற்கள் ஊரில் இருந்து வெகு தூரத்தே நடுக்காடுகளில் காணப்படுகின்றன. இவை வீரன் இறந்துபட்ட இடத்திலேயே எடுக்கப்பட்டவையோ என ஐயம் தோன்றுகின்றது.

### பெயர்கள்

இந்நடுகற்கள் வட ஆற்க்காடு, தென்னாற்காடு, சேலம், தர்மபுரி மாவட்டங்களில் வேடியப்பன் என்று அழைக்கப்படுகிறது. இவை இருக்கும் இடத்தை வேடியப்பன் கோயில் என்று அழைப்பர். வேடர், கிருஷ்ணாரப்பன், மீனாரப்பன், சன்யாசியப்பன் என்று பல பெயர்களிலும் நடுகற்கள் அழைக்கப்படுகின்றன. சில இடங்களில் 'ஆஞ்சநேயர் கல்லு' என்றும் அழைக்கப்படுவது உண்டு. சில சிறப்புப் பெயர்களும் உண்டு. சிறை மீட்டான் கோயில் (நிரை மீட்டான் என்பதின் திரிபோ?), ஊமை வேடியப்பன், இரட்டை வேடியப்பன், சாவுமேட்டு வேடியப்பன், நத்தமேட்டு வேடியப்பன் எனப் பல பெயர்கள் காணப்படுகின்றன. சில காரணப் பெயர்களும் உண்டு. ஒரு நடுகல்லில் வீரனின் காலின் கீழ் மாட்டின் உருவம் செதுக்கப்பட்டுள்ளது. அது மிகச் சிறியதாக முயல் போல் காணப்படுகிறது. ஆதலின் இதை 'மொசவேடியப்பன்' என்று குறிக்கின்றனர். மற்றொரு நடுகல்லில் வீரனின் காலின் கீழ் கல் உடைந்து போய்விட்டது. அதை ஊரார் நொண்டி வேடியப்பன் என்று கூறுகின்றனர். வேடியப்பன் எனப் பெயர் ஏன் வந்தது என்பது தெரியவில்லை. இங்கு வேட்டுவர் இருந்ததால் இப்பெயர் பெற்றதோ என ஐயம் தோன்றுகிறது.

### அமைதி

நடுகற்களில் வீரனுடைய உருவம் சமர்புரியும் நிலையில் காண்பிக்கப்பட்டிருக்கும். கரங்களில் வில்லும் அம்பும் ஏந்தியோ அல்லது வாளும் கேடயமும் ஏந்தியோ வீரன் காட்டப்பட்டிருப்பான். சிலவற்றில் ஒரு கரத்தில் வில்லும், மறுகரத்தால் இடையில் உள்ள குறுவாளை உருவும் வகையிலும் காட்டப்பட்டிருக்கும் பல நடுகற்களில் வீரனின் உடலில் பல அம்புகள் துளைத்து நிற்பது காட்டப்பட்டிருக்கும். வீரன் எதிர்த்து நின்று வீழ்ந்து பட்டான் என்னும் வகையில் முன்புறத்திலிருந்தே அம்பு பாய்வது போல் காட்டப்பட்டிருக்கும், போர்க் களத்தில் தன் மகன் முதுகிலே அம்பு பாய்ந்து இறந்தான் எனக் கேட்டு, அது உண்மையாயின்

அவனுக்கு பால் கொடுத்த தனத்தை வாளால் வீசுவேன் எனக் கூறி களத்திற்குச் சென்று தன் மகனைத் தேட மார்பினில் அம்பு பாய்ந்து மாய்ந்து கிடந்த அவனைக் கண்டு பெரிதும் உவந்தாள் தாய் என்று கூறும் சங்க மரபல்லவா? பெரும்பாலும் வீரன் அரையாடை மட்டும் அணிந்திருப்பான். இடுப்பில் நீண்ட துணியும் கட்டப்பட்டிருக்கும். உடலின் மேல் ஆடை கிடையாது. தலையில் ஒரு முடி காணப்படுகிறது. சில வீரர் நீண்ட பின்னலை உடையவர்களாகவும் காணப்படுகின்றனர். பல நடுகற்களில் வீரனின் கால் புறத்தே ஒரு மூக்குக் கெண்டியும், ஒரு சிமிழும், கைப்பிடி உடைய முகம் பார்க்கும் கண்ணாடியும் காண்பிக்கப்பட்டிருக்கும். இவை தனியாகவோ சேர்ந்தோ காண்பிக்கப்பட்டிருக்கும். சில நடுகற்களில் ஆநிரைகள் காட்டப்பட்டிருக்கும். இவை நிரை கோடலில் அன்றி மீட்டலில் வீழ்ந்த வீரனுக்கு எடுக்கப்பட்ட நடுகற்களாகும். வட ஆற்காடு மாவட்டம் செங்கம் பகுதி, மலைக்குன்றும் காடுகளும் அடர்ந்த பகுதியாதலால் புலிகளால் பயமுண்டு. புலிகளிடமிருந்து ஊரையோ, உடைமையோ காத்த போது வீழ்ந்த வீரனுக்கு எடுத்த நடுகற்களும் உண்டு. அவற்றில் வீரன் ஒரு புலியோடு சண்டையிடுவது காண்பிக்கப்பட்டிருக்கும். மோத்தக்கல் என்ற இடத்தில் கிடைத்த கல்வெட்டில் வீரன் புலியோடு புரியும் சண்டை காண்பிக்கப்பட்டுள்ளது. அதில் புலி குத்திப்பட்டான் என்று எழுதியுள்ளது.

ஒரு கல்லில் கள்ளர்கள், எருமையைக் காத்து நின்ற தலைவனைக் கொன்றனர். அவர்களைக் கடித்துத் துரத்தி தலைவன் அருகே நின்ற நாயின் உருவமும் பெயரும் பொறிக்கப்பட்டுள்ளன.

### கற்பொறி

நடுகற்களில் மன்னனின் ஆட்சியாண்டு, வீழ்ந்த வீரன் பெயரும் அவனைப் பற்றிய செய்திகள், போர், நிரை கொண்டது, நிரை மீட்டது ஆகியவற்றில் எதனால் வீழ்ந்தான் முதலியனவும் பொறிக்கப்பட்டிருக்கும். இச்செய்திகள் வீரனுக்கு மேலோ, கீழோ, பக்கவாட்டிலோ எழுதப்பட்டிருக்கும். உதாரணம்,

> "கோவிசைய சிங்கவிண்ண பருமற்குப்
> பதினான்காவது பெரும்பாண்ணரைசர்
> மக்கள் சாத்த பராவனார் சேவகன் வண்ண
> ஊர் பாவன் பூசலுட் பட்ட கல்"

சில நடுகற்கள் யாரால் நடுவிக்கப்பட்டன என்றும் குறிக்கப்பட்டுள்ளன. கூடல் என்னும் இடத்தில் கிடைத்த கல்லில் "கூடல் இளமக்கள் நடுவித்த கல்" என்று காணப்படுகிறது இளமக்கள் என்பது வீரர்களைக் குறிக்கும். சில கற்களில் கல்வெட்டுகள் ஏதுமின்றி வீரனின் உருவம் மட்டும் பொறிக்கப்பட்டிருக்கும். உருவம் இல்லாது நடப்பட்டுள்ள நடுகற்களும் உள்ளன. ஒரு சில பிற்கால நடுகற்களில் வீரனின் அருகில் பெண்களின் உருவங்களும் காண்பிக்கப்பட்டுள்ளன. இவர்கள் வீரனுடன் தீப்பாய்ந்தார்களோ என ஐயத்திற்கு இடமுண்டு ஆனால் இதுபோன்ற கற்களில் கல்வெட்டுகள் கிடைக்கவில்லை.

## இலக்கணம்

இந்நடுகற்கள் எப்பொழுது நடப்பட்டன என்று அறிந்து கொள்ள பண்டைய இலக்கியங்களும் இலக்கணங்களும் உதவுகின்றன. வீரர்களது மாட்சி புறத்துறைக்கு உரிய செய்தி ஆதலின் தொல்காப்பியத்தில் புறத்திணை இயலில் இது குறிக்கப்படுகிறது. மாற்றான் நாட்டை மன்னன் கைப்பற்றுவதன் முன்னர் அந்நாட்டு ஆநிரைகளைக் கொள்வது வழக்கம். மறவர்கள் அவ்வாறு மாற்றான் நாட்டு ஆநிரைகளைக் கொள்ளச் செல்லும்போது 'வெட்சி' என்னும் பூவை அணிந்து செல்லுதல் வழக்கம். இதை 'வெட்சித்திணை' என்று தொல்காப்பியம் கூறும்.

> வேந்து விடு முனைஞர் வேற்றுப்புலக்களவின்
> ஆதந் தோம்பல் மேவற்றாகும் (தொல்.57)

போர் நடக்கும் போது பல அழிவுகள் ஏற்படும். ஆநிரைகளும், அந்தணர்களும், பெண்டிரும், நோய்வாய்ப்பட்டோரும் காக்கப்படல் வேண்டும். இவற்றில் ஆநிரைக்கு தங்களைக் காத்துக் கொள்ளும் அறிவில்லாத காரணத்தால் அவற்றைக் கொண்டு வந்து போருக்குச் செல்லும் அரசன் தானே பாதுகாத்தல் அறம் என்பது பண்டைய தமிழ் மரபு.

> "ஆவு மானியற் பார்ப்பன மாக்களும்
> பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்
> தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்
> பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்
> எம்மம்பு கடிவிடுதும் நும்மரண் சேர்மினென
> அறத்தாறு நுவலும் பூட்கை மறத்தின்" (புறம் 9)

"வேந்தனால் ஏவப்பட்ட காவலர் நிரை கோடலும், குறுநிலமன்னர் நிரைகொள்ளலும், பிற மறவர் நிரை கொள்ளலும், இதன் கண் அடங்கும்" என்று நச்சினார்க்கினியர் குறிக்கிறார். இது பதினான்கு துறைகளை உடையது என்று தொல்காப்பியம் குறிக்கிறது.

"படையியங்கு அரவம் பாக்கத்து விரிச்சி
புடைகெடப் போகிய செலவே புடைகெட
ஒற்றின் ஆகிய வேயே வேய்ப்புறம்
முற்றின் ஆகிய புறத்திறை முற்றிய
ஊர்கொலை ஆகோள் பூசல் மாற்றே
நோயின்று உய்த்தல் நுவலுழித் தோற்றம்
தந்துநிறை பாதீடு உண்டாட்டுக் கொடை என
வந்த ஈரேழ் வகையிற் றாகும்." (தொல். 58)

வெட்சித் திணையைக் குறிஞ்சி என்னும் திணைக்குப் புறமாகக் கூறுவர்.

"வெட்சிதானே குறிஞ்சியது புறனே"

இதற்கு இளம்பூரணர் சிறந்த உரை குறித்துள்ளார். "வெட்சி குறிஞ்சிக்குப் புறனாயது எவ்வாறெனில் நிரைகோடல், குறிஞ்சிக்குரிய மலைசார்ந்த நிலத்தின்கண் நிகழ்தலாலும் அந்நிலத்தின் மக்களாயின் பிறநாட்டு ஆன்நிரையைக் களவிற்கோடல் ஒருபுடை குறிஞ்சிக்கு உரித்தாகிய களவோடு ஒத்தலானும் அதற்கு அது புறனாயிற்று என்க" என்று குறித்துள்ளார். இங்கு மலையைச் சார்ந்த நிலத்தில் வாழும் மக்கள் ஆநிரையைக் களவில் கொள்ளுதல் வழக்கம் என்ற குறிப்பு நோக்கத்தக்கது. அண்மையில் கிடைத்துள்ள ஏராளமான நடுகற்கள் மலைப்பகுதி நிறைந்த வட ஆற்காடு மாவட்டம் செங்கம் பகுதியில் காணப்படுகின்றன. இவ்வளவு நடுகற்கள் இப்பகுதியில் மட்டும் காணப்படுவது இளம்பூரணர் குறித்து உள்ள மரபுக்குச் சான்று பகர்வனவாய் உள்ளன. நிரை கொள்வது போல, நிரை மீட்டலும் ஒரு திணையாகக் கருதப்படுவது உண்டு. இதை 'கரந்தைத் திணை' என்பர். ஆநிரைகளைக் கொள்வதை 'நிரைகோடல்' என்றும், மீட்டு வருவதை 'நிரை மீட்டல்' என்றும் இலக்கணங்களும், இலக்கியங்களும் குறிக்கின்றன. இப்போது கிடைத்துள்ள நடுகற்களில் நிரை என்பதற்கு 'தொறு' என்ற சொல் வழங்குகிறது. பண்டைய இலக்கிய மரபையொட்டி இக்கல்வெட்டுகளில்

'தொறு கொண்ட ஞான்று பட்டான்' என்றும் 'தொறு மீட்டு பட்டான்' என்றும் அதே சொற்றொடர்கள் வழங்கப்பட்டுள்ளது ஒரு சிறப்பாகும்.

(உ-ம்). கோவிசைய நரசிங்கபருமற்கு இரண்டா
வது வாணகோஒ அதிரைசர் சேவகர் மீ கொன்
றை நாட்டு மேல் வேளூர் ஆளும் பனையமா
ரியார் இவ்வூர்த் தொறுக் கொண்ட ஞான்று
பட்டா(ர்). (1971/54)

(உ-ம்). "தொக்கைபாடி இரையமன் மகன் கத்தையன்
தொக்கைபாடி தொறு மீட்டுப் பட்டான்" (1971/79)

ஆநிரை கொள்ளும் போதும், மீட்கும் போதும் நடக்கும் போரை 'பூசல்' என்று தொல்காப்பியம் குறிப்பது குறிக்கத் தக்கது. இதே சொல் பல நடுகற்களில் காணப்படுவதும் ஒரு சிறப்பாகும்.

"பாசாற்றெருமைத் தொறு எயினாட்டார் கொள்
ளப் பாசாற்றூர் பூசலிடப் பூசல் சென்று" (1971/56)

இவை தவிர, மன்னன் பிறநாட்டைக் கொள்ள போர் தொடுத்தல் 'வஞ்சித்திணை' என்றும் போர் தொடுத்த மன்னனிடமிருந்து தன் நாட்டைக் காத்தல் 'காஞ்சித் திணை' என்றும், எயில் காத்தலை 'நொச்சித் திணை' என்றும் எயில் கொள்ளலை 'உழிஞை திணை' என்றும் இலக்கணங்கள் பகுத்துக் கூறுகின்றன. இவை அனைத்திற்கும் சான்று கூறக் கூடிய நடுகற்கள் கிடைத்துள்ளன.

வஞ்சித் திணை (உ-ம்).

"மாந்தபருமற்குப் பதினொன்றாவது கொங்கணி
அரைசரு படை ஓடு சிரிகங்கரைசரு
சங்கம(ங்)கலத் தெறிந்த ஞான்று சிரிகங்கரைசரு
சேவகரு விசைய கொற்றடையா(ரு)
எறிந்து பட்ட கல்" (1971/124)

காஞ்சித் திணை (உ-ம்).

"கோவிசைய மசீந்திரபருமற்கு முப்பத்தொன்பதாவது வாணகோ அரைசரு மருமக்கள் பொற்றொக்கையார் சருக்கிருந்த ஊர் போந்தை மேற்சக்கரவரு படை வந்த ஞான்று ணாக்கையார் இள மகன் வத்தாவன் மகன் ணந்(தி எறி)ந்து பட்டான் கல்" (1971/35)

உழிஞை திணை (உ-ம்).

"ஸ்ரீ சிவமார வர்மர்க்கு யாண்டு மூன்றாவது
கந்தவாண்ணதியரையர் புறமலை நாடாள்
வானபெருமன் கோடல் லெறிந்த ஞான்று
சேதவப் பனையனார் படைத்தன்கொட்டி உண்ணி
பட்டான்"

தொல்காப்பியம் போரில் இறந்துப்பட்டவீரனுக்கு கல் நடுவதை 'வெட்சித் திணை'யின் இறுதியில் குறிக்கிறது. ஆனால் புறப்பொருள் வெண்பா மாலை இதைப் 'பொதுவியல் படலத்தில்' குறிக்கிறது.

**வீரம் விளைத்தோர்க்குக் கல்**

போரில் வீர மரணம் எய்திய பெருமகனுக்கு அவன் பீடும், பெயரும் பொறித்துக் கல் நடுவது மரபு. போரில் இறந்து பட்டவர்களுக்கு மட்டுமின்றி, பிற துறைகளிலும் வீரம் விளைத்து இறந்துபட்ட வீரர்களுக்கும் நடுகல் எடுப்பது மரபு. கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்து இறந்தான். அவனுக்கு நடுகல் எடுக்கப்பட்டது என்று புறநானூறு குறிக்கிறது. கோப்பெருஞ்சோழனின் நடுகல் கண்டு 'பொத்தியார்' பாடியதாக அப்பாட்டு அமைந்துள்ளது. மிகச் சிறந்தவன் அம்மன்னன் என்றும் கருதாது கூற்றம் அவனுடைய உயிரைக் கவ்விச் சென்றது. அவன் சிறந்த புகழ் நிறுத்தி நடுகல் ஆயினன் ஆதலின் புலவீர் அக்கூற்றத்தை இகழ்வோம் வாரீர்.'

"வைகம் வம்மோ வாய்மொழிப் புலவீர்
நனந்தலை யுலக மரந்தை தூங்கக்
கெடுவி னல்லிசை சூடி
நடுக லாயினன் புரவல னெனவே"

என்று குறிக்கிறது. மேலும் இறந்துபட்ட அரசர்கள், வேளிர்கள் உடல்களையும் தீயிலிட்டு எரித்தனர் என்று அறிகிறோம். அவர்களுக்கும் நடுகல் எடுக்கப்பட்டது என்று புறநானூறு புகலுகிறது. அதியமான் நெடுமான் அஞ்சி போரில் வேல் பாய்ந்து மாய்ந்தான்.

"அஞ்சொல் நுண் தேர்ச்சி புலவர் நாவில்
சென்று வீழ்ந்தன்று அவன்
அருநிறத் தியங்கிய வேலே"

அவன் உடலைத் தீயிலிட்டனர். அதை ஔவை

"எறிபுனக் குறவன் குறைய லன்ன
கரிபுற விறகி னீம வொள்ளழற்
குறுகினுங் குறுகுக குறுகாது சென்று
விசும்புற நீளினு நீள்க பசுங்கதிர்த்
திங்க ளன்ன வெண்குடை
ஒண்ஞாயி றன்னோன் புகழ்மா யலவே." (புறம். 231)

என்று பாடுவான்.

அவனுக்கு நடுகல் எடுக்கப்பட்டது என்று ஔவையின் பின்வரும் பாட்டால் அறியலாம்.

"இல்லா கியரோ காலை மாலை
அல்லா கியர்யான் வாழு நாளே
நடுகற் பீலி சூட்டி நார் அரி
சிறுகலத் துகப்பவுங் கொள்வன் கொல்லோ
கோடுயர் பிறங்குமலை கெழீஇய
நாடுடன் கொடுப்பவுங் கொள்ளா தோனே" (புறம். 243)

புறப்பொருள் வெண்பா மாலை 'பாண்பாட்டு' என்னும் ஒரு துறையைக் குறிக்கிறது. அதில் இறந்துபட்ட வீரர்களை பாணர் எரித்து விடுவது குறிக்கப்படுகிறது. அவ்வாறு எரிக்கப்பட்டவர்களுக்கும் நடுகற்கள் எடுக்கப்பட்டிருக்க வேண்டும். இறந்துபட்ட கணவனோடு தீப்பாய்ந்து உயிரை மாய்த்துக் கொண்ட வீரமகளிர்க்கும் கற்கள் நடுவது மரபு. இவற்றை 'மாசதிக்கல்' என்று கூறுவர். பத்தினித் தெய்வம் கண்ணகிக்கு எடுக்கப்பட்ட கோயில் இது போன்ற ஒன்று என்று சிலர் குறிப்பர். தாழியில் புதைத்த

வீரர்களுக்கு நடுகற்கள் உண்டா என்பது தெளிவாகத் தெரியவில்லை. சோழ மன்னன் திருமாவளவன் இறந்தான். அவன் உடல் தாழியில் கவிழ்க்கப்பட்டது.

". . . . . . . . நெடுமா வளவன்
தேவ ருலக மெய்தின னாதலின்
அன்னோற் கவிக்கும் கண்ணகன் றாழி
வனைதல் வேட்டனையாயின் எனையதூஉம்" (புறம். 228)

இப்பெரு மன்னனுக்கு நடுகல் நடப்பட்டிருக்கக் கூடும்.

## நடும் முறை

தொல்காப்பியம், புறம்பொருள் வெண்பா மாலை ஆகிய நூல்களிலிருந்து நடுகற்கள் எவ்வாறு நடப்பட்டன என்று தெளிவாக அறிய முடிகிறது. தொல்காப்பியம் இதை ஆறு பகுதியாகக் குறிக்கிறது.

"காட்சி கால் கோள் நீர்ப்படை நடுகல்
சீர்த்தகு மரபில் பெரும்படை வாழ்த்தலென்று
இரு மூன்று மரபிற் கல்லொடு புணர" (தொல். 60)

இதைப் புறப்பொருள் வெண்பா மாலை (1). கற்காண்டல் (2). கற்கோ நிலை (3). கல் நீர்ப்படுத்தல் (4). கல் நடுதல் (5). கல் முறை பழிச்சல் (6) இல் கொண்டு புகுதல் என்று குறிக்கிறது.

கல் உள்ள இடம் சென்று கல்லைத் தேர்ந்தெடுப்பதும் (காண்டலும்) கொண்டு வந்து செய்வன செய்து நாட்டி, பின் கடவுளாகக் காண்பதும் காட்சியாகும். கல் தேர்ந்தெடுக்கச் செல்லும் போது மறவர் அனைவரும் சேர்ந்து செல்வர். அவருடன் பாணரும், கூத்தரும் செல்வர் என்று அறிகிறோம். உரிய கல்லைத் தேர்ந்தெடுத்து அவ்விடத்தில் மாலையும், மலரும், மதுவும் அளித்து கல்லைக் கொள்வது வழக்கம். அப்பொழுது புகை எழுப்பிட, மணி இசைத்து இறந்துபட்ட வீரனுக்குத் தக்க கல் இதுவென்று பறை ஒலிப்பக் கல் கொள்வர். அவ்வாறு கொண்ட கல்லை வண்டியில் ஏற்றி அனைவரும் சூழ எடுத்து வந்து அதைக் கழுவி, வாசனை உடைய மஞ்சன நீராட்டி, நீர்வாவியில் இடுவது வழக்கம். இதை நீர்ப்படை செய்தல் என்பர். காட்டில்

பலகாலமாக வெய்யிலின் வெம்மை அக்கல்லின் மீது படிந்திருந்ததால் அவ்வெம்மை குளிர இவ்வாறு நீரிலிடுவது மரபு என

காடு கனலக் கனலோன் சினஞ்சொரியக்
கூடிய வெம்மை குளிர்கொள்ளப் பாடி
நயத்தக மண்ணி நறுவிரைகொண் டாட்டிக்
கயத்தகத் துய்த்திட்டார் கல்

என்னும் புறப்பொருள் வெண்பா மாலை பாட்டால் அறியலாம். பின்னர் மலரும், மதுவும், செம்மறி ஆட்டுப் பலியும் கொடுத்து, மயிற்பீலி சூட்டி, படலை சாற்றி, பல்லியம் இயம்ப விழாவாக நடுவது நடுதலாகும். அவன் பெயர் குறித்து கவின்பெற நாட்டுதல் என இதைக் குறிப்பர். இந்நிலையில்தான் இறந்துபட்ட வீரனின் உருவமும், பெயரும் அக்கல்லில் பொறிக்கப்படுவது ஆகும். இதை,

மாலை துயல மணியெறிந்து மட்டுகுத்துப்
பீலி யணிந்து பெயர்பொறித்து வேலமருள்
ஆண்டக நின்ற வமர்வெய்யோற் காகென்று
காண்டக நாட்டினார் கல்

என்று புறப்பொருள் வெண்பா மாலை குறிக்கிறது. இவ்வாறு நடப்பட்ட கல்லுக்கு கோயில் எடுத்தலை 'பெரும்படை' என்று தொல்காப்பியம் கூறுகிறது. அதை நாட்டப்படும் கல்லுக்கு கோயிலும் மதிலும், வாயிலும். ஏனை சிறப்புகளும் படைத்தல் பெரும்படை என்று நச்சினார்க்கினியர் குறிக்கிறார். பின்னர் அக்கல்லின் முன் வாள் ஊன்றி, மணி இசைப்ப அக்கல்லை வாழ்த்தல் என்று நடும் முறை ஆறு அங்கம் உடைத்தாம்.

### பெரும்படை

இங்கு ஒன்றை சிறப்பாக குறித்தல் வேண்டும். இதுகாறும் கிடைத்துள்ள பெரும்பாலான நடுகற்கள் ஒற்றைக் கற்களாக காணப்படுகின்றன. ஆயினும் சில இடங்களில் இவற்றின் அமைப்பு குறிப்பிடத் தக்க வகையில் உள்ளது. மூன்று பக்கங்களில் பலகைக் கற்கள் நிறுத்தப்பட்டு அடிக்கல் ஒன்றும் தலைக்கல் ஒன்றும் உடையதாக இவை காணப்படுகின்றன. இவை கல்லால் எடுக்கப்பட்ட சிறிய 'திண்ணை' (தெற்றி) போலும் கல்லறை போலும் காணப்படுகின்றன. இவற்றில்

பின்புறத்தே உள்ள கல்லில் வீரனின் உருவமும் பெயரும் பொறிக்கப்பட்டு விளங்குகின்றன. இதை 'கல் திட்டை', 'கல்தெற்றி', 'கற்பதுக்கை', அல்லது 'கல்லறை' எனக் கூறலாம். தொல்காப்பியம் பெரும்படை என குறிப்பதும் புறப்பொருள் வெண்பா மாலை 'இல்கொண்டு புகுதல்' என்று குறிப்பதும் இதையே இறந்துபட்ட வீரனை இறந்தோனாகக் கருதாமல் அக்குடியின் வாழ்வை உய்விக்க வைக்கும் கடவுளாகவே கொண்டு வழிபட்டனர் என்று இதனால் அறியலாம். ஆதலின் இந்நடுகல் கோயிலே ஆகும். இக்காலத்து மக்கள் இவற்றை கோயில் என்றே அழைப்பது பண்டைய மரபை ஒட்டியதே ஆகும்.

## வழிபாடு

இன்றும் இந்நடுகற்களை கடவுளாக மக்கள் வழிபட்டு வருகின்றனர் என்று முன்னர் கூறினோம். ஆண்டு தோறும் இவற்றிற்கு சிறந்த வழிபாடுகள், விழாக்கள் நடக்கின்றன. இவற்றின் முன்னர் இரும்பாலான சூலமும், கத்தியும் இன்றும் நட்டு வைக்கப்பட்டிருக்கின்றன. அவற்றிற்கும் எண்ணெய் பூசி, மாலை அணிவித்து வழிபடுகின்றனர். இவ்வாறு படைக்கலன்களையும் நட்டு அவற்றையும் வழிபடுவது பண்டைய மரபு என்று புறப்பொருள் வெண்பா மாலையிலிருந்து அறியலாம்.

வாட்புகா வூட்டி வடிமணி நின்றியம்பக்
கோட்புலி யன்ன குருசில் கல்

என்று செய்யுள் குறிக்கிறது.

சிறந்த ஆட்டை பலிகொடுப்பதும், மது அளிப்பதும் விழாக் காலங்களில் நடைபெறுகின்றன.

நாரறி சிறுகலத்து உகுப்பவும்
கொள்வன் கொள்ளோ

என்ற புறப்பாட்டு இம்மரபைக் குறிக்கிறது. நடுகற்களில் பெரும்பாலாக வீரன் காலருகே காணப்படும் 'கெண்டி' மதுக்குடத்தின் சாயலாக தோன்றுகிறது. இந்நடுகற்களின் முன் உயர்ந்த சுடுமண் குதிரைகள் ஆண்டு தோறும் வைக்கப்படுகின்றன. வீரனுக்கு எடுக்கப்பட்ட கல் ஆதலின் குதிரையின் உருவையும் செய்து வைத்து வணங்குவர் போலும்! இது தவிர சிறு அளவில் ஆண், பெண் குழந்தைகள் உருவங்களும்

வைக்கப்பட்டுள்ளன. நோய்வாய்ப்பட்டோர் சுகம் வேண்டி விரதம் முடித்ததின் நினைவாக இவற்றை அளிப்பது மரபு என்பர். இந்நடுகற்களை வழிபடுவதால் நாடு வளம்பெறும் என்றும் குடிமக்கள் சிறப்பெய்துவர் என்றும் மக்கள் கருதுகின்றனர். மழை பெய்யாது நாடு வரண்டபோது இந்நடுகற்களுக்கு சிறந்த வழிபாடு இன்றும் நடத்துகின்றனர். இதனால் மழை பெய்து வளம் சிறக்கும் என்று கருதுகின்றனர். இதுவும் ஒரு பண்டைய மரபே. சிலப்பதிகாரத்தில் குன்றில் வந்து நின்ற பத்தினிக்கு கோயில் எடுத்து வழிபாடு செய்மின், வளம் சிறக்கும் என்று குன்றவர்.

'தெய்வம் கொள்ளுமின் சிறுகுடியீரே!
தொண்டகம் தொடுமின் சிறுபறை தொடுமின்
கோடுவாய் வைம்மின் கொடுமணி இயக்குமின்
குறிஞ்சி பாடுமின் நறும்புகை எடுமின்
பூப்பலி செய்ம்மின் காப்புக் கடை நிறுமின்
பரவலும் பரவுமின் விரவுமலர் தூவுமின்
ஒரு முலை இழந்த நங்கைக்கு
பெருமலை துஞ்சாது வளம் கரக்கெனவே!'

எனக் கூறுவது இம்மரபை குறிக்கிறது.

### கிடைத்துள்ள நடுகற்கள்

இதுகாறும் கிடைத்துள்ள நடுகற்களில் பெரும்பாலானவை வட ஆற்காடு மாவட்டம், செங்கம் பகுதியில் கிடைத்துள்ளன. தென்னாற்காடு. செங்கல்பட்டு, தர்மபுரி, சேலம், கோவை ஆகிய மாவட்டங்களிலும் சில நடுகற்கள் கிடைத்துள்ளன. மதுரை, திருநெல்வேலி மாவட்டங்களிலும் ஒன்றிரண்டு நடுகற்கள் கிடைத்துள்ளன. சோழ நாட்டில் நடுகற்கள் அதிகம் கிடைக்கவில்லை.

பல்லவர், பாண்டியர், கங்கர், சோழர், நுளம்பர், போசளர், விஜயநகர மன்னர் ஆகிய அரசர் காலத்து நடுகற்கள் கிடைத்துள்ளன. கி.பி. 5-6-ம் நூற்றாண்டிலிருந்து 16-ம் நூற்றாண்டு வரையில் நடப்பட்டுள்ளன. நடுகற்கள் கிடைத்துள்ளன. சங்க காலத்தைச் சேர்ந்த நடுகற்கள் ஏதும் இதுகாறும் கிடைத்தில.

இவற்றில் பெரும்பாலான நடுகற்கள் பல்லவர் காலத்தைச் சார்ந்தவை. அனேகமாக பல்லவர் குலத்து எல்லா அரசர் காலத்து

நடுகற்களும் கிடைத்துள்ளன. இவற்றில் பெரும்பாலானவை வட்டெழுத்தில் பொறிக்கப்பட்டுள்ளன. சில தமிழ் எழுத்திலும் குறிக்கப்பட்டுள்ளன. ஒன்றிரண்டு கன்னட நடுகற்களும் கிடைத்துள்ளன. வடமொழியில் எழுதப்பட்ட நடுகற்கள் ஏதும் இதுகாறும் கிடைக்கவில்லை. சோழர் காலக் கல்வெட்டு எதுவும் வட்டெழுத்தில் கிடைக்கவில்லை. அண்மையில் கண்டுபிடிக்கப்பட்ட பல நடுகற்கள் வட்டெழுத்தின் வளர்ச்சியை நன்கு சித்தரிக்கின்றன. பல நடுகற்களில் அழகிய தமிழ் மிளிர்கிறது. சிறப்பாக பல்லவ மன்னன் கம்பவர்மனின் காலத்து நடுகற்கள் நல்ல தமிழில் உரைநடைக் காப்பியமாக காணப்படுகின்றன. நாட்டுப் பிரிவும், ஆட்சியும் ஒரு சில நடுகற்களில் தெளிவாகக் குறிக்கப்படுகின்றன. ஒரு சில நடுகற்கள் அன்று நடந்த போரை காட்சி போல் நம் கண் முன் கொணர்ந்து நிறுத்துகின்றன. எயில் நாட்டார் பாசாற்றூர் எருமைகளைக் கொண்டனர். பாசாற்றூரார் எருமைகளை மீட்கப் போரிட்டனர். காரிப்பெருமான் என்னும் வீரன் எருமை கொண்டோரைத் துரத்திச் சென்று அங்கு ஒரு குன்றின் அருகில் வீரப்போர் தொடுத்தான். அவன் உறையில் இருந்த அம்புகள் தீரும் வரையில் போரிட்டான். அம்புகள் தீர்ந்துவிட்டன வீரன் பின் நோக்கவில்லை. வலிவற்ற தன் நிலையையும் கருதவில்லை. அரையில் இருந்த வாளை உருவினான். கூற்றுக்கும் கூற்று போல் பகைவர் வெள்ளத்தில் பாய்ந்தான். விழுப்புண்பட்டு வீரனின் உடல் வீழ்ந்தது. அழியாப்புகழ் பெற்றான். அப்பெரும் வீரன். அதைச் சித்தரிக்கிறது. சின்னையன் பேட்டை என்னுமிடத்தில் கிடைத்த ஒரு நடுகல்.

> “ஸ்ரீ கோவிசைய கம்ப பருமற்கு யாண்டு
> மூன்றாவது வயிரமேக வாணகோவரையர் சேவகன்
> மீகுன்றை ஞாட்டு மலையனூருடைய செம்பத்
> தொண்டன் மகன் காரிப்பெருமான் பாசாற்
> றெருமைத் தொறு எயினாட்டார் கொள்ளப்
> பாசாற்றூர் பூசலிடப் பூசல் சென்று கோவூர்
> நாட்டுச் சிற்றிடையாற்று முதுகொன்றை
> மூக்கின் மீமலை அயங்கயக்கரையிற் சென்று
> முட்டி மலையனூருடைய செம்பர் மகன்னான
> காரிப்பெருமான்னன் உரையிலம்புமாள எவ்விப்
> பத்திர முருவி எதிரே சென்று பட்டான்”

கோவை மாவட்டம் பழமங்கலம் என்னும் ஊரில் கிடைத்த நடுகல் அழகிய வெண்பாவாக அமைந்துள்ளது.

“வாய்த்த புகழ் மங்கலத்து

வந்தெதிர்த்த மாற்றலரை

சாய்த்த மகன் வென்ற

சயம் பெறுக நீக்குவனம்

கற் பொறிக்கப் பட்டான்

கரடிகுல சொக்கனேந்தலே

உலகிற் காண்”

நன்றி மறவா நாய்க்கு எடுக்கப்பட்ட நடுகல் ஒன்றும் உண்டு.

“கோவிசைய மயிந்திர பருமற்கு முப்பத்து

நான்காவது வாணகோ அரைசரு மருமக்கள்

பொற்றெக்கைஆர் இளமகன் கருந்தேவக்கத்தி

தன்னெருமைப் புறத்தே வாடி பட்டான் கல்

கோவிவன் என்னுந்நாய் இரு கள்ளனைக் கடித்துக்

காத்திருந்தவாறு.

பல வீரர்கள் தங்கள் உயிருள்ள மட்டும் ஊரைக் காத்து நிற்போம் என்று வீரச் சபதம் புரிந்து மாண்டிருக்கின்றனர் என்பதற்கு எடுத்துக்காட்டாக மூன்று நடுகற்கள் அண்மையில் கிடைத்துள்ளன.

“தென்வேணாட்டு மேலை கருங்காலிப்பாடி சிலகில்

காவேட்டுவையன் அடியேன் பன்றயன்

புளியனேன் ஊரழிய போதேன் என்று பட்டான்”

போரின்போது ஆநிரைகளைக் கொள்வது போல கள்ளர்களும் அவ்வப்போது ஆநிகைளைத் திருடிச் செல்வது குறிஞ்சி நாட்டு வழக்கம் என இளம்பூரணர் குறித்துள்ளது முன்னமே கண்டோம். அதற்கு எடுத்துக் காட்டாக ஒரு நடுகல் இங்குக் கிடைத்துள்ளது சிறப்பாகும்.

“மதுரை கொண்ட கோப்பரகேசரிவர்மர்க்கு

யாண்டு இருபத்தி மூன்றாவது பல்குன்றக்

கோட்டத்து மேல் வேணாட்டு தாழையூர்
இயைம்பர் தன் எருமைத்தொறு கள்ளர்
கொள்ள போகாமை பட்டார் தந்தையும்
மகனும்”

வீரனொருவன் தன் விரதம் முடித்ததன் நினைவாக கொற்றவைக்குத் தன் தலையையே அறுத்து பலியாக கொடுத்தமைக்கு (இவை நவகண்டம் கொடுத்தல் என்பர்) ஊரார் நிலம் கொடுத்ததையும் ஒரு நடுகல் குறிக்கிறது.

ஸ்ரீ கம்ப பருமற்கு யாண்டு இருபதாவது
பட்டை பொத்தனுக்கு ஒக்கொண்ட நாகன்
ஒக்கதிந்தன் பட்டைபொத்தன் மேதவம்
புரிந்ததென்று படாரிக்கு நவக் கண்டங்குடுத்து
குன்றகத்தலை அறுத்துப் பிடலிகை மேல்
வைத்தானுக்கு திருவான்முர் ஊரார் வைத்த
பரிசாவது எமூர்ப் பறைகொட்டக் கல்
மெடு செய்தாராவிக்குக் குடுப்பாரானார்
பொத்தனங் கிழவர்களும் தொறுப்பட்டி நிலம்
குடுத்தார்கள் இது அன்றென்றார் கங்கையிடக்
குமரிஇடை எழுநூற்றுக் காதமும் செய்தான்
செய்த பாவத்துப் படுவார் அன்றென்றார்
அன்றாள் கோவுக்கு காற்ப்பொன் றண்டப்
படுவார்.

அரசன் தானே படை செலுத்தி ஊரழித்ததையும் ஒரு நடுகல் குறிக்கிறது.

(உ.ம்) :

“கம்பப் பெருமாள் ஆனையாடின
கொந்தளத்து இவ்வூர் அழிந்த நாள்
பட்டான் இவ்வூர் கோதுபத்தி மாத்ரகன்”

என்று திண்டிவனம் அருகிலுள்ள ஒரு நடுகல் குறிக்கிறது.

மற்றொரு நடுகல் மிகச் சிறப்பு வாய்ந்ததாகக் காணப்படுகிறது. வாண அரசனோடு உறவினன் போல் நடித்து அவன் நாட்டை நுளம்பன் வஞ்சித்துக் கொண்டான். வாண அரசன் போரில் இறந்தான். அவன் தேவி கருவுற்றிருந்தாள். சங்கர குட்டியார் என்பவன் மகவு பிறக்கும் வகையில் அத்தேவியைக் காத்து நின்றான். பின்னர் படையெடுத்து அந்நுளம்பனைத் தோற்கடித்தான். அப்போரில் இறந்த வீரனுக்கு ஒரு நடுகல் எடுக்கப்பட்டுள்ளது.

> "ஸ்வஸ்திஸ்ரீ அரிமிதைய மாவலி வாணராயர்
> கங்கநாடும் புறமலைநாடும் கோயினூர்நாடும்
> கோவூர்நாடும் தாயனூர்நாடும் பற்றநாடும் ம . .
> அவர்க்குத் தாநாகிப் பிள்ளைய் கொண் டுள்
> புகுந்து வஞ்சித்து நாடு கொண்டானுளம்பன்
> அவர் போரிற் றுஞ்சின பின்னைத் தேவிமார்
> கருப்பிணியருளராக அவகளைக் காத்திருந்
> தாண்பிள்ளைப் பெறுவதுந் தகடூர் புகுந்து
> நுளம்பன் பலத்தோடே துணிந்து நாடுபாவி
> நார் சங்கரகுட்டியார் . அவரோடுடன்
> புகுந்து தகடூரில் பட்டார் நாகந்தை
> சிறு குட்டியார் கல் நாடு"

இது போன்று தமிழக வரலாற்றுக்கும் இலக்கியத்துக்கும் சிறந்த செய்திகளை எடுத்தளிக்கும் நடுகற்கள் இன்னும் பல கிடைக்கும் என்பதில் ஐயமில்லை.



